## BIBLIOGRAPHICAL DATA

| | | | |
|---|---|---|---|
| 1. | Title | — | Muslimkalum Thamizakamum |
| 2. | Author | — | Dr. S.M. Kamal<br>21, Easa Pallivasal Street<br>Ramanathapuram - 623 501 |
| 3. | Language | — | Tamil |
| 4. | Edition | — | First (December–1990) |
| 5. | Copyright | — | Author |
| 6. | Size of the Book | — | 21.5 cm × 14.00 cm |
| 7. | Type used for Text | — | 10pt. Tamil Roman |
| 8. | Pages | — | 255 + 8 |
| 9. | No. of Copies | — | 1200 |
| 10. | Printers | — | Parani Achchaham<br>78–A. Dhanappa Mudali Str<br>Madurai - 625 001 |
| 11. | Publishers | — | Islamic Studies and<br>Cultural Centre<br>"Seethakathi Chambers"<br>688, Anna Salai, Madras-6 |
| 12. | Price | — | Rs. 30–00 |
| 13. | Subject | — | A Study on the Origin of Muslims in Tamilnadu based Literary and Historical Eviden |


---




1990 டிசம்பர் மாதம் கீழக்கரையில் நடைபெற்ற ஐந்தாம் உ-
இஸ்லாமியத் தமிழ் இலக்கிய மாநாட்டில் வெளியிடப்பட்ட

நூல் கிடைக்குமிடம் :

இஸ்லாமிய பண்பாட்டு ஆய்வுமையம்,
சீதக்காதி மணிமாடம்,
688, அண்ணா சாலை, சென்னை – 600 006.

ஷர்மிளா பப்ளிஷர்ஸ்,
21, ஈசாபள்ளிவாசல் தெரு,
இராமநாதபுரம் – 623 501.

## அருள்வாயே :

ஆதியே எவரும் அளவிடாப் பொருளே !
அணுவினும் அகப்புறம் நிறைந்த
சோதியே ! தெளிந்த சுருதி தந்தவனே !
துதிக்கலாம் மதிக்கலாம் துணையே !
தீதையே அகற்றும் இறைவனே ! உனது
திருமுகம்மது நபிபொருட் டால்
பேதையேன் துணிந்த கருத்தை நீ முடிக்கும்
பெருவரம் புரிந்தருள் வாயே !

— வரகவி வண்ணக்களஞ்சியப்புலவர்.

சீதக்காதி மணிமாடம்,
688, அண்ணாசாலை
சென்னை – 6

## அணிந்துரை

இந்திய சமுதாயத்தின் ஒரு பிரிவினரான தமிழக முஸ்லீம்களது வரலாறு தொன்மையானது. ஏழாம் நூற்றாண்டின் முடிவில் அரபு நாட்டு இஸ்லாமிய வணிகர்கள் நமது கீழைக்கடற்கரையின் பல பகுதிகளில் கரையிறங்கியதிலிருந்து இந்த வரலாறு தொடக்கம் பெறுகிறது. அவர்களுடன் சமயச் சான்றோர்களும் இறைநேசர்களும் இந்த வரலாற்றின் நாயகர்களாக விளங்குகின்றனர். அவர்களது தன்னலமற்ற தொண்டும் தூய வாழ்வும் அமைதியான ஆரவார மற்ற நடைமுறைகளும் தமிழ் மண்ணில் இஸ்லாம் தழைத்து வளர்வதற்கு உதவியதுடன், தமிழகத்தின் அரசியல், கலை, பண்பாடு, இலக்கியம் ஆகிய புலங்கள் புதிய ஒளியும் உயர்வும் பெறுவதற்கு உறுதுணையாக இருந்து வந்துள்ளன.

இந்தப் புதிய தாக்கத்தை வரலாற்று அடிப்படையில் முறையாக ஆய்வு செய்தல் மிகவும் பயன் உள்ள ஒரு பணியாகும். இந்த நோக்கில் எங்களது அறக்கட்டளையின் இஸ்லாமிய கலை, பண்பாட்டு, ஆய்வுமையம் 1988ஆம் ஆண்டின் சிறந்த தமிழ் நூல்களுக்கான போட்டிக்கு ''முஸ்லீம்களும் தமிழகமும்'' என்ற தலைப்புப் பொருளினை அறிவித்தது. எழுத்தாளர் பலர் ஆர்வத்துடன் தங்கள் ஆய்வுரைகளை அனுப்பி இந்தப் போட்டியில் கலந்து கொண்டனர். அவற்றுள் சிறந்த ஆக்கமாக இராமநாதபுரம் டாக்டர் எஸ். எம். கமால் அவர்களது தொகுப்புரை தேர்வு செய்யப்பட்டது. இமாம் சதக்கத்துல்லா அப்பா அவர்களது நினைவுப்பரிசான ரூபாய் பத்தாயிரம் கொண்ட பொற்கிழியும், பாராட்டு இதழும் அன்னாருக்கு 21–6–1989ஆம் தேதி அன்று சென்னையில் நடைபெற்ற விழாவில் வழங்கப்பட்டது.

இயல்பாகவே தமிழ் இலக்கியத்திலும் வரலாற்றிலும் மிகுந்த ஈடுபாடு கொண்டுள்ளவர் டாக்டர் கமால் என அறிகிறேன். ஏராளமான இலக்கியச் சான்றுகளையும், ஆவணங்களையும், கல்வெட்டு, செப்பேடு ஆகிய வரலாற்றுத் தடயங்களையும் சேகரித்து இந்தத் 'தொகுப்புரையை சிறப்பாக வரைந்துள்ளார்கள். அவருக்கு எனது பாராட்டுக்களை தெரிவித்துக் கொள்வதுடன் அவரது ஆய்வுப்பணிகள் தொடர்ந்து சமுதாயத்திற்கு பயன்பட விழைந்து வாழ்த்துகிறேன்.

மேலும், தமிழக இஸ்லாமியர்களைப் பற்றி இது வரை வெளி வந்துள்ள வரலாற்று நூல்களில் இருந்து இந்த நூல், முழுமையும் வேறுபாடான ஆய்வு நோக்கில் வரையப்பட்டிருப்பதை இந்த நூலினைப்படிக்கும் யாரும் எளிதில் உணர முடியும். இந்த நூல் நமது தமிழக வரலாற்றின் ஒரு பகுதியாக அமைந்துள்ளதால் இதனை அனைத்து நிலைகளில் உள்ள மக்களும் படித்து பயன் பெறுவதற்கு ஏற்றவாறு, இந்தத் தொகுப்புரையை எங்கள் அறக்கட்டளையினர் நூல் உருவில் இப்பொழுது அச்சிட்டு வெளியிடுகின்றனர். இதனால் தமிழக வரலாறு செழுமையும் சிறப்பும் எய்தும் என்பதில் ஐயமில்லை.

கே. டி. எம். எஸ். அப்துல்காதிர்
ஜமாலி தைக்காவாப்பா
தலைவர், சீதக்காதி அறக்கட்டளை,

சென்னை – 6
20–12–1990

# நன்றியுரை

கடந்து சென்ற காலத்தின் சுவடுகள் வரலாறாக விளங்குகின்றன. பழைமையிலிருந்து புதுமை, நேற்றிலிருந்து இன்று—இவைகளுக்கு இடைப்பட்ட எல்லைகள் வரலாற்று நிகழ்வுகளாகும். மக்களின் வாழ்வும், தாழ்வும் இந்த நிகழ்வுகளில் மறைந்து இருக்கின்றன. ஒரு காலத்தில் உழைப்பும் முனைப்பும் மிக்க பிரிவினராக உயர்ந்து நின்றவர்கள் உறுதிப்பாடு இன்மையும் ஒழுக்கமின்மையும் காரணமாக, வலிவும் பொலிவும் இழந்து, நலிவும் அழிவும் பெறுகின்றனர். தமிழகத்து முஸ்லீம்களும் இந்த வளைந்த வரலாற்றுக்கு விலக்கானவர்கள் அல்லர்.

ஆயிரத்து இருநூறு ஆண்டுகளுக்கு முன்பு, கீழைக்கடற்கரை எங்கும் அஞ்சு வண்ணங்களில் தனித்து வாழத் தொடங்கிய முஸ்லீம்கள், தமிழகத்தைச் சாடிய இந்து, சமண, பௌத்த, சைவ, வைணவ சமய தாக்கங்களுக்கு இடையில் இறைவழியாகிய ஏகத்துவத்தை ஏந்திய குடிகளாக வாழ்ந்தனர். வணிக வளர்ச்சி, சமயப்பணி, அரசியல் ஊக்குவிப்பு ஆகிய காரணங்களினால் தனிமையை ஒழித்து தமிழ்ச்சமுதாயத்தில் ஒன்றி உறவாடி நாளடைவில் தமிழராகவே மாறினர். தமிழ்ச்சமுதாயத்தின் செம்மைக்கும் செழுமைக்கும் ஏற்ற தொண்டுகளையும் செய்து வந்துள்ளனர்.

குறிப்பாக, தங்களது தாய் மொழியான தமிழ் வளர்ச்சிக்கு அவர்கள் செய்துள்ள பணி எல்லோராலும், எல்லாக்காலத்தும் நினைவுகூரத் தக்கதாக உள்ளது. பதினேழாவது பதினெட்டாவது நூற்றாண்டுகளில் வேற்று மொழியினரது ஆட்சியின் விளைவுகளாக தமிழும் தமிழ்ப் புலவர்களும் புறக்கணிக்கப்பட்டனர். அவர்களது தமிழ்ப் பணியை அப்பொழுது ஊக்குவித்து பல தமிழ் இலக்கியங்கள்

படைப்பதற்கு உறுதுணையாக இருந்த கொடை நாயகர்கள் தமிழ் முஸ்லீம்களே. தமிழை காத்த புரவலராக மட்டும் அல்லாமல் பல தமிழ் இலக்கியங்களின் படைப்பாளிகள் என்ற பெருமையும் தமிழ் இஸ்லாமியருக்கு உண்டு.

இத்தகைய அருமையும் பெருமையும் கொண்ட தமிழ் முஸ்லீம்களில் வரலாற்று ஆய்வினைத் தூண்டும் தொடக்க முயற்சியாக சீதக்காதி அறக்கட்டளையினரது 1988ல் போட்டியின் பொருளாக அமைந்து பரிசுபெற்ற எனது இந்த தொகுப்புரையை அச்சேற்றி, கீழக்கரையில் நடைபெறும் ஐந்தாம் உலக இஸ்லாமியத் தமிழ் இலக்கிய மாநாட்டு விழாவில் வெளியிடுவது பெரு மகிழ்ச்சிக்குரியது.

இந்த பயனுள்ள பெரும் தொண்டில் பேரார்வம் கொண்டுள்ள சீதக்காதி அறக்கட்டளையின் தலைவரும் எனது விழுமிய அன்புக்குரியோருமாகிய அல்ஹாஜ் கே. டி. எம். எஸ். அப்துல்காதிர் (ஜமாலி) தைக்காவாப்பா அவர்களுக்கும், சென்னை இஸ்லாமிய பண்பாட்டு ஆய்வு மையத்தின் செயலர் பேரன்புமிக்க அல்ஹாஜ் கேப்டன் என். ஏ. அமீர் அலி எம். ஏ. அவர்களுக்கும் எனது நெஞ்சார்ந்த நன்றியினைப் புலப்படுத்துகிறேன்.

எஸ். எம். கமால்
நூலாசிரியர்

## பொருளடக்கம்

# 1

## கிழக்கும் மேற்கும்

ஈராயிரத்து ஐநூறு ஆண்டுகட்கு முன்னரே, தமிழகத்திற்கும் கிரேக்க. உரோம, பாபிலோனிய, பாரசீக, அரபு நாடுகளுக்குமிடையே நல்ல வணிகத் தொடர்புகள் இருந்ததை வரலாற்றுக் குறிப்புகள் விளம்புகின்றன. நமது நாட்டின் தள்ளா விளையுளை பண்டமாற்றிலே பெற்றுக் கொண்ட மேனாட்டு வணிகர்கள், அவைகளுக்குப் பகரமாக, தங்கள் நாட்டின் புதுமைப் பொருட்களை தமிழ்நாட்டிற்கு வழங்கினர். தமிழகத்தின் அகிலும் துகிலும், பருத்தியணியும் பவளமணியும், முத்தும் மிளகும், மேனாடுகளில் மிகுதியாகப் பயன்படுத்தப்பட்டன.[1] கிரேக்க நாட்டு மதுரசங்கள், கண்ணாடிக் கலசங்கள், ஈயம் தகரம், ஆகியவைகளும் தங்க, வெள்ளிக் காசுகளும் தமிழர்களைக் கவர்ந்தன. எகிப்து நாட்டுக் கடற்பட்டினமான அலக்ஸாந்திரியாவை மையமாகக் கொண்டு அரபு நாடுகள் வழியாக, கீழ்நாடுகளுக்கும், பாலத்தினம் வழியாக கிரேக்க நாட்டிற்கும், வணிகச் சாத்து வழிகள் சென்றன.[2]

இவை வரலாற்றின் கால வரம்பிற்குட்படாத காலந்தொட்டு இருந்து வந்ததை விவிலியம் (பைபிள்) சான்று பகர்கின்றது. கி.மு. 1000–ல் ஸிரியா நாட்டில் மதி மன்னனாக விளங்கிய ஸாலமன், ஜெருஸலம் நகரில் அமைத்து இருந்த பிரம்மாண்டமான தேவாலயத்தைக் காண்பதற்குச் சென்ற ஏமன் நாட்டு ஷேபா அரசியார், அந்த மன்னனுக்கு தென்னாட்டில் சிறந்த

---

1. William Robestson - An Historical Disquisition (1791) page 8

2. Stabout J.W.H.-Islam (1881) page 2

வாசனைப் பொருட்களையும் அகிலையும் துகிலையும் பொன்னு டன் அன்பளிப்பாக அளித்ததை "புதிய ஏற்பாடு" விவரித்துள் ளது.[3] கிரேக்க நூலாசிரியரான ஹெக்டரியஸ் மிலேட்டஸ் கி.மு. 549–486 இந்திய நாட்டின் பல பட்டணங்களை சிறப்பாக மேற்கு கிழக்கு கடல் துறைகளை குறிப்பிட்டு இருப்பதால், அந் தக் கால கட்டத்தில் இந்தியாவிற்கும் கிரேக்கத்திற்கும், தமிழ் நாட்டிற்கும் இடையே நிகழ்ந்த விரிவான வணிகத்தின் தன்மை யை ஊகிக்க உதவுகிறது. இதனைப் போன்று, ரோம் உள்ளிட்ட மத்யதரைக்கடல் நாடுகளுடன் தமிழகம் தொடர்பு கொண்டு இருந்ததை, கரூர், கோவை, மதுரை, அழகன்குளம் ஆகிய ஊர் அகழ்வு களில் கிடைத்த ரோம நாணயங்கள் உறுதிப்படுத்து கின்றன. அங்ஙனமே, நமது நாட்டுப் பொருட்களும் மேற்கு நாடுகளின் ஆடம்பர வாழ்க்கைக்குப் பயன்பட்டதை கீழேகண்ட வரலாற்று நிகழ்ச்சிகள் விளக்குகின்றன.

கி.மு. 210–ல் ரோமாபுரியில் இயற்கை எய்திய சைலா என்ற மன்னனது சிதையிலும் நீரோ மன்னனது (கி.மு, 68–5..) உறவினரான பாப்போயியின் ஈமச்சடங்கின் பொழுதும், கீழ் நாடுகளில் இருந்து ரோமாபுரிக்கு வரவழைக்கப்பட்ட வாசனைப் பொருட்கள் அனைத்தும் கொட்டப்பட்டு எரியூட்டப்பட்டது.[4] இந்த வாசனைப் பொருட்களுக்கு அடுத்தபடியாக ரோமநாட் டில், தமிழ்நாட்டு முத்துக்கள் இடம் பிடித்திருந்தன. பேரரசர் ஜூலியஸ் ஸீஸர் (கி.மு. 39–14) தனது நண்பரான புருட்டஸின் தாயாருக்கு, 48, 457 பவுன் பெறுமானமுள்ள நன்முத்துக்களை அன்பளிப்பாக வழங்கிய செய்தியும் உள்ளது.[5] பேரழகி கிளியோ பாத்ராவின் காதணிகளில் 1,51,457 பவுன் பெறுமான முத்துக் கள் இடம் பெற்றிருந்தனவாம்.[6] இந்த முத்துக்கள் அன்றைய தமிழகத்தில் சிறப்புற்றிருந்த பட்டினங்களில் இருந்து பெறப் பட்டவை என்பது தெளிவு. அப்பொழுது சேரநாட்டில், கொடு

---

3. New Testament -II chromics 7:9:1
4. William Robertson - An Historical Disqusition (Edinburgh) (1791) p. 5.
5. Ibid page 58
6. Ibid page 69

மணம், பந்தர் என்ற கடற்றுறைகள் முத்துக்களுக்கு பெயர் பெற்றிருந்தமை,

"கொடுமனம் பட்ட வினைமா னெடுங்கலம்
பந்தர் பயந்த பலர் புகழ் முத்தம்" ... ... ... என்ற

அரசில் கிழாரது எட்டாம் பத்து, இயம்புகிறது. இன்னும். அதே நூலின் ஏழாம்பத்திலும், ஒன்பதாம் பத்திலும் இந்த ஊர்களைப் பற்றிய புகழுரைகள் பொதிந்து உள்ளன.[7]

கி.மு. ஐந்தாவது நூற்றாண்டில், பாபிலோனில் பாரசிக, மன்னன் தாரீயஸது ஆட்சியின் பொழுது, வாணிகச் சாத்தாகச் சென்ற தமிழர்கள் அங்கேயே குடியிருப்பு அமைத்து நிலை பெற்று இருந்தனர். எகிப்து நாட்டில், அம்மோன்ரா என்ற இடத்தில் உள்ள ஆலயத்தில், தமது கடற்பயணத்தை வெற்றிகரமாக முடித்த தென்னாட்டார் ஒருவர் மேற்கொண்ட வழிபாட்டு நிகழ்ச்சி அந்த நாட்டுக் கல்வெட்டு ஒன்றில் காணப்படுகிறது. அலெக்ஸாந்திரியாவிலும் தென்னாட்டார் குடியிருப்பு இருந்ததை அறிய இந்த கல்வெட்டு உதவுகிறது.[8]

கிறிஸ்து சகாப்தம் துவங்கிய பின்னரும், கிழக்கு மேற்கு தொடர்புகள் நீடித்தன. அலக்ஸாந்திரியாவிலும், ஏடனிலும் செல்வம் கொழித்தது. அங்கே அராபியக் குடியேற்றங்கள் பல எழுந்தன. தமிழகத்தில் இருந்து ரோமப் பேரரசு கிளாடியஸ் சீஸர் அவைக்கு அரசியல் தூதுக்குழு வந்ததை கி.பி. 41ல் பிளினி குறித்துள்ளார்.[9]

பருவக்காற்றுகளின் தன்மைகளை விரிவாக ஆராய்ந்து அறிந்த எகிப்திய மாலுமியான உறிப்பாலஸ் கி.பி. 45–ல் அரபிய கடல் பயணத்தில் புதிய திருப்பத்தை ஏற்படுத்தினார்.[10] அது வரை, ரோம, அராபியக் கப்பல்கள், செங்கடல், பாரசீகக்

7. பதிற்றுப்பத்து : பதிப்பாசிரியர் ஔவை சு. துரைச்சாமி (1963)
8. Oakshott. W.F. - Commerce and Society (1936) P. 19.
9. Nilakanta Sastri. K. A. - Foreign Notices of South India (Madras 1972) P.50 .-
10. Ibid P.58

குடாக்கடல், அராபியக் கடல் வழியாக கடற்கரைப் பகுதிகளில் கரையை ஒட்டியவாறு இந்தியாவுக்கு சென்றன. இவ்விதம் செல்வதில் கப்பல்கள் பாறைகளில் மோதுதல், கடற் கொள்ளைக்கு இலக்காகுதல் போன்ற ஆபத்துக்கள் மலிந்து இருந்தன. ஆனால் உறிப்பாலஸின் புதிய வழி, ஆழ்கடலைப் பருவ காலங்களில் நேராகக் கடந்து செல்லு: முறையாகும். அராபிய தீபகற்ப முனையான ஸியாகரஸ் என்ற இடத்திலிருந்து தமிழகத்தின் மேற்குக் கரையை அடைய அப்பொழுது நாற்பது நாட்களே ஆயின. பயணம் செய்ய வேண்டிய மொத்த தூரம் 1355 மைல்களாகக் குறைந்தது. காலமும் தொலைவும் குறைந்த துடன், வாணிபக் குழுவினருக்கு கரையோரப் பகுதிகளில் உள்ள கடற் கொள்ளையரினின்றும் விடுதலையும் கிட்டியது. முன்னர், இந்தியாவின் மேற்கு கரைக்கு ஆண்டு ஒன்றிற்கு, அரேபியாவில் இருந்து இருபது கப்பல்களே சென்று வந்தன. ஆனால் இப் பொழுது அராபிய தீபகற்பத்திலிருந்து நாளொன்றிற்கு ஒரு கப்பல் வீதம் கிழக்கு நோக்கி பயணம் தொடங்கியது.[11] ஜூன் ஜூலை மாதம் மேற்கு நோக்கித் தொடங்கும் கடற்பயணம், தென்கிழக்கு பருவக் காற்று எழுகின்ற டிசம்பர் – ஜனவரி மாதங்களில், முடிவு பெற்று கப்பல்கள் தாயகம் திரும்பின.

கி.பி. முதல் நூற்றாண்டில், கீழ்த்திசையில் பயணம் செய்த "பெரிபுலூஸ்" நூலின் ஆசிரியரது குறிப்புகளும், கி பி. இரண் டாம் நூற்றாண்டில் பயணம் செய்த தாலமியின் பயணக் குறிப் புகளும் இந்த விவரங்களைத் தருகின்றன. உரோமர்களது தமிழ் நாட்டுடனான வாணிபம், அப்பொழுது மிகவும் விறுவிறுப்பாக நடைபெற்றது. அவர்கள் இங்கு கொணர்ந்து விற்ற சாமான் களைவிட, இங்கிருந்து வாங்கிச் சென்ற சாமான்களின் பெறு மானம், பண்டமாற்று மதிப்பில் கூடுதலாக இருந்தது. அதற்கு ஈடாக, அவர்கள் நாட்டுப் பொற்காசுகளைக் கொடுத்தனர். இங்ஙனம் கீழ்நாட்டுப் புதுமைப் பொருட்களை மிகுதியாக வாங்கிக் கொண்டு சென்றதன் காரணமாக ரோமநாட்டு கரு வூலம் வற்றி வறண்டுவிட்டதாக பெட்ரோனியஸ் என்ற ரோம நாட்டு ஆசிரியர் குறித்துள்ளார்.[12] தமிழகத்தை உரோமர்கள்

11. Oakeshott W.F. — Commerce and Society (1936) P.32.
12. Pilini — Book = Chap 26.

தாமிரிகா என வழங்கினர். தமிழகத்தின் முக்கிய கடற்துறைகளான முசிறி, குமரி, கொற்கை, தொண்டி, புகார், புதுகை, ஆகிய பட்டினங்களையும் கோவை, உறையூர், மதுரை, அழகன்குளம் ஆகிய பட்டணங்களையும் அவர் நன்கு அறிந்து இருந்தனர். இந்தப் பெருநகர்களில் அவர்களது குடியிருப்புகளும் நிறுவப்பட்டு இருந்தன. இந்த நகரங்களில் கண்டெடுக்கப்பட்ட ஏராளமான உரோம நாணயங்களும், அண்மையில் அரிக்காமேட்டில் அகழ்ந்து எடுக்கப்பட்ட அரிய பண்டங்களும் இதனை உறுதிப்படுத்துகின்றன.

நமது பழந்தமிழ் நூற்களான சங்க இலக்கியங்கள் உரோமர்களை யவனர், எனக்குறிப்பிடுகின்றன. அவர்களது நாடும் யவனம் என்ற பொதுச்சொல்லினால் வழங்கப்பட்டது. ஐம்பெருங்காப்பியங்களில் ஒன்றான சிலப்பதிகாரம்–வாழ்த்துக்காதை ''வன்சொல் யவனர் வளநாடு'' எனக் குறிப்பிடுகிறது.[13] தமிழ், வழங்கும் பதினேழு நிலங்களில், யவனமும் ஒன்று என அன்று கருதப்பட்டு வந்தது. விஷ்ணுபுராணம், மாளவி காக்கினி மித்திரம் ஆகிய ஸமஸ்கிருத இலக்கியங்கள், யவனம், இந்திய நாட்டின் மேற்கு எல்லையில் அமர்ந்திருந்ததாகவும், யவனர்கள் அந்தப் பிராந்தியத்தில் இருந்த பூர்வ குடிகள் எனவும் குறிப்பிட்டுள்ளன. ஏனைய வடமொழி இலக்கியங்களும், யவனர்களை, ஆரியரல்லாத இனத்தினராக, இந்து சமயத்தினின்றும் மாறுபட்டவர்களாக, அந்நியர்களாக, பாரசீகர்களாக, சகரர்களாக, கிரேக்கர்களாக, வர்ணித்துள்ளன. உறிப்ரூ சொல்லான ''யோனா'' ''யோன்'' ஆகியவைகளின் ஒன்றின் அடிப்படையில் இருந்து யவன என்ற சொல் தமிழ் வழக்கிற்கு வந்துள்ளது.[14] மேலும், பிராகிருதச் சொல்லான லவன (உப்பு என்ற பொருள்) என்ற மூலத்தினின்றும் மாறுபட்டு இந்தச் சொல் உருவாகி இருக்கலாம் என்பது சில மொழி வல்லுநர் முடிவு.

கி.மு.250–240ஐச் சேர்ந்த அசோகனது புத்த போதனைகளைத் தாங்கிய தூண்களில் ''யோனா'' என்ற பாலிமொழிச்

13. சிலப்பதிகாரம் – வாழ்த்துக்காதை – பாடல் எண் 26
14. Hunter. W.W. – History of Orissa P. 72.)

சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. ஆனால், மாவீரன் அலக்ஸாந்தரது சிந்து நதி படையெடுப்பிற்குப் பிறகு, இந்தச் சொல் இந்திய வரலாற்று நூல்களில் கிரேக்கர்களை மட்டும் குறிப்துடன், அவர்களது குடியிருப்புகள் யமுனை ஆற்றிற்கு மேற்கேயும் குஜராத் மாநிலத்திற்கு தெற்கேயும் நிலைத்து இருந்தன என்பதையும் சுட்டுகின்றன. குஜராத் மாநிலத்தில் உள்ள "ஜுனாகாத்" என வழங்கப்படும் கடற்கரைப் பட்டினம், யவனர்களது இருப்பிடம் என்ற பொருளில் வழங்கப்பட்ட "யோனாகர்" என்ற சொல்லின் திரிபு என்பது இங்கு குறிப்பிடத்தக்கது. காரணம் அசோகனது ஆட்சியில் துஸஸ்பா என்ற யவனர். இந்தப் பகுதியில் ஆளுநராகப் பணியாற்றி இருந்ததும் யவனர்கள் இங்கு மிகுந்த எண்ணிக்கையில் வாழ்ந்து வந்ததும் ஆகும். இங்ஙனம், இந்திய நாட்டில நிலைத்து விட்ட யவனர்கள் "நம் யவன" என அப்பொழுது வழங்கப்பட்டதாக கர்லா கல்வெட்டுக்கள் குறிக்கின்றன.[15]

இதே காலத்திய கடைச்சங்க இலக்கியங்களில், தமிழகம் போன்ற யவனர்களைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. "வலிபுணர் யாக்கை வன்கண் யவனர்" என முல்லைப்பாட்டும்,[16] அவர்களது "நன்கலம் தந்த தண்கமழ் தேரலை" புறப்பாட்டும்,[17] அவர்களது "பாவை விளக்கு"[18] "ஓதிம விளக்கு"[19] "மகர வீனை" ஆகியவைகளை பெருங்கதையும், "பொன்னொடு வந்து கறியொடு பெயர்ந்த" அவர்களது "வினைமான் நன்கலத்தை" அகப்பாட்டு (எண். 140)ம் குறிப்பிடுகின்றன மேலும், அவர்கள் "கடிமதில் வாயிற் காவலிற் சிறந்து

---

15. Gopalachari. K – Early History of Andhra Country (1941 P. 25–29
16. "மெய்ப்பை புக்க வெருஉவரும் – தோற்றத்து வலிபுண யாக்கை வன்கண் யவனர்" .. ... முல்லைப்பாட்டு 60, 61.
17. "இரவர்க்கு அருங்கலம் அருகாது ஈயா யவனர் நன்கல தந்த தண்கமழ் தேறல் ... .. ... புறநானூறு 56 : 1
18. "யவனர் இயற்றிய வினைமான் பாவை கையேந்தி ஐயக நிறைநெய் சொரிந்து ... ... நெடுநல்வாடை 102, 103
19. வேள்வித் துணைத் தளச்சி யவனர் ஓதிம விளக்கின் உய மிசை கொண்ட ... ... பெரும்பானாற்றுப்படை 16
... .... ... ... ... ... யவகை கைவினை

''இருந்ததை'' சிலப்பதிகாரமும் ''தண்டமிழ் வினைஞர் தம்முடன் கூடிப்பணிபுரிந்த ''யவனத் தச்சரை'' ''மணிமேகலையும்' சுட்டுகின்றன. கி.பி. மூன்றாம் நூற்றாண்டின் துவக்கத்தில் அலக்ஸாந்திரியா பட்டினத்தில் நிகழ்ந்த படுகொலையொன்றின் காரணமாக, அங்கு கிழக்கு மேற்கு நாடுகளின் வணிகமக்கள் நடமாட்டம் குறைந்தது. அத்துடன், ஆடம்பரத்தின் அதீத எல்லையில் இயங்கிக் கொண்டிருந்த ரோமப் பேரரசு கி.பி. 217ல் வீழ்ச்சி பெறத் தொடங்கியது. அதுவரை கிரேக்க, ரோமர்களுக்கு உதவியாளர்களாக இருந்த அரபிகள், கீழை நாட்டு வணிகத்தை தாங்களே மேற்கொண்டு சிறப்பாக நடத்தி வந்தனர். காரணம் அரபிகளுக்கு வாசனைப் பொருட்களின் மீது இயல்பான ஈடுபாடு இருந்து வந்தது ஆகும். ஆதலால் அவர்களது வாணிகத்தில், புனுகு போன்ற இந்திய நாட்டு வாசனைப் பொருட்களும் இந்திய நாட்டு எஃகினால் தயாரிக்கப்பட்ட போர்வாள்களும் பெரும் இடம் பெற்று இருந்தன.[20] ஆதலால் இஸ்லாம் தோன்றிய ஏழாவது நூற்றாண்டு முதல் யவனர், என்ற தமிழ்ச் சொல் தமிழக இஸ்லாமியரைக் குறிக்க தமிழில் எழுந்த ஒரே சொல் என உறுதியாகிவிட்டது.

இயற்கையாக அமைந்துள்ள உடல்வாகு, ஊட்டம் தரும் உணவுப் பழக்கங்கள், உறுதியான உள்ளம், ஆகிய நல்லியல்புகள் காரணமாக அரபிகள், கடல் தொழிலைச் சிறப்பாக மேற்கொண்டு இருந்தனர். அவர்கள் தொகுத்து வைத்திருந்த புவியியல் செய்திகளும், பல்வேறு நாடுகளின் கடல் வரைபடங்களும், தொன்மையான நூற்களும், அவர்களது திரைகடல் ஓடும் முறைமைக்கு தக்க வழிகாட்டிகளாக அமைந்தன. குறிப்பாக,இந்தியாவிற்கு கடல் வழி காணப்புறப்பட்டு, அமெரிக்க நிலப்பரப்பை கண்டுபிடித்த போர்ச்சுக்கல் மாலுமியான கொலம்பஸின் ஆர்வத்திற்கு, முன்னோடியாக இருந்தவை, அரபிகளது புவி இயல் கொள்கைகளும், கடல் வழி சம்பந்தமான வரை படங்களுமாகும். அதே ஆர்வத்தினால் உந்தப்பட்டு, ஆப்பிரிக்க பெருங்கண்டத்தை சுற்றி கி.பி. 1498-ல் இந்தியாவின் மேற்குக் கரையை அடைந்த போர்ச்சுக்கீஸிய நாட்டு வாஸ்கோட காமாவிற்கு கடல்வழி காட்டி வந்தவர் அஹமது இப்னுமஜீது என்ற அரபியர்

---

[20] Joseph Hell – The Arab Civilization – (Lahore) Page. 78–79

இவர் கிழக்கு ஆப்பிரிக்காவின் மலிந்தி நாட்டவர்.[21] அவரிடம் கடல்வழி, காட்டும் வரை படங்களும், கடற் பயணத்திற்கான சிறந்த கருவிகளும் இருந்தன.

ஆதலால், பெருங்கடல்களைக் கடந்து செல்லும் பெற்றி யில் தங்களுக்கு ஒப்பாரும் மிக்காருமின்றி பதினைந்தாம் நூற் றாண்டு வரை சிறப்பாக விளங்கியவர்கள் இந்த யவனர்களே (அரபிகள்)' அவர்கள் இயக்கிய மரக்கலங்கள் உறுதியானவை யாகவும் காற்று, நீர், வெய்யில், மழை ஆகியவைகளைச் சமா ளித்துச் செல்லும் திறனுடையனவாகவும் இருந்தன. பெரும் பாலும் சிறு மரக்கலங்கள், ஒரே மரத்தினின்றும் குடைந்து உருவாக்கப்பட்டன. பெரிய கலங்கள் பல்வேறு மரத்துணுக்கு களைக் கொண்டு இணைத்து அமைக்கப்பட்டன. இரும்பு ஆணி களைக் கொண்டு அவைகளை இணைப்பதற்குப் பதிலாக, மரப் பலகைகளை ஒன்றோடொன்று இணைத்து, அவை செயற்கை யாக இணைக்கப்பட்டவையென்று சொல்ல முடியாதபடி ஒரே சீராகச் செய்யப்பட்டன. தேவையான பகுதிகளில் துளைகளை அமைத்து மரத்திலான ஆணிகளைப் பொருத்தி உறுதிபட அழுத் தினர். கீழ்க்கண்ட வகையினதாக[22] இத்தகைய மரக்கலங்கள் அவர்களால் பயன்படுத்தப்பட்டன.

| | அரபிப் பெயர் | தமிழில் | விபரம் |
|---|---|---|---|
| 1. | அல்மாதியா | அலைமோதி | ஒரேமரத்தாலானது |
| 2. | அத்தலாயா | வத்தை | கரையோர உபயோகத்திற்கு |
| 3. | பர்காட்டிம் | படகு | கரையோர உபயோகத்திற்கு |
| 4. | கெப்பல் | கப்பல் | நெடுங்கடல் பயணத்திற்கு |
| 5. | சத்ரி | கப்பல் | சாதாரண கடல்பயணத்திற்கு |
| 6. | சம்பானே | சாம்பான் | சிறுபடகு |
| 7. | யூஸ்கா | — | நெடுங்கடல் பயணத்திற்கு |
| 8. | ஜாவா | — | நெடுங்கடல் பயணத்திற்கு |
| 9. | கியாட்டு | பரிச்சல் | நாழிபோன்ற வடிவமைப்பு |

21. பிறையன்பன்–கலையும் பண்பாடும் (இலங்கை–1963) பக்கம்: 

22. Appadorai - Dr.A. — Economic Bisditions of TamilNad (From 1000 AD to 1600 AD) vol. II p.8.

| | | | |
|---|---|---|---|
| 10. | பாராவ் | — | ஒரே மரத்தாலானது |
| 11. | பணி | கட்டைமரம் | மீன்பிடித்தலுக்கு |
| 12. | கங்யல் | வள்ளம் | மீன்பிடித்தலுக்கு |
| 13. | டெராதா | ... | கரையோர உபயோகம் |
| 14. | ஜம்புகுவா | ... | பெருங்கடல் நாவாய் |

இவைகளைத் தவிர, சீனநாட்டினரது மரக்கல வகைகளான ஜங்க், ஜாவ், காகாம் போன்ற பெருங்கப்பல்களும் அவர்களால் பயன்படுத்தப்பட்டன. அவையனைத்தும் ஆழ்கடலில், பெருங்காற்றினூடே செல்லத்தக்கன. ஆயிரத்திற்கு அதிகமான மாலுமிகளும், பயணிகளும் பயணம் செய்யும் வகையில் இவைகள் அமைக்கப்பட்டன. இந்தக் கலங்களின் உதவியால் அரபிய நாட்டின் தென்முனை ஸியாகரஸிலிருந்து நாற்பது நாட்களில் மலையாளக் கரையில் உள்ள கொல்லத்தையும், அங்கிருந்து ஏழு நாட்களில் தமிழகத்தின் கிழக்குக் கரைப் பட்டினங்களையும் வந்தடையலாம். மேலும், முப்பது நாட்களில் கடாரத்தையும் (மலேஷியா) அங்கிருந்து நாற்பது நாட்களில் சீனத்தின் கான்டன் நகரையும் அடைய முடியும். கி.பி. நான்காம் நூற்றாண்டிலேயே அராபியர்களது குடியிருப்பு கான்டனில் இருந்தது.[23] அராபிய நூலாசிரியர் ஸுலைமான், எட்டாம் நூற்றாண்டில் கான்டன் நகருக்குச் சென்று, அங்கு ஏராளமாக குடியேறி வாழ்ந்த இஸ்லாமியர் வாழ்க்கை நிலை, அவர்கள் நிறைவேற்றிய ஐந்து நேரத் தொழுகை, வெள்ளிக்கிழமை சிறப்புத்தொழுகை – ஆகியவைகள் பற்றி குறிப்பிட்டுள்ளார். மேலும் அங்கு சட்டத்தை அமுலாக்கவும், நிர்வாகத்தை இயக்கவும், இஸ்லாமியர்களை சீனர்கள் நியமனம் செய்து இருந்ததையும் அவர் குறித்துள்ளார்.

இங்ஙனம், உலகின் கீழ்க்கோடியான சீனத்துடன் தொடர்பு கொண்டிருந்த அராபியர், தென்னகத்திலிருந்து சீனம் செல்லும் வழியில் கடாரம், ஜாவா, சுமத்திரா, அன்னாம் ஆகிய வலிமை மிக்க நாடுகளின் கடல் பட்டினங்களைத் தொட்டுச்

---

23. Nilakanta Sastri - K.A. – Foreign Notices of South India (Madras 1952) p. 20.

சென்றனர். அத்துடன் அந்தந்த நாடுகளின் செல்வங்களான வெள்ளி, ஈயம், தகரம், பட்டு, மட்பாண்டங்கள், நறுமணப் பொருட்கள், ஆனைத்தந்தம், காண்டாமிருக கொம்பு, ஆமை ஓடுகள், பவளம், அம்பர், இரும்புத் தாதுக்கள், பாறைப் படிவங்கள், கைத்தறி ஆடைகள், கருங்காலி, சூடன் மரங்கள் ஆகியவைகளையும் எடுத்துச்சென்றனர்.[24] இந்தக் கொள்முதல் பொருட்களுக்கு, பண்டமாற்றில் தங்களது சொந்தநாட்டு நெசவுத்துணிகளையும், அணிகலன்களையும், உலோகத்தகட்டினாலான கண்ணாடிகள், சிரியநாட்டு கண்ணாடிப் பொருட்கள், கிண்ணங்கள், குப்பிகள் ஆகியவைகளை பெற்றுக் கொண்டனர். மேலும் இந்தப் பொருட்களைப் பெற்றுக்கொண்டு அவைகளுக்கு பகரமாக பொன் வழங்கவும் கான்டன் நகரில் கி.பி. 971–ல் கப்பல் நிறுவனம் ஒன்று அமைக்கப்பட்டது இருந்தது.[25]

நாளடைவில் இத்தகைய கப்பல் பயணங்கள் மிகுந்த தன் காரணமாக, பதினொன்றாம் நூற்றாண்டிலேயே கீழை நாடுகள் அனைத்திலும், இந்திய நாட்டின் பல மாநிலத்தவர்களும் குறிப்பாக குஜராத்தியர், தமிழர்கள் – மலேயா நாட்டினரும் குடியேறியதுடன், சீனத்துடனும், நெருக்கமாகவணிகத்தொடர்புகளை கொண்டிருந்தனர். எனினும் பன்னாட்டைச் சேர்ந்த இந்த வாணிகச் சாத்துக்களில், பலதரப்பட்ட பொருட்களின் செறிவிலும், சிறப்பிலும் அராபியர்களை மிஞ்சக்கூடியவர்கள் எவரும் இல்லை என பன்னிரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த சௌ–கு–பெ என்ற சீன நாட்டு ஆசிரியர் தமது பயணக் குறிப்புகளில் வரைந்துள்ளார்.[26] அந்தப் பண்டங்கள் அனைத்தும் சிறு மரங்கலங்களில் மூலம் கொல்லம் துறைமுகத்திற்கு கொண்டு வரப்பட்டு அங்கு இருந்து பெருங்கப்பல்களில் நிறைத்து அனுப்பப்பட்டன. ஆதலால், அன்றைய வாணிப உலகின் சிறந்த மையமாக கொல்லம் கருதப்பட்டது.

எழுவானின் இளங்கதிர்களை எட்டிப் பிடிக்கும் வகையில் கிழக்கு கோடியின் பசிபிக் பெருங்கடலின் எல்லையைத் தொட்டு

---

24. Nilakanta Sastri K. A. - History of Srivijaya (1936) p.37.
25. Appadorai. Dr. A. Economic Conditions of TamilNadu (1940)
26. Hirth and Rodwill – Chan Ju – Kua p.24.

விட்ட அரபியரது அந்தக் கலங்கள், இந்திய சமுத்திரத்தின் மேற்கு கரையில் அமைந்திருந்த ஆப்பிரிக்க நாட்டின் கிழக்குப் பகுதிகளுக்கும் சென்றன. ஒன்பது பத்தாவது நூற்றாண்டுகளில் பாக்தாதில் இயங்கி வந்த இஸ்லாமியப் பேரரசின் வளர்ச்சியும் விரிவும் இத்தகைய உலகம் அளாவிய வணிக எழுச்சிக்கு உறுதி மிக்க பீடமாக விளங்கியது ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் சிறப்பாக விளங்கிய அலக்ஸாந்திரியாவைப் போன்று உலக வாணிபத்தின் உயிர்நாடியாக அப்பொழுது பாக்தாது விளங்கியது. அராபிய வர்த்தகர்கள் கிழக்கையும், மேற்கையும் அல்லாமல் மத்திய கடல் பகுதியையும் தங்கள் வணிக வழியில் இணைத்தனர். ஸ்பெயின், சிசிலி, இத்தாலி ஆகிய நாடுகளுக்கும் வணிக வழிகள் சென்றன.[27] இதன்காரணமாக ஐரோப்பிய நாடுகள், சீன, இந்திய, ஆப்பிரிக்க, நாடுகளது கிராம்பு, ஏலக்காய், அம்பர், கஸ்தூரி, கருவாய்ப்பட்டை, மிளகு, கற்பூரம், முத்து, மஸ்லின், பட்டு, சந்தனகட்டை ஆகிய பொருட்களைப் பெற்றதுடன் இஸ்லாமிய நாடுகளது ஆரஞ்சு, லெமன், அப்ரிகாட், ஆகிய பழங்களும், பினாஷ், ஆட்டிகோஸ், போன்ற காய்கறிகள், இரத்தினக் கற்கள், இசைக் கருவிகள், காகிதம் பட்டாடைகள், ஆகிய பொருட்களையும் பெற்றன. அண்மைக் காலங்களில் ருஷ்யாவின் பல பகுதிகளிலும், பின்லாந்து, ஸ்வீடன், நார்வே, பிரிட்டன் ஆகிய நாடுகளிலும் அகழ்ந்து எடுக்கப்பட்ட ஏராளமான இஸ்லாமியர்களது நாணயங்கள் ஏழாம் நூற்றாண்டு முதல் பதினேழாவது நூற்றாண்டு வரையிலான அராபியரது சிறப்புமிக்க வாணிபச் செழுமையைப் பறை சாற்றுவதாக உள்ளன.[27] மேலும், ஐரோப்பிய நாடுகளில் அராபியரது வணிக மரபுகளும், வாணிபச் சொற்களும் அந்தந்த நாடுகளின் சமூக, மொழி இயல்களில் ஊடுருவி, இன்றுவரை அவை நிலைத்து நிற்கின்றன. குறிப்பாக காசோலையைக் குறிக்கின்ற அராபியச் சொல்லான ''ஷீக்'' ஆங்கிலத்தில் ''செக்'' என மாற்றம் பெற்றுள்ளது. இதனைப் போன்று ஜெர்மனியிலும், ஹாலந்திலும், காசோலையைக் குறிக்க அரபு

---

27. பிறையன்பன் – கலையும் பண்பாடும் (இலங்கை 1962) பக் : 87 –88

28. பிறையன்பன் – கலையும் பண்பாடும் (1962) பக் : 93

சொற்கள் பயன்படுத்தப்படுகிறது. ''வெச்சல்'' (ஜெர்மன்) ''விஸ்ஸன்'' (ஹாலந்து) என்ற சொற்கள், அரபுச் சொற்களின் ஆக்கம் தான். இவை தவிர ஆங்கிலத்தில் வழங்கப்படுகின்ற வாணிபம் சம்பந்தப்பட்ட சொற்களான, ஸ்டர்லிங், டிராபிக், கேபின், ஆவரேஜ், பார்ஜஸ்மன்சூன், பார்க், ஷெல்லாப் ஆகிய சொற்கள் அனைத்தும் அராபியச் சொற்களின் மறு உருக்கள்.

மற்றும், வணிக ஒப்பந்தம், வணிகப் பிரதிநிதிகளை அயல் நாடுகளில் நியமனம் செய்தல், கடல் எல்லை நிர்ணயம், பண்ட மாற்று முறைகள், துறைமுக நடைமுறைகள் ஆகிய துறைகளில் இன்று முன்னேறியுள்ள ஐரோப்பிய வர்த்தக சமூகத்திற்கு முன் னோடியாக, இன்றைக்கு ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே தக்க வரம்புகளையும் வழிகாட்டு நெறிகளையும் உருவாக்கியவர்கள் அராபிய இஸ்லாமியர்கள். அலைகடல் ஆழியைத் துரும்பாக மதித்து அவனியை அளவிடப் புறப்பட்ட அராபியர்களது மன உறுதியையும் ஆர்வத்தையும் யாரும் வியந்து பாராட்டாமல் இருக்க முடியாது. பிற்காலங்களில் புவியியல், வானியல், வணிக இயல், கணித இயல், வேதியியல், மருத்துவம் ஆகிய துறைகளில் உலக மக்களுக்கு முன்னோடியாக விளங்கி, விஞ்ஞான கண்டு பிடிப்பு பலவற்றிற்கு வழிகோலியவர்களும் அவர்களே யாவர். தென்னகத்தில் சோழ பாண்டியர்கள் முடியாட்சி மறைநது விஜயநகர பேரரசு தொடங்கிய காலம் வரை வாணிபத்தில் சிறப்புற்றிருந்த அமைதியான அராபியர்கள், போர்ச்சுக்கீசிய பரங்கிகளின் அக்கிரமமான, மனிதாபிமானமற்ற மிருக பலத் திற்கு எதிரே சக்தியற்றவர்களாக கடல்வழியை அந்தக் கொள் ளையரிடம் விட்டுவிட்டு ஆங்காங்கே உள்நாட்டு வாணிபத்தில் ஈடுபட்டனர்.

இங்ஙனம், கிழக்கையும் மேற்கையும், தங்களது கடல் வாணிபத்தால் இணைத்து இந்தியா, இலங்கை, ஸ்ரீவிஜயா, அன்னாம், சீனம், ஆகிய கீழைநாடுகளில், புதிய நாகரீகத்தை தையும் புதிய ஆன்மீக ஒளியையும் புகுத்தியவர்கள் அந்த அராபிய முஸ்லீம்கள் தான். ஆதலால், தமிழகத்தின் சிறப்பான வரலாற்றுக்காலப் பகுதியில் அரபியரது பங்கும் பிரதானமாக இடம் பெற்று இருந்தது வியப்புக்கு உரியது அன்று. என்றா லும், வாணிப நோக்குடன் தமிழகத்துக்கு வந்து சென்ற பல

வேறு, இன, நாட்டு மக்களைப் போல் அல்லாமல் குறிப்பாக-கிரேக்கர், உரோமர், சீனர், பாரசீகத்தினரைப் போல் அல்லாமல், கொண்டு வந்த பொருட்களை விற்றுவிட்டு, தங்கள் தேவைக்கு ஏற்ற இந்த நாட்டுப் பொருட்களை வாங்கிச் செல்வதுடன் அமையாமல் — இந்த நாட்டின் அரசியல், சமுதாய வாழ்வில் ஊடுருவி, தமிழ்நாட்டின், இணையற்ற பாரம்பரியத்திற்குரிய தமிழ் மக்களாகவே மாறியவர்கள், அரபியர்களைத் தவிர வேறு எந்த மேற்கு நாட்டினரும் அல்ல என்பதே வரலாறு வழங்கும் தெளிவான செய்தியாகும்.

ஆதலால், அந்த அரபியர்களை—தமிழக இஸ்லாமியராகிய அவர்களது தொன்மையை, தமிழக இலக்கியங்கள், தமிழக கல்வெட்டுக்கள், செப்பேடுகள் வெளிநாட்டுப் பயணிகளது பயணக் குறிப்புகள் ஆகிய வரலாற்றுத் தடயங்களின் வாயிலாகத் தொகுத்து அறிதல் அவசியமாகிறது.

# ௨

## தமிழகத்தில் அரபிகள்

ஏழாம் நூற்றாண்டின் தொடக்கம், மனித சமுதாயத்தின் வளர்ச்சியிலே ஒரு புதிய திருப்பத்தை தோற்றுவித்தது. தெளிந்த, உயர்ந்த, தெய்வீக சிந்தனைகளின் கருவூலமாக, இஸ்லாம் என்ற மாபெரும் மறைவழியை, மனித இனம், மணி விளக்காகக் கண்டது. அன்பையும் அறத்தையும் ஆதாரங்களாகக் கொண்ட திருமறையையும் அண்ணல் நபிகள் அவர்களது ஆன்மநேயக் கருத்துக்களையும், அவர்களது ஆரவாரமற்ற நடைமுறைகளையும், தங்களது வாழ்க்கை நெறிகளாகப் பற்றிப்பிடித்த அரபிகள், கீழ்நாடுகளுக்கு வளமையாகச் செல்லும் வணிகர்களாக மட்டுமல்லாமல், வாழ்க்கைக்கு இன்றியமையாத புதுவழியாகிய இஸ்லாத்தைப் பரப்பும் இறை நேசர்களாகவும் சென்றனர்.

இன்றைய இந்திய துணைக் கண்டத்தின் கிழக்கு, மேற்கு கடற்கரைப் பகுதிகளிலும், இலங்கை, மலேஷியா, இந்தோனிஷியா சீனம், ஜப்பான், புரூணை, போர்னியா, பிஜி, பிலிப்பைன்ஸ் ஆகிய கீழ்நாடுகள் அனைத்திலும், இன்று மக்கள் பெரும் எண்ணிக்கையில் இஸ்லாமியர்களாக இருப்பதற்கு, அங்கு சென்ற அரபிய நாட்டு வணிகர்களும் தொண்டர்களும் தான் காரணம் என்பதை வரலாற்றுச் செய்திகள் விளம்புகின்றன. இந்த நாடுகளின் காடுகளிலும், மலைகளிலும் கடலோரங்களிலும் உள்ள நூற்றுக்கணக்கான அராபிய இறை நேசர்களின் அடக்கவிடங்கள் (மக்பராக்கள்) இந்த உண்மையை என்றும் நினைவூட்டுனவாக உள்ளன. குறிப்பாக, அண்ணல் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களது நெருங்கிய தோழர்களான தமீம்-உல்-அன்சாரி, முகம்மது உக்காசா, ஆகியவர்களது இறுதி

வாழ்க்கை, சமயத் தொண்டிற்காவே, நமது தமிழகத்தில், அர்ப்பணிக்கப்பட்டு இருப்பதும் அதற்குச் சான்றாக அவர் களது அடக்கவிடங்கள் முறையே மகமூது பந்தர் என்ற பாங்கிப் பேட்டையிலும், சஹீதுபந்தர் என்ற கோவளத்திலும் அமைந் திருப்பது அரபுநாட்டிற்கும் தமிழகத்திற்கும் நல்ல பிணைப்பு கள் இருந்ததை நினைவூட்டுகின்றன. அவர்களைத் தொடர்ந்து பல்லாயிரம் அராபியத் தொண்டர்களும் சமயச் சான்றோர் களான வலிகள், ஸூபிகள், கர்வேஸ்கள் மஜ்தூபிகள், மஸ்தான் கள் சமயப் பணிக்கென தமிழகத்தின் பல பகுதிகளுக்கும் வந்து சேர்ந்தனர். தொண்டை மண்டலத்தில் இருந்து தென்பாண்டி நாடுவரை தொடராக அமைந்துள்ள கடல் வழியாக தமிழகத் திற்குள் நுழைந்து இங்குள்ள மக்களோடு மக்களாக வாழ்ந்து மக்களது பணியில் தங்கள் வாழ்க்கையை முடக்கிக் கொண்ட அவர்களது அடக்கவிடங்கள் கோவளத்தில் இருந்து குளச்சல் வரை காணப்படுகின்றன. குமரி மாவட்டத்தின் கோட்டாறு நகரில், ஈராக் நாட்டு கர்ஸிம் (வலி) அவர்களது அடக்கவிடம் உள்ளது. அதில் உறிஜ்ரி 4 (கி.பி.624) என்று குறிக்கப்பட்டுள்ளது. நெல்லை மாவட்டத்தில் கோதரிஸா மலையில் உள்ள அப்துல் ரஹ்மான் (வலி) அவர்களது அடக்கவிடத்தில் ஹிஜ்ரி 8 (கி.பி. 628) என பொறிக்கப்பட்டுள்ளது.[1] அண்ணல் நபிகளார் அவர் கள் காலத்திலேயே திருமறையின் ஒளியை ஆர்வத்துடன் தமிழகத்திற்கு ஏந்தி வந்த இறைநேசர்களின் முதல் அணியைச் சேர்ந்தவர்கள் இவர்கள் என்பதில் ஐயமில்லை. மற்றும் திருச் சிராப்பள்ளியில் நத்தர்பாபா, மதுரையில் அலியார்ஷா, ஏறு பதியில் சுல்தான் ஸையது இபுராகீம் ஸஹீது, அனுமந்தக் குடியில் ஸையது முகம்மது புகாரி; தேவிபட்டினம் ஸையது அஹமது, ஆகியோர்களது தர்காக்கள் அமைந்து இருப்பது பன்னிரண்டாம் நூற்றாண்டுவரை, சன்மார்க்க சேவைக்காக அரபு நாடுகளில் இருந்து தமிழகம் போந்து தங்களது தொண்டின் முடிவில் தமிழ் மண்ணில் தங்களை மறைத்துக் கொண்ட இறைநேசர்களில் குறிப்பிடத் தக்கவர்களாகும்.

இன்னும், ஸிரந்திப் என அன்று வழங்கப்பட்ட இலங்கை யில் உள்ள ஆதம் (அலைஹிவஸல்லம்) அவர்களது திருவடி

---

1. அப்துல் ரஹீம் எம்.ஆர்.எம். – இஸ்லாமிய கலைக்களஞ்சியம் (1974) தொகுதி 1. பக்கம்.

மண்ணை ஜியாரத்† செய்வதற்காக புறப்பட்டு வந்த அரபிகளது ஆன்மீக தொடர்புகளாலும், இஸ்லாம் இந்த மண்ணில் வேரூன்றியது. இத்தகைய அரபி பயணிகளில் ஒருவரான ஷேக் ஐக்கியத்தின் என்பவரது ஆழமான அன்பாலும், இஸ்லாமிய ஞானத்தாலும் ஈர்க்கப்பட்ட கொடுங்கோளூர் மன்னன் சேரமான் பெருமாள், இஸ்லாத்தை தழுவியதுடன் கி.பி. 825ல் புனித ஹஜ்ஜை மேற்கொண்டு அரபிநாடு சென்றவிவரத்தை வரலாற்று நூல்கள் விளம்புகின்றன. நாளடைவில் அவர் இஸ்லாத்தை தழுவி, அப்துல் ரஹ்மான் ஸாமிரி என்ற பெயருடன் அரபு நாட்டில் தங்கினார். அந்தப் புனித மண்ணில் தமது எஞ்சிய வாழ்க்கையைக் கழித்து, ஸபர் என்னும் நகரில் கி.பி. 828-ல் அவர் இயற்கை எய்தினார்.[2] இந்த மன்னர் வழங்கிய அறிமுக மடலுடன் கேரளம் வந்த மாலிக் இபுனு தினாரும் அவரது மக்களும் மேற்கு கடற்கரைப் பட்டினங்களில் இஸ்லாமிய பிரச்சார பணியில் ஈடுபட்டதுடன் முதல் முறையாக ஒன்பது தொழுகைப் பள்ளிகளை அந்த மாநிலத்தில் நிர்மாணித்ததாகவும் கேரள மாநில வரலாற்றுக் குறிப்புகளில் காணப்படுகின்றன.[3]

ஆனால், இவர்களுக்கு ஒருநூற்றாண்டிற்கு முன்னரே தமிழகத்தில், சோழர்களது கோலநகராக விளங்கிய உறையூரில்' ஹிஜ்ரி 116-ல் (கி.பி.734) ஹாஜி அப்துல்லா பின் முகம்மது அன்வர் என்பவரால் அமைக்கப்பட்ட தொழுகை பள்ளியே தென்னகத்தில் இஸ்லாமியர்களால் நிர்மானிக்கப்பட்ட முதல் தொழுகைப் பள்ளியெனத் தெரிகிறது.[4] நாயக திருமேனியவர்கள் இஸ்லாமியர்களுக்காக தங்களது திருக்கரங்களால் மதினாவில் முதல் தொழுகைப் பள்ளியை† அமைத்த ஒரு நூற்றாண்டு

---

2. William Logan - Malabar Manual (1881)
3. Gazetteer of Malabar and Amjemgo N.L.I 8 422
4. கே. பி. எஸ. ஹமிது–இஸலாமிய தமிழ் ஆராய்ச்சி இரண்டாவது மாநாட்டு மலர் (1973) பக்: 51,56.

† ஜியாரத்; அரபிச்சொல் இசுலாமிய புனிதர்களது அடக்க இடங்களுக்கு சென்று வருதல் என்பது இஸ்லாமிய நெறியில் அனுமதிக்கப்பட்ட செயலாகும்.

† இந்தப் பள்ளிதான் இன்று மஸ்ஜிது நபவீ என வழங்கப்பட்டு வருடந்தோறும் இலட்சக்கணக்கான மக்களால் தரிசிக்கப்பட்டு வரும் ஸ்தலமாகும்.

கால இடைவெளியில் தமிழ்நாட்டில் இந்த தொழுகைப் பள்ளி அமைக்கப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது. திருச்சி நகரின் கோட்டை ரயில்நிலையத்திற்கு அருகில்சிதைந்த நிலையில்உள்ள அந்தப் பள்ளி, இஸ்லாமியத் தமிழினத்தின முன்னோடி முயற்சி யாகும். கடந்து போன நூற்றாண்டுகளில் தமிழகம் வந்த அரபிகள் தமிழ்ச் சமுதாயத்தில் கலந்து விட்டாலும், அன்றைய தமிழகத்தின் மிகமிகச் சிறுபான்மையினராக இருந்த அவர்கள் தங்களது அன்றாட வாழ்க்கையின், உன்னதமான இறை வழி பாட்டினை நிறைவேற்றுவதற்கு எத்தகைய உறுதியான உள்ளத் துடன் இருந்தனர் என்பதை விளக்கும் வரலாற்று சாட்சிய மாக விளங்கிக் கொண்டிருக்கிறது அந்தப் பள்ளிவாசல்,

இவ்விதம், தமிழகத்தில், அரபி வணிகர்களான இஸ்லா மியர்களும், அவர்களது போதகர்களான இறைவனது அனுபூதி பெற்ற வலிமார்களும், இறை நேசர்களும், கடற்கரைப் பகுதி களிலும், பட்டணங்களிலும் ஆங்காங்கே சிறு குடியிருப்பு களையும் அமைத்து வாழ்ந்தனர். தமிழகம் போந்த இத்தகைய அராபிய வணிகர்களது குடியிருப்புகள் சங்க காலத்திலும் அதற்குப் பின்னரும் "யவனச் சேரி" என வழங்கப்பட்டது. பூம்புகார் நகரில்,

"மொழிபல பெருகிய பழிதீர் தேயத்து
புறம்பெயர் மாக்கள் கலந்தினி துறையும்.........."

இத்தகைய குடியிருப்பு இருந்ததை பட்டினப்பாலை குறிப் பிடுகிறது. இன்னும் பெருங்காதை,

"விருப்பெருஞ் செல்வமொடு வென்றி தாங்கிய
ஐம்பதி னிரட்டி யவனக்சேரியும் ..........

(மகதகாண்டம் : புறத்தொடங்கியது பாடல் 3: 8

"அமரிய நண்பின் தமருளும் தமராம்
யவனப்பாடி ஆடவர் தலைமகன்

பெருங்கதை – இலாவணகாண்டம் பாடல். 167–168.

ன்று "யவனச்சேரி" "யவனப்பாடி" என தெளிவாகச் சால்கிறது.

கிழக்கு கடற்கரையிலும் இத்தகைய குடியிருப்புகள் சி எழுந்தன. முகவை மாவட்டத்து கடற்கரைப் பகுதியை நத் வந்து குடியேறிய அரபு நாட்டாரின் நத்தம், பல இங் எழுந்தன. இன்றைய தேவிபட்டினத்தின் தென்பகுதி "அரப தான் காடு"[5] ("அரபு நத்தக்காடு",) என்ற பெயரில் இன்னு வழங்கப்பெறுகிறது. பெரியபட்டினம் கிராமத்தின் வடக்கு பகுதியில் இருந்த இத்தகையதொரு நத்தம், "நத்தக்காடு என வழங்கப்படுகிறது. கீழக்கரைக்கு அண்மையில் உள் கிராமம் ஒன்று இன்றும் "நத்தம்" என்றே பெயர் பெ றுள்ளது.[6]

இந்தக் குடியிருப்புகள், பிற்காலக் கல்வெட்டுகளிலு இலக்கியங்களிலும் "அஞ்சு வண்ணம்.' என்றும் "அஞ் வன்னம்" எனவும் குறிப்பிட்டுள்ளன. கேரளத்தில் குடியிருந் முஸ்லீம்களது குடியிருப்பும் "அஞ்சுவண்ணம்" என்ற குறிக்க பட்டுள்ளது. இந்தக்குடியிருப்புகளில் இருந்த முஸ்லீம்க **அஞ்சுவண்ணத்தினர்** என அழைக்கப்பட்டனர். நாளடைவி அவர்களது சபை அஞ்சுவண்ணம் சுன்னத் ஜமாத் என்றும், அவ களது பள்ளிகள் அஞ்சுவண்ணப் பள்ளியென்றும். வழங்கப்ப டன. நெல்லை மாவட்ட ஏர்வாடி நகரின் ஒரு பகுதி "புலிபூ அஞ்சவண்ணம்" என்று கல்வெட்டில் இடம் பெற்றுள்ளது குமரி மாவட்டத்தில் "அஞ்சுவண்ணம்" என்ற சிற்றூர் உள்ள அஞ்சுமன் என்ற பாரசீகச் சொல்லின் தமிழ் விகாரம் தா

---

5. எஸ்.எம். கமால் — உலகமகா தேவிபட்டினம் (ஆய்வுரை)
6. இன்றைய தமிழகத்தில் நத்தம் என்ற பெயர் விகுதிகளி மூலம் சில ஊர்கள் இருந்து வருவது ஈண்டு ஒப்பு நோக் தக்கது.

| | |
|---|---|
| புத்த(ர்) நத்தம் | — திருச்சி மாவட்டம். |
| ஈசநத்தம் | — திருச்சி மாவட்டம் |
| பிள்ளை(மா)யார் நத்தம் | — நெல்லை மாவட்டம் |
| வேடர் நத்தம் | — நெல்லை மாவட்டம் |
| அரசர் நத்தம் | — நெல்லை மாவட்டம் |
| முதுவார் நத்தம் | — முகவை மாவட்டம் |
| அபிராம நத்தம் | — முகவை மாவட்டம் |

Pate S.R — Gazetteer of Tirunelvely

இந்த தமிழ்ப் பெயர் எனக் கருதப்படுகிறது.[8] மன்றம், குழு சபை, சாத்து என்ற பொருளியல் பாரசீக மொழியில் வழங்கப் பெறுவது அஞ்சுமன் ஆகும். ஒன்பது, பத்தாவது நூற்றாண்டின் மாறவர்மனது தீர்த்தாண்ட கல்வெட்டிலும்[9] பாஸ்கர ரவி வர்மன் என்ற கேரள மன்னனது கோட்டயம் கல்வெட்டிலும்[10] அஞ்சுவண்ணம் குறிக்கப்படுகின்றது. பழந்தமிழ்ப் பாடல் ஒன்றில், நாகபட்டினத்துக் கருகில் உள்ள ஒரு அஞ்சு வண்ணம் வர்ணிக்கப்படுகிறது.

'' குடக்கினிற் றுரங்கமும் வடக்கினிற் கலிங்கமும்
குணக்கினிற் பசும்பொனும் குளித்த தெற்கில்
அடிப்பரப் பிடைக்கலந் தனேக வண்ணமாக வந்
தஞ்சு வண்ணமுந் தழைத்தறத்தின் வண்ணமானவூர் ''

என்பதே அந்தப் பாடலின் அடிகளாகும். மேலும் பதினைந்தாவது நூற்றாண்டு சிற்றிலக்கியமான பல்சந்தமாலையில் ''அயன்மிகு தானையர் அஞ்சு வண்ணத்தவர்'' என்றும் பதினாறாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இயற்றப்பட்ட மிகுராஜமாலையில ''அண்டர் தருவெனக் கொடுக்கு மஞ்சு வண்ண முசுலிமவர்கள்'' என அஞ்சுவண்ணத்தினர் பேசப்படுகின்றனர்.[11] இதனைப் போன்றே நெல்லை மாவட்டத்தில் சோனகன் விளையும், முகவை மாவட்டத்தில் சோனகன் பேட்டையும், தமிழ் மண்ணில் தழைத்து எழுந்த இஸ்லாமிய அரபியரது குடியிருப்புகளையே சுட்டுவதாகும். இவை தமிழ் மண்ணில் தழைத்திருந்த பொழுதும் இந்தக்குடியிருப்பு பகுதிகளின் முழு நிர்வாகத்தையும் இஸ்லாமியரது சுயேட்சையான ஆட்சிஅமைப்பு நிர்வகித்து வந்தது. இந்த அமைப்புகளின் இயக்கத்தில் இந்த நாட்டு மன்னர்கள் தலையிடவில்லை. இசுலாமியரது வாழ்க்கை, செயல்பாடு, குற்ற இயல் சம்பந்தமான அனைத்து நிலைகளிலும் அந்த தன்னாட்சி அமைப்பு நடுநாயகமான தலைவனது தீர்ப்பு,

---

8. சதாசிவ பண்டாரத்தார் – தி. வை.–கல்வெட்டு கூறும் உண்மைகள் (1961) பக் 21
9. A.R. 598/1926 தீர்த்தாண்ட தானம் (இராமநாதபுரம்)
10. களவியற்காரிகை (வையாபுரிப்பிள்ளை பதிப்பு) (1945) ஆலிப்புலவர். மிகுராஜ் மாலை (பதிப்பு 1962) பக்கம் 86
11. Trivangore – Coachin Archallogical Series vol. II p. 21, 25, 34, 35, 67.

கடைப் பிடிக்கப்பட்டது. காயல்பட்டினத்தில் இயங்கிய இசுலாமிய தன்னாட்சி அமைப்பு பற்றி நூலாசிரியர் ஒருவர் குறிப்பிட்டுள்ளார்.[12] ''அஞ்சு வண்ணமும் தழைத்து அறத்தின் வண்ணமான ஊர்'' என மேலே தனிப்பாடல் குறிப்பிடுவது இந்த ஆட்சி அமைப்பையும் அங்கு நிலவிய ''ஷரியத்'' முறையையும் என்பதும் வெளிப்படை.

இத்தகைய அராபிய குடியேற்றம் ஒன்று மதுரையம்பதியில் இருந்ததை மதுரை கோரிப்பாளையம் தர்காவில் உள்ள கல்வெட்டு ஒன்று உறுதி கூறுகிறது.[12a] இதனைப்பற்றி மதுரைச் சீமை வரலாற்றின் ஆசிரியர் அலக்ஸாந்தர் நெல்சன் குறிப்பிட்டு இருப்பதின் சுருக்கமாவது,— ''... .... ... மதுரை மன்னனாகிய கூன்பாண்டியன் இன்றைய கோரிப்பாளையம் எனப்படும் சொரிகுடி, சொக்கிகுளம், பீபிகுளம், கண்ணாரேம்பல், சிறுதூர் திருப்பாலை ஆகிய ஆறு பகுதிகளை, அராபிய வணிகர்களுக்கு பதினாயிரம் பொன் பெற்றுக் கொண்டு கையளித்தான், தமிழ் நாட்டுக் கடற்கரையில் சிறப்பான வணிகத்தில் ஈடுபட்டிருந்த அவர்கள், மதுரையில் நிலையாகத் தங்குவதற்காக கோரிப் பாளையம் என்ற இந்தப் பகுதிகளை பாண்டிய மன்னனிடம் இருந்து பெற்று இருக்கவேண்டும். இந்த நிகழ்ச்சி பத்தாவது நூற்றாண்டிற்கு முன்னதாக நடைபெற்று இருத்தல் வேண்டும் ஆனால், இந்த நிலங்களைப் பற்றிய உரிமைப் பிரச்சினையொன்று இஸ்லாமியர்களுக்கும் ஏனையோருக்கும் பின்னர் எழுந்த பொழுது, மதுரை மன்னனாக இருந்த வீரப்பநாயக்கர் (கி.பி. 1572–1595) நியாய பூர்வமான விசாரணை யொன்றை நடத்தினார். கோரிப்பாளையம் தர்காவிற்கு நேரில் சென்று ஆவணங்களைப் பார்வையிட்டு, அந்த நிலங்களின் மீதான இஸ்லாமியர்களது உரிமை உண்மையானதென்று கட்டளையிட்டுள்ளார். அதனைக் கல்வெட்டிலும் சாலிவாகன சகாப்தம் 1495 பவ வருடம் தை மாதம் பதினோராம் நாள் (கி.பி. 1573)

12. Mooreland – W.H. — From Akbar to Aurangages (1923 London p. 222

12(a) A.R. 77/1905 கோரிபாளையம் (மதுரை)

பொறித்துள்ளார். பிற்காலத்தில் இந்த நிலங்களை கோரிப் பாளையத்தில் எழுந்துள்ள தர்காவிற்கு உரிமை இழப்புக் காணி யாக அராபிய வணிகர்கள் விட்டுக்கொடுத்திருக்க வேண்டும்.[12b]

தமிழ்நாட்டின் தலைமை நகரான மதுரையில் சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் அராபிய இஸ்லாமியர் குடி யேற்றம் ஏற்பட்டு இருந்தது என்பதை மேலே கண்ட வர லாற்றுச் செய்தி வெளிப்படுத்துகிறது. இதனைப் போன்றே சோழர் தலைநகராகிய தஞ்சையிலும் அராபிய இஸ்லாமியர் கள் இதே கால கட்டத்தில் இருந்து வந்ததை ராஜராஜ சோழனது தஞ்சைப் பெரிய கோயில் கல்வெட்டுத் தொடர் ஒன்றிலிருந்து சூசகமாகத் தெரிகிறது. தஞ்சைப் புறம்பாடி ராஜ்ய வித்யாதரப் பெருந்தெருவில் இருக்கும் சோனகன் சாவூர்....'' என்பதே அந்தக் கல்வெட்டுத் தொடராகும்.[13] ராஜேந்திர சோழனது ஆட்சிக் காலத்திலும் செல்வாக்குடன் வாழ்ந்த இந்தச் சோனகரை ''கங்கை கொண்ட சோழபுரத்து ராஜ்ய வித்யாதரப் பெருந்தெரு திருமந்திர ஓலை நாயகனான சோனகன் சாவூர்''[14] என கோலார் - கல்வெட்டில் குறிப்பிடப் பட்டுள்ளது, அரசரது வாய்மொழி ஆணையை ஒட்டி வரைந்து வெளிப்படுத்தும் அலுவலர் திருமந்திர ஓலை எனப்படும். மற்றும், சோழர் காலத்திய சிறந்த செப்பு பட்டயமான ''லெயிடன் கிராண்ட்'' (ஆனைமங்கலச் செப்பேடு)டில் கைச் சாத்திட்டவர்களில் இன்னொரு இஸ்லாமியரது பெயர் இடம் பெற்றிருப்பது தெரியவருகிறது. க்ஷத்திரிய சிகாமணி வளநாட்டு பட்டணம் கூற்றத்து சன்னமங்கலத்து கரணத்தான் அகமது துருக்கன்'' என அவர் குறிப்பிடப்பட்டார்.[15] இன்றைய நாக பட்டினமும் அதைச் சூழ்ந்த பகுதி தான் இந்த வளநாடும் கூற்ற மும் ஆகும்.[15a]

---

12(b) Alexandar Nilson - Munural of madura country (1858) part II

13. டாக்டர் இரா.நாகசாமி — தஞ்சைப் பெருவுடையார் கோவில் கல்வெட்டுக்கள் — முதல் தொகுதி பக் 232, 257

14. ''சாமூன்'' என்ற அரபிச் சொல்லின் திரிபு — சாவூர்

15. நடன காசிநாதன் — கல்வெட்டு ஒரு அறிமுகம் (1978) பக் 83

15(a) T. Subbarajulu — Political geography of Chola country (1973) Map 11 List No : 91 (3)

இந்த இஸ்லாமிய அரபிகளை, ஏனைய வெளிநாட்டு
னரைப் போன்றே தமிழ் இலக்கியங்கள் பாகுபாடு இல்லாமல்
ஒரு கால கட்டம் வரை "யவனர்" எனக் குறிப்பிட்டு வந்தன
ஆனால், கி.பி.மூன்றாம் நூற்றாண்டிற்குப் பின்னர் கிரேக்கர்
உரோமர் ஆகியவர்களது தமிழகத்துடன் வணிகத் தொடர்புகள்
முற்றாக முறிந்த பிறகு, தமிழகத்துடன் தொடர்பு கொண்
டிருந்த மேனாட்டார் இஸ்லாமிய அரபியர்கள் மட்டுந்தான்
என்பது தெளிவு.

இதனை வலியுறுத்த பேரறிஞர் மு. ராகவ ஐயங்காரது
ஆராய்ச்சிக் கருத்துக்கள் இங்கு ஒப்பு நோக்கத் தக்கனவாக
உள்ளன மகா வித்வான் அவர்கள், "வெளிநாட்டு வியாபாரத்
தொடர்புகள்" பற்றிய தமது கட்டுரையில்[16]

"... ... ... இவ்வாறு தமிழ்நாட்டில் மலிந்திருந்த யவனர்
என்போர், கிரேக்கம், அரேபியா, எகிப்து முதலிய நாடுகளில்
இருந்து வந்தவர்களே. இவருள் கிரேக்க யவனர் இங்கு வந்து
வியாபாரம் செய்தவராயினும், சங்க நாளிலும் அதன் பின்பும்
தமிழகத்தில் மிகுதியாகத் தங்கியவர்கள் சோனகர் என்னும் யவன
ராவர். தமிழ் கூறும் பதினெண் தேயங்களில் ஒன்றான
'சோனகம்" பரத கண்டத்திற்கு மேற்பால் நாடுகளில் ஒன்று
என்று சொல்லப்படுவதால் அது அரேபியா என்னும் தேசமாகக்
கருதப்படுகிறது. அபிதான சிந்தாமணி, யவனர், அரபி
நாட்டு மிலேச்சர் என விளக்கம் தந்துள்ளது. இன்றும், காயல்
பட்டினம், கீழக்கரை ஆகிய கடற்கரை பகுதிகளில் இச்சோனகர்
மிகுதியாக வாழ்கின்றனர். இவர்கள் முற்காலத்தே காவிரிப்
பூம்பட்டினத்தில் வசித்து வந்த வியாபாரக் கூட்டத்தைச் சேர்ந்
தவர் என்றும், பிற்காலத்தில் பாண்டிய நாடு அடைந்தவர்
என்றும் தங்கள் ஆதி வரலாறு கூறுகின்றனர். இவர்களது
பூர்வபாஷை அரபியாயினும், பன்னூற்றாண்டுகளாகத் தமிழ
கத்தில் தங்கி விட்டார்களாதலாலும், தமிழருடன் சம்பந்தம்
செய்தும், தமிழர் வழக்கங்களைப் பழகி வந்தமையாலும்
இவர் தமிழ் மொழியே பேசுபவராயினர். தமிழ் மக்கள் இச்
சோனகரை யவனர் என்னும் பெயரால் அழைத்து வந்தனர்

16. மகாவித்துவான் மு. ராகவ ஐயங்கார் – செந்தமிழ் – ஆராய்ச்சி தொகுதி (1938) பக்: 154

என்பது, "சோனகர் யவனர்" என்பது திவாகரத்தாலும், பத்துப்பாட்டில் "யவனர்" என்னும் சொல் வருமிடமெல்லாம் நச்சினார்க்கினியர், "சோனகர்" என உரை கூறிப் போந்ததாலும் விளங்கத்தக்கது.

"பிற்காலத்தில் இச்சோனகர் எல்லாம் தம் பழைய தேசத்தவர் போலவே, இஸ்லாத்தை தழுவலாயினர். இது பற்றிய "**யவனத் துருக்கர்**" என்றார் அடியார்க்கு நல்லார்," யவனர் என்ற இலக்கியப் பிரயோகம் இஸ்லாமிய அரேபியர்களைத் தான் சுட்டுவதாக மகாவித்வான் அவர்கள் மேலே கண்டவாறு விளக்கம் கொடுத்துள்ளார்கள்.

ஆசிரியர் பெயர் தெரிந்து கொள்ள இயலாத பல்சந்த மாலை பாடல் "…. …. …. ஏழ் பெருந்தரங்கத்து **யவனர்**, அல்லாவென வந்து …. …. …." என, அல்லாவைத் தொழுகின்ற அரபியர், **யவனர்** என்பதை ஐயமற அறுதியிட்டுக் குறிப்பிடுகிறது.[17] இந்த யவனர் என்ற சொல்லின் பிரயோகம் பதின்மூன்றாம் நூற்றாண்டிற்கு முற்பட்ட இலக்கியங்களில் மட்டும் காணப்படுவதாலும், இந்த நூலும், அந்த நூற்றாண்டை அல்லது அதற்கு அடுத்த நூற்றாண்டுகளைச் சார்ந்ததாக இருத்தல் வேண்டும். யவனர்கள் தங்கள் வீட்டுச் சாளரங்களுக்கு இட்ட மூடுதிரை போன்ற பட்டுத்திரை திருக்கோயில் கருவறைகளில பயன்படுத்தப்பட்டது. அதனைக் கல்வெட்டுக்கள் "**யவனிகை**" என குறிப்பிடுகின்றன.† இதேசொல். பின்னர் "**நமனிகை**" என்றுகூட வழக்கு பெற்றது. யமன் என்ற சொல் "நமன்" என்றால் போல, இவ்விதம், இஸ்லாமிய அரபிகள் அந்த காலகட்டத்தில் தமிழகத்தில் தங்களது இஸ்லாமிய வணிகச் சாத்துக்களைப் பெருக்கிக் கொண்டதுடன் ஆங்காங்கே நிலையான குடியேற்றங்களை அமைத்து தமிழ்ச் சமுதாயத்தின் தவிர்க்க முடியாத அங்கமாகிவிட்டனர், என்பதும் தெளிவாகிறது. தங்களது வளமையான வாணிபத்தில்

---

17. களவியற்காரிகை (பதிப்பு - வையாபுரிப்பிள்ளை) 1945. பக்கம் 139.

17(a) HULTZCH. E. Dr — South Indian Inscription - Vol. II Part. I (1891) p. 7. Ins. No. 6.

தனித்து நின்றதுடன் தமிழ் மண்ணுக்குரிய தண்ணளியிலும் மிகுந்து நின்றதனை, அதே பல்சந்தமாலையின் இன்னொரு பாட்டில்,

"வானது நாணக் கொடையா லுலகை வளர்த்தருளும்
சோனகர் வாழும் செழும் பொழில் சூழ்ந்து ....." †

என்று ஈதலறத்திற்கு இலக்கணமாக சுட்டப்படும் மாரியே நாணுமாறு இஸ்லாமியர்களது புகழ் வாழ்க்கை அமைந்து இருந்தது சித்தரிக்கப்பட்டுள்ளது.

இங்ஙனம், அராபிய இஸ்லாமியருக்கு அடுத்த தாயகமாக தமிழ் மண் விளங்கியது. எட்டாம் நூற்றாண்டின் துவக்கத்தில் இராக் நாட்டு பஸ்ராவின் அதிபதியாக இருந்த ஹிஜாஜ் இபுனு யூசுப் (ஹிஜ்ரி 41 முதல் 95 வரை) பின் கொடுமைக்கு அஞ்சிய இஸ்லாமியர் பலர், கடல் வழியாக வந்து பாண்டிய நாட்டின் பழம்பெரும் துறையான கொற்கையில் கரை இறங்கினர். அங்கு ஆட்சி செய்த பாண்டியமன்னன், அவர்களை ஆதுரத்துடன் வரவேற்றுப் புகலிடம் வழங்கினான். இந்த அகதிகள் கொங்கணக் கரையில் குடியேறியதாக பாரசீக நூலாசிரியர் ஒருவர் தெரிவித்துள்ளார்.[18]

இது நிகழ்ந்தது கி.பி. 714ல் அன்று முதல் இஸ்லாமியர் கொற்கையில் நிலைத்து வாழ்ந்து வந்தனர். தங்களது தாயகமான கெய்ரோவாகவே (பின்னர் காயலான) கொற்கையை "காயிறூன்" எனவும் "காயிறூன்" எனவும் வழங்கினர். அங்குள்ள செப்பு பட்டயமொன்றில் பொறித்துள்ளவாறு அப்பொழுது 226 சோனகர், காயலை வந்தடைந்ததாகத் தெரிகிறது. அவர்களின் விபரம் :–

| | | |
|---|---|---|
| 1. | ஹாஷிம் வப்சத்தார் | 23 பேர் |
| | நாச்சியார் பெண்டுகள் | 9 பேர் |
| | அடிமைகள் | 4 பேர் |

---

17.(b) களவியற்காரிகை(பேராசிரியர் வையாபுரிபிள்ளை பகுப்பு) பக்கம் 132

18. Burhan - Ibl - Hassan : Tuhfat - al - Mujahideen (Persion) p. 5.

| | | |
|---|---|---|
| 2. | பாருக் வமசத்தார் | 43 பேர் |
| | நாச்சியார் பெண்டுகள் | 16 பேர் |
| | பெண்கள் | 9 பேர் |
| | அடிமைகள் | 7 பேர் |
| 3. | பாக்கீர் வம்சத்தார் | 39 பேர் |
| | நாச்சியார் பெண்டுகள் | 24 பேர் |
| | அடிமைகள் | 12 பேர் |
| 4. | உமையா வம்சத்தார் | 14 பேர் |
| | நாச்சியார் பெண்டுகள் | 5 பேர் |
| | அடிமைகள் | 5 பேர் |
| | இராணுவ வீரர் | 16 பேர் |
| | க்ஷவரகர் | 3 பேர் |
| | மொத்தம் | 226 பேர் |

இந்தச் செய்தியை வரலாற்று ஆசிரியர் கர்னல் வில்க்ஸ-ம் தமது நூலில் உறுதிப் படுத்தியுள்ளார்.[19] எட்டாவது நூற்றாண்டின் துவக்கத்தில் ஈராக் ஆளுநராக பஸ்ராவில் இருந்த ஹிஜாஜ் பின் குஸாம், ஹாஷிம் குலத்தவரை, தாயகத்தை விட்டு ஓடி உயிர் தப்பும் அளவிற்கு கொடுமைப்படுத்தியதாக அந்த நூலில் வரைந்துள்ளார். இவர்களைப் பின்பற்றி பிறிதொரு அணியினர், அரேபியாவின் அதிபதியாக இருந்த அப்துல்லா மாலிக் பின் மர்வானது கொடுங்கோலுக்குத் தப்பி அரேபியாவின் தென் பகுதி வழியாக இந்தியாவின் மேற்கு, கிழக்கு கடற்கரையை ீயடைந்தனர். ஆங்கில கிழக்கிந்தியக் கம்பெனியாரது இன்னொரு ஆவணத்தின்படி, காயல்பட்டினத்தில் அரபி முஸ்லீம்கள் கி.பி. ஒன்பதாவது நூற்றாண்டில், அரபித் தாயகத்தில் இருந்து குடியேறி, அங்கு அறுபத்துநான்கு தொழுகைப் பள்ளிகளை அமைத்தனர் என்றும், தென்னை, பனை மரத் தோப்புகள் பலவற்றை ஏற்படுத்தினார் என்றும் தெரிகிறது. இவர்களும் இவர்களது வம்சா வளியினரும், சோழ மண்டலத்தின் எதிர்க் கரையான ஈழத்துடனும் வணிகத் தொடர்புகளைப்

19. Col-wilks - Historical Sketches of South India (1810)

பெருக்கியதுடன், ஈழத்தின் வடக்கு, வடகிழக்கு, தெற்குப் பகுதிகளில் – திருக்கோணமலை, யாழ்ப்பாணம், மாதோட்டம், மன்னார், புத்தளம், கொழும்பு, வேருவிளை, காலி ஆகிய பகுதிகளில் இஸ்லாமியர்களது முதலாவது குடியிருப்புகளை நிறுவினர். இவர்கள் ஈழத்தின் முத்துக்களையும் மணிகளையும் பெற்றுக் கொண்டு, தங்கள் நாட்டு தங்கம், செம்பு, பட்டு, மட்கலங்கள், குதிரைகள் ஆகியவைகளைப் பண்டமாற்றில் வழங்கியதாக வரலாற்று ஆசிரியர் நிக்கோலஸ் பரணவிதான குறிப்பிட்டுள்ளார்.[20] இன்னொரு நூலாசிரியரான ஜட்ஜ் காசி செட்டியும் இலங்கை முஸ்லீம்களைப்பற்றிக் குறிப்பிடுகையில், அவர்கள் முதலில் குமரிமுனைக்கு கிழக்கே உள்ள காயல்பட்டினத்தில், எட்டாவது நூற்றாண்டில் குடியேறிய பின்னர் இலங்கைக்கு வந்ததாக வரைந்துள்ளார். இந்த ஊர் முன்னால் **சோனகர் பட்டினமாக** வழங்கி வந்ததாக டாக்டர் கால்ட்வெல் குறிப்பிட்டுள்ளார்.[21]

---

20. Nicholos and Paranamitana - Concise History of Ceylor (1961) p. 253
21. Yule. Col. 4. The Book of Ser Marcopolo-vol. II (1871 p, 307. 309.
Tamil nadu Archives - Tinnevely Dist. Records vol. 3570 - ~ 1809 ft 23-1-1810.

# 3

## துலுக்கர்

இவர்களை, பிற்காலத் தமிழ் இலக்கியங்கள் சோனகர் எனவும், துருக்கர் எனவும், ராவுத்தர் எனவும், இனம்பிரித்துக் காட்டியுள்ளன. இந்தச் சொல் தமிழகத்தில் பதினோராவது நூற்றாண்டிலேயே வழக்கில் இருந்தமைக்குச் சான்றாக பதினோராவது நூற்றாண்டு இலக்கியமான ஜெயங்கொண்டாரது கலிங்கத்துப்பரணி, காஞ்சிபுரம் மாளிகையில், முதற் குலோத்துங்க சோழ மன்னனுக்கு திறையளந்த நாற்பத்து எட்டுத் தேய மன்னர்களின் பட்டியலில் "துருக்கரையும்" சேர்த்துள்ளது [1] அதே மன்னன் மீது புனையப்பட்டுள்ள பிள்ளைத் தமிழில், கவியரசு ஒட்டக்கூத்தரும் துருக்கரைப்பற்றிய குறிப்பினைத் தருகிறார்.[2] மகாகவி கம்பனது இராமாவதாரமும் "துருக்கர் தரவந்த வயப்பரிகள் ...." என துருக்கர்களைக் குறிப்பிட்டுள்ளது.[3] துருக்கி நாட்டில் இருந்து வந்த இஸ்லாமியர்கள் என்ற பொருளில் இந்தச் சொல் துருக்கர் என்றும், நாளடைவில் துலுக்கர் எனவும் மருவி வழங்கியுள்ளது. இந்தச்

1. புலவர் ஜெயங்கொண்டார் கலிங்கத்துபரணி பாடல் 333
   வத்தலர், மத்திகர், மாளுவர்
   மாகதர் மச்சர் மிலேச்சர்களே
   சூத்திரர் குத்தர் குடக்கர்
   பிடக்கர் குருக்கர் துருக்கர்"
2. கவியரசு ஒட்டக்கூத்தர்; குலோத்துங்க சோழன் பிள்ளைத் தமிழ் (முத்தபருவம் பாடல் எண் 52)
3. மகாகவி கம்பன் – இராமாவதாரம் பாலகாண்டம் : வரை காட்சி படலம் பாடல் எண் : 908.

சொல் வடமொழி, தெலுங்கு, இலக்கியங்களிலும் கல்வெட்டுக்களிலும் ''துருஷ்கா'' என பயன்படுத்தப்பட்டு உள்ளது. ''சீமத்த சனீகார துலுஸ்க தானுஸ்க'' என்பது தாராபுரம் கல்வெட்டுத் தொடரில் உள்ள விருதாவளியாகும்.[4] விஜய நகர மன்னர்களுக்கு ''துலுக்க மோகந் தவிழ்ந்தான்'' ''துலுக்க தள விபாடன்'' என்பனவும், அவர்கள் விருதாவளி (சிறப்புப் பெயர்கள்) எனத் தெரிய வருகிறது.[5] வீரபாண்டிய தேவரது நிலக்கொடையொன்றில் எல்லை குறிப்பிடும்பொழுது கோவை மாவட்ட பாரியூர் கல்வெட்டு, ''கிழக்கு புரட்டலுக்கு மேற்கு, துலுக்கன்பட்டி நேற் மேற்கு'' என வரையறுத்துள்ளது.[6] கொங்குநாட்டில், துலுக்கர் பன்னிரண்டாம் நூற்றாண்டில் நிலைத்துவிட்டதை இந்தக் கல்வெட்டு உறுதிசெய்கிறது. மற்றும் தாராபுரம் கல்வெட்டு'' துலுக்கர் பள்ளியாகி தானம் தெரியாமலாகிவிட்ட[7]....'' என்ற 14வது நூற்றாண்டின் கல்வெட்டுத் தொடரும் ''முன்னாள் ராஜராஜன் ஸ்ரீசுந்தரபாண்டியத் தேவர் துலுக்கருடன் வந்த நாளையில் .... ....'' என்ற திருக்களர் கல்வெட்டும்[3] ''துலுக்கர் பலசேமங்கள் தப்பித்து ....'' என்ற திருவொற்றியூர் கல்வெட்டுத் தொடரும், துலுக்கர் பற்றிய வரலாற்றுச் செய்திகளை குறிப்பிட்டு, துலுக்கர் தமிழ் மண்ணில் தழைத்துவிட்ட பாங்கினை கோடிட்டு காட்டுகின்றன. இன்றைக்கும் தமிழ்நாட்டில், சில பகுதிகளில் உள்ள சிற்றூர்கள் ''துலுக்கர்'' குடியிருப்பைக் குறிக்கும் வகையில் அவைகளின் ஊர்ப்பெயர்கள் அமைந்துள்ளன. அவை,

1. துலுக்கபட்டி — வில்லிபுத்தூர் வட்டம்
2. துலுக்கபட்டி — சாத்தூர் வட்டம்

---

4. தென்னிந்திய கோவில் சாசனங்கள் எண் 309/D–2949–I தாராபுரம்
5. சுப்பிரமணியம் பூ – மெய்கீர்த்திகள் (1885) பக் 294–95 கணோச 68/D – 2871
6. தென்னிந்திய கோயில் சிலாசாசனங்கள் (I) தொகுதி சாசனம் பக்கம் 309/D2949 - 1.
7. A.R. 642/1902 திருக்களர்
8. தென்னிந்திய கோயில் சாசனங்கள் தொகுதி – I – எண். 523, பக்கம். 82–17

3. துலுக்கபட்டி — விருதுநகர் வட்டம்
4. துலுக்கன் குளம் — நெல்லை வட்டம்
5. துலுக்கன் குளம் — ராஜபாளையம் வட்டம்
6. துலுக்கன் குளம் — அருப்புக்கோட்டை வட்டம்
7. துலுக்கன் குறிச்சி — முதுகுளத்தூர் வட்டம்
8. துலுக்க முத்தூர் — அவினாசி வட்டம்
9. துலுக்க மொட்டை — கோவை வட்டம்
10. துலுக்க தண்டாளம் — காஞ்சி வட்டம்

பன்னிரண்டாவது நூற்றாண்டைச் சேர்ந்த திருப்பத்தூர் கல்வெட்டில் "துலுக்கராயன் குழி" என்ற நில அளவை குறிப்பிடப்பட்டுள்ளது.[9] இதிலிருந்து துலுக்கரில் சிறப்புடையவர் "துலுக்கராயன்" என அழைக்கப்பட்டார் என்பது புலனாகிறது. மேலும், தமிழகத்தில் இந்த துலுக்கர்களது குடியிருப்பை குறிக்க துலுக்காணம் என்ற புதிய சொல் வழக்கில் வந்துள்ளது. இந்தச் சொல்லும் அதே நூற்றாண்டில் உருவானதாக இருக்கவேண்டும். திரிகூடராஜப்பகவிராயரது "திருக்குற்றாலக் குறவஞ்சியிலும்"[10] "இராமநாதபுரம் மன்னர் "திருமலை சேதுபதி பற்றிய வண்ணத்திலும்"[11] இந்தச் சொல் ஆளப்பட்டுள்ளது. இத்தகைய துலுக்காணத்தில் இருந்த நாயக்கர் ஒருவரது பெயரில் இந்தச் சொல் ஒட்டிக் கொண்டுள்ளதை பதினாறாவது நூற்றாண்டு கல்வெட்டு செய்திகளில் வெளிப்படுத்தப்பட்டுள்ளன. அவரது பெயர் ஏரமஞ்சி துலுக்கான நாயக்கர் என்பதாகும். இவர் பல திருப்பணிகளைச் செய்துள்ளார். அதன் காரணமாக சேலம் ஆறகழூர் வட்டம் பணத்தளை என்ற ஊர்"துலுக்கான நாயக்கர் பேட்டை" என்ற புதுப் பெயருடன் வழங்கப்பட்டது.[12]

---

9. வள்ளியம்மை – திருப்புத்தூர் (1981) பககம் 17
10. "மக்கம், மராடம், துலுக்காணம்,
மெச்சி குறமகளும் ... பாடல் எண் 63–1
திரிகூடராசப்ப கவிராயர் – திருக்குற்றால குறவஞ்சி
11. "வழுமன் மரகதர், துலுக்காணர், சோழர் ..."
திருமலை ரகுநாத சேதுபதி வண்ணம் (செந்தமிழ் தொகுதி)
12. A. R.` 409, 406 / 1913.

இவை போன்றே துலுக்கரது ஆட்சியைக் குறிக்க ''துலுக்காணியம்'' என்ற புதுச்சொல் உருவாக்கப்பட்டது. பதினான்காவது நூற்றாண்டில் மதுரையைச் கோநகராகக் கொண்டு ஆட்சி செய்த மதுரை சுல்தான்களின் ஆட்சியை ''துலுக்காணியமாக இருந்து'' என மதுரைத் தல வரலாற்றில் குறிக்கப்பட்டுள்ளது.[13] காளையார் கோவிலில் உள்ள கி.பி. 1532 ஆண்டில் பொறிக்கப்பட்ட கல்வெட்டு, தமிழகத்தில் நிலவிய துலுக்கர் ஆட்சியை ''துலுக்க அவாணம்'' ''துலுக்க அவாந்தரம்'' எனவும் குறிப்பிடுகிறது.[14] இன்னும், ''துருக்கர் ராச்சியமாய் பல சேமங்கள் தப்பித்து'' என்ற திருவொற்றியூர் கல்வெட்டுத் தொடரும்[15] துலுக்கர் பற்றிய வரலாற்றுச் செய்திகளைக் குறிப்பிட்டு, துலுக்கர் தமிழ் மண்ணில் தழைத்துவிட்ட விவரங்களை கோடிட்டுக் காட்டுகின்றன. இன்னும் ''துலுக்கர் இனத்தைக்'' குறிப்பிட, ''துலுக்கு'' என்ற சொல் கூட கையாளப் பட்டுள்ளது. திருவீழிமழலை திருக்கோயிலில் அர்ச்சகர் ஒருவர் புரிந்த அட்டூழியத்தை தத்துவப் பிரகாசர் என்ற புலவர், விஜயநகரப் பேரரசருக்கு ஒரு செய்யுள் மூலமாக தெரிவித்தார்.

''ஊழித் துலுக்கல்ல, ஒட்டியான் துலுக்குமல்ல
வீழித்துலுக்கு வந்துற்றதே .... .... ....''[16]

என்பது அந்தக் கவியின் பகுதியாகும்.

இவ்விதம் துலுக்கர் என்ற சொல், ''துலுக்கு'' என் மருவி பிற்காலத்தில் ''மலுக்கு'' என்று கூட பிரயோகம் பெ றிருப்பதைப் பல நூல்களில் காணலாம். இன்னும், இந் ''துருக்கர்'', ''துலுக்கர்'' என்ற சொற்களை வேராகப் பெற் பல புதிய தமிழ்ச் சொற்கள் தமிழ் வழக்கிற்கு வந்துள்ள அவை யாவன :

---

13. மதுரைத்தல வரலாறு – (மதுரை தமிழ் சங்க பதிப்பு)
14. A. R. 587 / 1902
15. தென்னிந்திய கோயில் சாசனங்கள் தொகுதி I.L.R. 52/ திருவொற்றியல்.
16. பெருந்தொகை : மதுரை தமிழ் சங்கப்பதிப்பு (1935) பாடல் எண் 1638

துருக்கம் — செல்லுதற்கரிய இடம், காடு, மலையரசன்

துருக்கம் — கஸ்தூரி, குங்குமம்

துருக்க வேம்பு — மலை வேம்பு

துருக்கற்பொடி — செம்பிளைக் கற்பொடி

துருக்கமாலை — குங்கும மலர்மாலை

துருக்கத்தலை — கரு நிறமுள்ள கடல் மீன் வகை

துலுக்கி — சிங்காரி

துலுக்கடுவன் — ஒருவகை நெல்

துலுக்கப்பூ — துலுக்கச் செவ்வந்தி

துலுக்க மல்லிகை — பிள்ளையார் பூ என வழங்கப் படும் மலர், செடி

துலுக்க பசளை — கீரை வகை

துலுக்க பயறு — பயறு வகை

துலுக்க கற்றாழை — கரிய பவளம் (நாட்டு மருந்து)

மற்றும், ''துருக்கர் நாடு'' என்ற நிலக்கூறு இருந்ததை பதின்மூன்றாவது நூற்றாண்டு இலக்கிய கர்த்தாவான பரஞ் சோதி முனிவர், தமது திருவிளையாடல் புராணத்தில் குறிப் பிட்டுள்ளதும்[17] இங்குபொருத்தமுடையதாக உள்ளது. மற்றும், தமிழில், ஷர்பத், சிப்பாய், மணங்கு, தர்பார், தைக்கா வக்கீல், அமீர், உலமா, காஜி, ஜாகிர், ஜமீன்தார் போன்ற துருக்கி மொழிச் சொற்களும், தமிழ்ச் சொற்களாக வழக்கிற்கு வந்துள் ளன.

---

7. பரஞ்சோதிமுனிவர் – திருவிளையாடற்புராணம்-மாணிக்கம் விற்ற படலம். பாடல்: எண் 65.

# 4

## சோனகர்

இவ்விதம் தமிழகம் போந்த இஸ்லாமிய அரபுகளை துருக்கர் என அழைப்பதுடன் சோனகர் என அழைக்கும் வழக்கமும் வந்தது. வில்லியம் லோகான் என்ற ஆங்கில நூலாசிரியர், யவனக என்ற சொல்தான் சோனகராகி விட்டதாக கருத்து தெரிவித்துள்ளார்.[1] "யோனா" என்ற பிராகிருதச் சொல்லின் மூலமாக பிறந்தது சோன என்றும், அத்துடன் தமிழ் "க" விகுதி சேர்ந்து "சோனக" என தமிழ் வடிவம் பெற்றுள்ளது என தமிழக தொல்பொருள் துறை இயக்குநர் டாக்டர் இரா. நாகசாமி அவர்களும் குறிப்பிட்டுள்ளார்கள்.[2] ஆனால் கி.மு. மூன்றாவது நூற்றாண்டில் இருந்த சோனகர் என்ற பௌத்த பிக்குவின் குறிப்பை மகாவம்சத்தில் படிக்கும்பொழுது, பாலி மொழி இந்தச் சொல்லுக்கு மூலமாக இருக்கலாம் என்பதும் சிந்திக்கத் தக்கதாக உள்ளது.[3] ஆதியில் இந்தச் சொல் எட்டாவது நூற்றாண்டு முதல் இசுலாமிய அரபியர்களைத் தான் குறித்து வந்துள்ளது. பொன்னுக்கு "சோன" (சொர்ண) என்ற பெயரும் உண்டு. "பொன்னொடு வந்து கறியோடு பெயரும்" பண்ட மாற்று முறையில் பொன்னைக் கொண்டுவந்து, தமிழக கைவினைப் பொருட்களை பெற்றுச் சென்ற காரணத்தினாலும் அவர்கள் சோனகர் என வழங்கப்பட்டு இருக்கலாம். பதினொன்றாவது நூற்றாண்டு முதல், இந்தச்சொல் தமிழ் வழக்கில் இருந்ததை ராஜராஜ தேவனது தஞ்சைப் பெருவுடையார்

---

1. William Logan - Malabar Manual (1881)
2. Nagasamy, Dr. R. South Indian Studies Vol. I. (1978)
3. Mahavamse–Dr. Geiger (Colombo. 1960) Chap. V. page : 114

கோவில் கல்வெட்டுக்கள் உறுதி செய்கின்றன, "சோனகன் சாவூர்" என்பவரும் "சோனக சிடுக்கு" என்ற அணியும் குறிப்பிடப்பட்டுள்ளது.[4] மற்றும், அந்த மன்னனது பதினைந்தாவது ஆட்சியாண்டு கல்வெட்டு "சோனக வரி" பற்றிய குறிப்பைத் தருகிறது.[5] இந்த மாமன்னனது மைந்தனான இராஜேந்திர சோழனது கோலார் கல்வெட்டில், "திருமந்திர ஓலை நாயகன் கங்கைகொண்ட சோழபுரத்து ராஜ்ய வித்தியாதரப் பெருந்தெரு சோனகன் சாவூர்" என்பவரை குறிப்பிடுகிறது. மதுரைப் பாண்டியரது வாரிசுப் போரில் பராக்கிரம பாண்டியனுக்கு உதவ வந்த சிங்களப் படையினை, இராமநாதபுரம் மாவட்டம் செம்பொன்மாரி அருகில், கி.பி. 1170ல், பரிசுப் பொருட்களுடன் அங்கிருந்த சோனகர் வரவேற்று மகிழ்ந்ததாக இலங்கை வரலாற்று நூலான மகாவம்சத்தை மேற்கோள்காட்டி பேராசிரியர் எஸ். கிருஷ்ணசாமி ஐயங்கார் வரைந்துள்ளார்.[6] இந்தச் செம்பொன்மாரிக்கு அண்மையில் அரபிகளது அஞ்சுவண்ணம் அமைந்திருந்ததை ஒருவாறு ஊகிக்க முடிகிறது.

பாண்டியர் கல்வெட்டுக்களில் இருந்தும், தமிழகத்தில் சோனகர் பற்றிய விவரங்கள் தெரிய வருகின்றன. பாண்டியரது மெய்க்கீர்த்திகளில், பல நாட்டவர்களில் ஒருவராக, சோனகர் சொல்லப்பட்டு இருக்கின்றனர்.

> "குச்சரரும் ஆரியரும் கோசலரும் கொங்கணரும்
> வச்சிரரும் காசியரும் மாகதரும்
> அருமணரும் **சோனகரும்** அவந்தியரு முதலாய .... ...."

என்பது சடையவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி. 1258 – 71) மெய்கீர்த்தியின் ஒரு பகுதியாகும்.[7] பாண்டியன் திருபுவனச்

---

4. நாகசாமி Dr. இரா–தஞ்சைப் பெருவுடையார் கோவில் கல்வெட்டுகள் (1962) பக்கங்கள் 232, 237, 255
5. AR-172/1903 (திருக்காளத்தி)
6. Krishnasami Iyangar Dr. S. - South India and her an Invaders (1921) p. 6.
   சதாசிவ பண்டாரத்தார் - தொ. மு. பாண்டியர் வரலாறு (1950) பக். 216
7. AR 455 / 1903 (மாறமங்கலம்)

சக்கரவர்த்தி சுந்தரபாண்டியனது கல்வெட்டு ஒன்றில் "சோனகற்கு சீவிதமாக அடைந்த நாளில்" என அவர்கள் பாண்டிய நாட்டில் புகலிடம் பெற்றதைக் குறிப்பிடுகிறது.[8] பாண்டியன் கோனேரின்மை கொண்டனாது திருப்புல்லாணிக் கோயில் கல்வெட்டு, "பவுத்திர மாணிக்கப் பட்டினத்து சோனக சாமந்தப் பள்ளிக்கு" சில ஊர்களை இறையிலியாக வழங்கப்பட்ட ஆணையைத் தெரிவிக்கிறது.[9]

இதனை, அந்தந்த நூற்றாண்டுகளில் எழுந்த தமிழ் இலக்கியக் குறிப்புகளும், உறுதிப்படுத்துகின்றன. பதினைந்தாவது நூற்றாண்டு இஸ்லாமிய இலக்கியமான பல்சந்தமாலை, சோனகர் தமிழக வாணிபத்தில் வளர்ந்தோங்கி விளங்கியதுடன், தமிழ் மண்ணுக்குரிய தண்ணளியிலும், தாளாண்மையிலும் மிக்கு நின்றதைச் சுட்டிக் காட்டுகிறது.

"வானது நாணக் கொடையாலுலகை வளர்த்தருளும்
சோனகர் வாழும் செழும்பொழில் .... ...."

என ஈதலற்த்திற்கு இலக்கணமான மாரியை நாணுமாறு இஸ்லாமியரது கொடை வாழ்க்கை அமைந்து இருந்ததைக் கோடிடுகிறது.[10] இத்தகு செழுமையான சமுதாயத்தில், பிற்காலத்தில் ஈய்ந்து சிவந்த இருகரத்து சீதக்காதி வள்ளல் தோன்றியதில் வியப்பு இல்லைதான். பன்னிரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்தவரான பெரும்பற்றப் புலியூரார் தமது திருவாலவாயுடையார் புராணத்தில் சோனகரை குறிப்பிட்டுள்ளார்.[11] பதின்மூன்றாவது நூற்றாண்டு பேரிலக்கியமான இரர்மாயணம் - யுத்த காண்டம் ஊர்தேடு படலத்தில் சோனகர் மனை பற்றிய குறிப்பு உள்ளது.[12] பதினான்காவது நூற்றாண்டு உரை ஆசிரி

---

8. AR 402 / 1903 (திருப்புல்லாணி)
9. களவியற்காரிகை - வையாபுரிப்பிள்ளை (பதிப்பு) 1931
10. திருவாலவாயுடையார் புராணம்-டாக்டர் உ.வே. சாமிநாத ஐயர் பதிப்பு (1972) பக் : 206
11. இராமவதாரம் – (ராஜம் கம்பெனி பதிப்பு) யுத்த காண்டம் ஊர்தேடும் படலம் – (பாடல் எண் 110
12. திருவிளையாடல் புராணம் – திருமணப்படலம் (பாடல் - 7·)

யரான நச்சினார்க்கினியர், பத்துப்பாட்டில் யவனர் என்ற சொல்லுக்கு **சோனகர்** என்றே பொருள் பிரித்துள்ளார். இவரை அடுத்து வாழ்ந்த பரஞ்சோதியாரும் நமது திருவிளையாடல் புராணத்தில் திருமணப்படலத்தில் சோனகர் பற்றி பாடியுள்ளார்.[13] அதே காலவரையில் படைக்கப்பட்டுள்ள சூடாமணி, திவாகர நிகண்டுகளில் சோனகருக்கு விளக்கம் வரையப்பெற்றுள்ளது. தமிழ்மொழி வழங்கிய பதினெட்டு தேசங்களில் சோனகமும் ஒன்று என நன்னூலில் ஆசிரியர் பவணந்தியார் குறித்துள்ளார். இவர் பதின்மூன்றாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். சென்னை பல்கலைக்கழக பேரரகராதியான லெக்ஷிகன் "சோனகம்" இந்திய துணைக் கண்டத்திற்கு மேற்கே உள்ள அரேபியா, பாரசீகம் நாடுகள் என தெளிவு படுத்தியுள்ளது. சிலப்பதிகார உரையாசிரியரான அடியார்க்கு நல்லார், பழந் தமிழ்நாட்டில், குரவைக்கூத்து, ஆய்ச்சியர் கூத்து போன்று, **"சோனக கூத்து"** என ஒருவகைக் கூத்து நடிக்கப்பட்டதை தமது உரையில் வரைந்துள்ளார். அதனை "துஞ்சாத அம்மைப் **பூச் சோனக மஞ்சரி"** எனக் குறிப்பிட்டுள்ளார். கடற்கரைப் பட்டினங்களான தொண்டி, மண்டபம், வேதாளை, கீழக்கரை, தூத்துக்குடி, காயல்பட்டினம், கடலூர் ஆகிய ஊர்களில் வழக்கில் உள்ள **"சோனகர் தெரு"**, என்ற பகுதிகள், பழந்தமிழர்களது குடியிருப்புக்களினின்றும் இவர்களது மனைகளை வேறுபடுத்திக் காட்டுவதற்காகவே எழுந்தவையாகும். அவை போன்றே, அவர்களது குடியிருப்புகளில் சில, அவர்களது தொன்மையைச் சுட்டும் வகையில் **"சோனகன் பேட்டை"** (இராமநாதபுரம் மாவட்டம்) **"சோனகன் விளை"** (நெல்லை மாவட்டம்) என்ற பழம்பெயர்களுடன் இன்றும் வழங்கி வருகின்றன. இதனை "நெய்தல் சார்ந்த மருதத்தில் நேர்வார் துலுக்கர், சோனகராம்" என பிரபந்த திரட்டு சுட்டியுள்ளது.[13] அதே நூலில் இன்னொரு பாடல், பச்சைமலை, கருப்பாறு, வச்சிர வளநாடு, காயல் பட்டினம், ஊர் மாலை, குங்குமம், பசும்புரவி, வெள்ளையானை, சிங்க கொடி ஆகியவை சோனகருக்கு உரியன என்பதாகக் குறிப்பிடுகிறது.[14]

---

13. பிரபந்த திரட்டு – (சென்னை 1982) பாடல் 325
14. பிரபந்த திரட்டு, (சென்னை 1982) பாடல் 326

மற்றும், "சோனக வாளை", "சோனக கெளுத்தி" என்ற மீன் வகைகளைப் பற்றிய விவரங்கள் பேரகராதியான லெக்ஸிகனில் கொடுக்கப்பட்டுள்ளன.[15] இன்னும் "சோனகச் சிடுக்கு" என்றதொரு அணியும் தமிழ் மகளிரது அணிகலன்களில் ஒன்றாக இருந்ததை தஞ்சை பெருவுடையார் கோவில் கல்வெட்டுக்களில் காணப்படுகின்றன.[15a] இவைகளும், இவை போன்ற ஏனைய வரலாற்று, இலக்கியத் தடயங்களும், வணிகத்திற்காக அரபு நாடுகளில் இருந்து தமிழகம் போந்த இஸ்லாமியர் இந்த மண்ணின் நல்ல மரபுகளுக்கு இயைந்து இஸ்லாமியத் தமிழர்களாகி, துலுக்கராகி, பின்னர் சோனகர் என்ற புதுச் சொல்லாலும் வழங்கப்பட்டு வந்தனர் என்பதை ஒருமுகப்படுத்தி உறுதி சொல்வதற்கு உதவுகின்றன. இவ்விதம் சோனகர் தமிழ்ச் சமுதாயத்தின் பல துறைகளிலும் கலந்து தமிழர்களாகவே மாறிவிட்ட பொழுதிலும் ஆந்திர மாநிலத்தில் ராஜராஜ சோழனது ஆட்சிப்பகுதியான திருக்காளத்தியில் நிலைத்து இருந்த சோனகர்களிடமிருந்து "சோனகவரி" வசூலிக்கப்பட்ட செய்தியும் நமது வரலாற்றில் உள்ளது.

15. லெக்ஸிகன் பேரகராதி (சென்னை 1932) பக் 3395

15A நாகசாமி இரா - தஞ்சை பெருவுடையார் கோயில் கல்வெட்டுக்கள் தொகுதி I. (1962) பக்கம் 42.

... 172/1930 (திருக்காளத்தி)

# 5

## ராவுத்தர்

பத்தாம் நூற்றாண்டின் இறுதியில் எழுந்து, பதினொன்றாம் நூற்றாண்டில்பரந்துவிரிந்த, சோழப் பேரரசின் நெருக்கம் காரணமாக தென்னகத்திற்கும் அராபிய நாடுகளுக்குமிடையே நிகழ்ந்த பண்டமாற்று அதுவரை இல்லாத அளவிற்கு விறுவிறுப்பை எட்டியது. அராபிய பாரசீக நாட்டுக் குதிரைகள் அதில் பிரதான இறக்குமதியாக இருந்தது. கடைச்சங்க நூலான பட்டினப்பாலை, ''நீரின் வந்த நிமிர் பரிப்புரவி'' நிறைந்த பூம்புகார் துறையைச் சித்தரிக்கிறது.[1]

''விழுமிய நாவாய் பெரு நீரோச்சுநர்
நனைந்தவை தேஎத்து நன்கலனுய்ம்மார்
புணர்ந்துடன் கொணர்ந்த புரவியோ டனைத்தும்
வைகறொறும் வழி வழி சிறப்பு ... ... ''

என்று **மதுரைகாஞ்சி**, புரவிகள் வந்த வழியை சிறப்பித்து சொல்கிறது.[2]

'' தறுகண் ஆண்மைய, தாமரை நிறத்தன, தகை சால்
மறுவில்லான் குளம் புடையவன் .......

என்றும்,

''பீள மா மயிலெருத் தன்னப் பெருவனப்புடையன
மாலை மா ராட்டத் தகத்தன வளரிளங் கிளியே
போது மேனிய .... .... .... ''[2a]

---

1. உருத்திரங்கண்ணனார் – பட்டினப்பாலை
2. மதுரைக்காஞ்சி – பாடல் எண். 8–16 : 28
2a. திருத்தக்க தேவர்–சீவகசிந்தாமணி (மணமகள் சிலம்பகம்) பாடல் எண் 158.6

எனக் குதிரையின் அழகில் மனதை பறிகொடுத்துப் பாடுகிறார் **சீவகசிந்தாமணி** ஆசிரியர்.

குதிரைகள், தமிழ்நாட்டிற்குப் புதுமையானவை அல்ல. குதிரைகளின் வண்ணம், வடிவு, தன்மை ஆகிய இயல்புகளைக் கொண்டு அவைகளுக்கு, பாடலம், கோடகம், இவுளி, வண்ணி, பரி, கந்துகம், புரவி, கனவட்டம், துரகம், கற்கி, அச்சுவம், துரங்கம், யவனம், குரகதம், வையாளி என பல பெயர்கள் தமிழ் இலக்கியங்களில் சூட்டப்பட்டுள்ளன. இன்னும் அவைகளின் உடற்கூறு இலக்கணங்களையும் வரையறுத்து பல நூல்களில் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. பரஞ்சோதி முனிவர், தமது பெருநூலான திருவிளையாடற் புராணத்தில் பல வகையான பரிகளையும், அவைகளின் இயல்புகளையும் அவைகள் எந்தெந்த நாடுகளைச் சார்ந்தவை என்பதையும் விவரமாகக் குறிப்பிடுவதுடன், "யவனம்" என்ற வகைப் புரவி **மக்கத்தில்** உள்ளவை என பாகுபடுத்தி பாடியுள்ளார். கடம்பர்களும் பல்லவர்களும் தங்களது ஆட்சியில் குதிரைகளை நம்பி இருந்ததாக பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரிகள் வரைந்துள்ளார்.[3] தொன்றுதொட்டு, தமிழ்நாட்டின் நால்வகைப் படைப் பகுப்பில் குதிரைப்படையும் ஒரு பிரிவாக இருந்து வந்துள்ளதை யாவரும் அறிவர். அறுபத்து நான்கு கலைகளில் குதிரைஏற்றமும் ஒன்றாக இருந்தது. போரில் குதிரையின் மறத்தைப் பற்றிப் பாடுவதற்கான துறையொன்று வகுக்பட்டிருந்ததை புறப்பொருள் வெண்பாமாலை சுட்டுகின்றது. பத்தாவது நூற்றாண்டில், சோழப் பேரரசுப் பெருக்கத்திற்கு' குதிரைகள் பெருமளவில் தேவைப்பட்டன. இந்த உண்மையை அந்தக் காலத்து இலக்கியங்களான கலிங்கத்துப்பரணி, குலோத்துங்க சோழன் பிள்ளைத் தமிழ், மூவருலா, முத்தொள்ளாயிரம் ஆகிய இலக்கியங்களில் சோழர்களின் வெற்றியுடன் குதிரைகள் பற்றிய புகழ்ச்சியும் புனைந்து ஆங்காங்கே குறிப்பிடப்படுகிறது. பாரசீக, அரபுநாடுகளில் இருந்து, சோழநாட்டில் குதிரைகள் இறக்குமதி செய்யப்பட்ட பொழுது அரபிய முஸ்லீம்களும் தமிழகத்திற்கு உடன்வரவேண்டிய நிர்ப்பந்தமும் ஏற்பட்டது. தொடக்கத்தில், குதிரைகள் பெரும்பாலும் கொங்கண, கேரளக்

---

3. Nilakamta Sastri. K.A. Foreign Notices of South India (1972) Introduction.

கரைப் பட்டினங்களில் கரை இறக்கப்பட்டு, 'கொங்கு நாட்டு வழியாக சோழ நாட்டிற்குள் கொண்டு வரப்பட்டன. இன்னும், கோழிக்கோடு நகரில் குதிரை வட்டம் என்ற பகுதியும், கோயம் புத்தூர் மாவட்டத்தில் குதிரைப்பாளையம் என்ற ஊரும் இருப்பது இங்கு நினைவு கூரத்தக்கது. இத்தகைய வணிகத்தில் ஈடுபட்டுள்ளவர்களை "குதிரைச் செட்டிகள்" என கல்வெட்டுக் களும் இலக்கியங்களும் குறிப்பிடுகின்றன.[5]

அரபுக்குடா நாட்டுக் குதிரைகளின் நடமாட்டமும் வணி கமும், பிற்காலப் பாண்டிய பேரரசு காலத்திலும் தொடர்ந்து விறுவிறுப்பாக நடைபெற்றன. ஆண்டுதோறும், பதினாயிரம் குதிரைகள் பாண்டிய நாட்டுப் பெருந்துறைகளான காயல் பட்டினம், தேவிபட்டினம், ஆகிய துறைகளில் கரை இறக்கப் பட்டன.[6] அங்கிருந்து, அவை முறையே நெல்லைக்கும் மதுரைக் கும் நடத்தி, கடத்திச் செல்லப்பட்டன. அந்த வழிகளில் ஒன்று இன்னும் முதுகுளத்தூர் வட்டத்தில் "குதிரை வழிக்காடு" என்று வழங்கப்படுகிறது. அந்த வழியைத் தொடர்நது திருச்செந்தூர் பரமன்குறிச்சியில், "குதிரை வழிக்குளம்" இருந்து வருவது ஆராயத்தக்கது. இந்தக் குதிரைகளை பாண்டியனுக்காகப் பெற்றுவரச் சென்ற வாதவூரர், திருப்பெருந்துறையில்திருப்பணி செய்து தீட்சை, பெற்று மாணிக்கவாசகரான கதையை திருப் பெருந்துறைப்புராணம், "கோட்டமிலா மாணிக்கவாசகர் முன் குதிரை ராவுத்தனாக" இறைவன் வந்து" நின்றதாகக் குறிப் பிடுகிறது.[7] அந்த திருப்பெருந்துறையில் உள்ள ஆலயத்தின் முகப்பு மண்டபம், குதிரை வீரர் சிற்பங்களுடன் அமைக்கப் பட்டு இருப்பதுடன், "ராவுத்தர் மண்டபம்" என வழங்கப்படு தலும் ஈண்டு குறிப்பிடத்தக்கது. மதுரை திருவிளையாடல் புராணத்தில், பரஞ்சோதி முனிவர், குதிரை வணிகராக வந்த கூடல்மாநகர இறைவனை,

"இன்னைறி மன்னர் மன்னர்
இனிமை கர்ந்து இராவுத்தற்கு"

---

5. A.R. 556/1904

6. கமால் – டாக்டர் எஸ்.எம் – இராமனாதபுர மாவட்ட வர லாற்று குறிப்புகள். (1984) பக்கம் 71–72

7. திருவாதவூரர் – திருப்பெருந்துறைப் புராணம்

நன்மை கூர் வரிசைத் தூசு
நல்குமென்று ...... "எனவும்,

பெரும்பற்றப்புலியூரார்

"துய்ய பேருலஇற் கெல்லாம் துலங்கிய ராவுத்தராயன்" எனவும் பாடுகின்றார்.[8] பதினைந்து நூற்றாண்டு இலக்கியங்களான கலிவெண்பாவிலும், கந்தர் அலங்காரத்திலும் அருணகிரிநாதர் தாம் வழிபடும் முருகவேளை,

" சூர்க்கொன்ற ராவுத்தனே ! .... .... ...."
" மாமயிலேறும் ராவுத்தனே! .... .... ...."

என குதிரை ராவுத்தனாகவே கற்பனை செய்து பாடியுள்ளார்.[9] பாரசீகக் குடா நாடுகளான, கிஷ், ஹெர்முஸ், குரோஷான், காத்திப், லஹ்ஸா ஆகிய இடங்களிலிருந்து ஆண்டொன்றுக்கு ஐயாயிரம் முதல் பதினாயிரம் குதிரைகள் பாண்டியப் பேரரசனால் தரவழைக்கப்பட்டன வென்றும் ஒவ்வொரு குதிரைக்கும் இருநூற்று இருபது தினார் (செம்பொன்) வழங்கப்பட்டதென்றும் வரலாற்று ஆசிரியர் வஸ்ஸாப் வரைந்துள்ளார்.[10]

இவைகளில், பாரசீக நாட்டில் இருந்து வரப்பெற்ற குதிரைகள் "பரி" என்றும், துருக்கி நாட்டுக் குதிரைகள் "துரகம்" என்றும், மத்திய ஆசியா கொராஸன் பகுதி குதிரைகள் "கோரம்" என்றும் வழங்கப்பட்டன.[11] இவைகளிலும், சேரமன்னர் குதிரை "பாடலம்" என்றும் சோழனது குதிரை "கோரம்" என்றும் பாண்டியது பரி "கனவட்டம்" என்றும் இலக்கியங்களில் குறிப்பிடப்படுகின்றன. "கோரத்துக் கொப்போ கனவட்டம் அம்மானை ..." என்பது கவியரசர் ஒட்டக்கத்தர்

---

8. பரஞ்சோதி முனிவர் – திருவிளையாடற்புராணம்.
பெரும்பற்றப் புலியவர் நம்பி – திருவாலவுடையார் திருவிளையாடல் புராணம் (நரிகுதிரையான படலம்)
பாடல் எண் : 83.
9. அருணகிரி நாதர் – கந்தர் அலங்காரம்
10. Elliott and Dowson - History of India (vol. III)
11 Sethu Pillai R.P. - Words and their Signifigance p. 22



''அரபு நாட்டுக் குதிரைகள்
பதிநான்காம் நூற்றாண்டில் தமிழகம் வருதல்''
(திருப்பிடைமருதூர் கோயில் கோபுர வண்ண ஓவியம்)

வாக்கு.[12] குதிரையைக் குறிக்கும் "பரி" என்ற சொல்லும் FAR என்ற பாரசீகச் சொல்தான். இந்த திசை சொற்களை ஒட்டி குதிரை சம்பந்தமான சேணம் (Cenam), லகான் (Lakan) சவுக்கு (Cavukka) சவாரி (Safary) என்ற பாரசீக சொற்கள் தமிழில் கலந்து தமிழாகவே வழக்கில் உள்ளன. இன்னும் கடிவாளம், மொக்கனி என்பன இத்தகு தொடர்புடைய தமிழ் வழக்காகும்.

அரபு நாட்டுக்குதிரைகளும் அரபியரும் பெரும் மரக்கலங்களில் நமது கடற்கரைக்கு வந்து சேரும் நிகழ்ச்சியை வண்ண ஓவியமாக திருப்புடை மருதூர் கோபுர தளத்தில் தீட்டப்பட்டுள்ளது.[13] அந்த ஓவியத்தை உற்று நோக்கியபின் இந்தப்பாடலைப் படித்துப்பாருங்கள்".

"இருங்கழிச் செறுலின் தீம்புளி வெள்ளுப்பு
பரந்தோங்கு வரைப்பின் வன்னகத் திமிலர்
கொழுமீன் குறைகிய துடிக்கட் ருணியல்
விழுமிய நாவாய் பெருநீரோச் சுநர்
நனந்தலை தேஎத்து நன்கல னும்ம்மார்
புணர்ந்துடன் கொணர்ந்த புரவி யோடனைத்தும்..."

—மதுரை காஞ்சி 8–16:26

இதனை ஒருமுறை மீண்டும் படித்து விட்டு ஓவியத்தை உற்று நோக்குங்கள், இந்தப் பாடலை அப்படியே தூரிகையால் தீட்டப்பட்டுள்ளது போன்று தெரியவரும். இந்த ஓவியம் பதினாம்காம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகும். இந்தக் குதிரை வணிகம் இரு நாடுகளின் உறவு நிலையில் ஒரு புதிய திருப்பத்தை ஏற்படுத்தியதுடன், தமிழகத்தில் பல்லாயிரம் அராபிய இல்லாமியர் வந்து தங்குவதற்கான பொன்னான வாய்ப்பும் வாழ்க்கை நிலையையும் உதவின. தமிழ் மண்ணில் வந்து இறங்கிய அரபிக் குதிரைகளைப் பழக்கி, தமிழ்நாட்டு முறையில் பயிற்சி அளித்து வரவும், அவைகளுக்கு ஏற்ற உணவு வகைகளை கொடுத்துப் பராமரிக்கவும், வைத்திய உதவி வழங்கவும், அரபிகளது பணி தேவைப்பட்டது. குதிரை வளர்ப்பில் பழக்கமும் திறமையும் மிக்கவர்கள் அன்றைய தமிழகத்தில் அரிதாக இருந்தனர்.[14] பதினைந்தாம் நூற்றாண்டு

---

12. ஒட்டக் கூத்தர் – தனிப்பாடல் திரட்டு
13. Hariharan S. South Indian Studies vol II p. 173 – 174.
14. Nilakanta Sastri K. A–Foreign Notices of S. India – p. 173

வரை தொடர்ந்த இந்த வணிகத்தைப் பற்றி பல வரலாற்று ஆசிரியர்கள் விவரமாக வரைந்துள்ளனர். இந்த நூற்றாண்டு இறுதியில் பாரசீக நாட்டில் இருந்து குதிரை வியாபாரிகளாக வந்த சுல்தான் குலி என்பவர் கி.பி. 1518ல் ஐதராபாத் சமஸ்தானத்தில் (ஆந்திராவில்) குதுப் ஷாஉறி பரம்பரை ஏற்படுத்தியவர் என்பது குறிப்பிடத்தக்கது.[15] அத்துடன் இந்தக் குதிரை வணிகத்தால் தமிழ்நாட்டு அரசு வருவாய் இனங்களில் மூன்று புதிய இனங்கள் ஏற்பட்டன. அவை, குதிரை வரி, குதிரைக் காணிக்கை, குதிரைப் பந்தி என்பவையாகும்.[16] பாண்டியர்களது ஆட்சியின் முடிவு வரை அமுலில் இருந்ததை பல கல்வெட்டுக்களில் இருந்தும் செப்பேடுகளில் இருந்தும் தெரிந்து கொள்ள முடிகிறது. மற்றும் நாயக்கர்களது, ஆட்சியின் பொழுது ''குதிரைக் கொடை'' என்ற சிறப்பும் வழக்கில் இருந்தது, தெரியவருகிறது.[17] இவ்விதம் ஒரு கால கட்டத்தில் தமிழக அரசியலில் பிரதான அங்கமான அரபு நாட்டுக் குதிரைகள் விளங்கியதுடன் அதனைக் கொணர்ந்து பழக்கி, பேணி, தமிழ் மன்னர்களுக்குப் பயன்படச் செய்து அரபிகள், ராவுத்தர்களென பெயர் பெற்றதும் தமிழர்களுடன் மண உறவு கொண்டு தமிழ்க் குடிகளாகவே மாறிவிட்டது, நமது வரலாற்றில் சிறப்பான அம்சமாகும்.

தொன்மைக் காலங்களில், தமிழக இஸ்லாமிய அரபிகளுக்கு இந்த சிறப்புப் பெயர் வழங்கப்பட்டது. நாளடைவில் குதிரை வணிகம் மட்டுமல்லாமல், அரசு சேவையில் குதிரை வீரராகவும், குதிரை அணியின் தளபதியாக விளங்கியவர்களைக் குறிக்கவும் இந்தச் சொல் பயன்பட்டுள்ளது. திருப்பெருந்துறையில், குதிரை வணிகராக வந்து, தனது துயர்களைந்த இறைவனை, ''துய்ய பேருலகிற்கெல்லாம் துலங்கிய ராவுத்த ராயன்'' என வாயார வாழ்த்துகிறார் வாதவூர் அடிகள். இராமப்பையன் அம்மானை குதிரையணி தளபதியை ''ராவுத்த கர்த்தன்'' என குறிப்பிடுகிறது,[18] ''ராவுத்தராயன்'' ''ராவுத்த

15. Syed Yousuff-Guide to Hydrabad anp Golconda Fort–p.14.
16. Tirumalai - Tirupathi Inscription - T. T. 164, G. T. 11, 40
17. A. S. S. I. VOL. IV (1886) p. 107
18. இராமய்யன் அம்மானை (1958)

கர்த்தன்'' என்ற வழக்குகளும் இஸ்லாமியத் தமிழர்களைச் சுட்டுவதற்காக எழுந்த சொற்களாகும். இந்தச் சொற்களுக்கான வேர், எந்த மொழியில் ஒட்டியுள்ளது என்பது ஆய்வுக்குரிய தொன்றாகும். ராபித்தூ என்ற அரபிச் சொல். தமிழில் விகாரமடைந்த ''ராவுத்த'' என்ற வழக்கு பெற்று இருப்பதாக சிலர் கருதுகின்றனர். எதிரியை எதிர்க்க சித்தமாக இருப்பவன் என்பதே ராபித்தூ. தமிழில் மட்டுமல்லாமல், ''ராவுத்தர்' தெலுங்கு மொழியிலும் ''ராவுத்'' எனச் சற்று குறுகலான வடிவில் வழக்கில் இருந்து வருகிறது. குதிரை வீரன் என்ற பொருளில், ''இம்மாடி ராகுத்தராயன்'' ''ராகுத்தராயன் சிங்கப்ப நாயக்கன்'' போன்ற தெலுங்கு மன்னர்களது பெயர்கள் திருப்பதி – திருமலை கல்வெட்டுக்களில் காணப்படுகிறது.[19] ஈரோடு கல்வெட்டு ஒன்று, தெலுங்கு ஆளுநரான ''பர்வத ராகுத்தன்'' என்பவரைக் குறிப்பிடுகிறது.[20] ராஜராஜ சோழனது விருதுகளில், ''ராகுத்தமிண்டன்'' என்ற சொல்லும் வழங்கி வந்துள்ளது, வடஆற்காடு மாவட்டம், காவேரிப் பாக்கம் கல்வெட்டுக்களில் கி. பி. 1509ல் சிங்கய ராவுத்தன் தங்கல் என்ற கிராமமும் கி. பி. 1530ல் காமாட்சி ராவுத்தன் தங்கல் என்ற கிராமம் குறிப்பிடப்பட்டுள்ளன.[21] சேலம் மாவட்டம் ஆறகழூர் கல்வெட்டு ஒன்றில் ஹொய்சாள ராமதேவரது பதின்மூன்றாவது ஆட்சியாண்டில், நாட்ட மங்கலம் என்ற கிராமம் ''ராகுத்தராயன் இறையிலி தேவதானமாக'' வழங்கப்பட்ட செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது.[22] மதுரை சொக்கேசர் ஆலயத்திருப்பணி செய்தவர்களில் திம்மு ராவத்தர் என்பவர் குறிப்பிடப்படுகிறார்.[23] அவரது காலம் கி. பி. 1564 என்றும் தெரிய வருகிறது. அவரைத் ''தண்டமிழ்க் கச்சி வளம்பதி வாழுஞ் சதுரன்'' என்றும் ''திண்டருங் கீர்த்தி மிக்க சுவப் பையன் திம்மு ராவுத்தனே'' என்றும் புகழ்ந்து உரைப்பவை திருப்பணி மாலையில் உள்ள தொடர்கள்.

---

19. A.R. 442/1906 – கோபி செட்டிபாளையம்
20. A.R. 169/1910 – விஜயமங்கலம்
21. A.R. 367/1912 – காவேரிப்பாக்கம்
22. A.R. 414/1913 – ஆறகழூர்
23. மதுரை திருப்பணி மாலை (பாடல் எண்)

பெரும்பாலான முஸ்லீம்கள், இன்றும் "ராவுத்தர்" என்ற விகுதியை தங்கள் பெயருடன் சேர்த்துக் கொள்வது போல தமிழ் நாட்டில் உள்ள தெலுங்கு மொழி பேசும் நாயக்கர்களில் சிறு ஒரு பிரிவினர் தங்கள் பெயருடன் "ரவத்" என்ற விகுதியையும் இணைத்து வழங்குகின்றனர். தென்னகத்தில் நிலவும் சாதிகளையும் குடிகளையும் முழுமையாக ஆய்வு செய்து பல தொகுதிகளாக தமது ஆய்வினை வெளியிட்டுள்ள ஆசிரியர் எட்கார் தர்ஸ்டன், ராவுத்தர் என்பவர்கள், இஸ்லாமிய மக்களான லெப்பை, மரக்காயர், மற்றும் சோனகர் பயன்படுத்தும் விருதுப்பெயர் என்றே குறிப்பிட்டுள்ளார்.[24] பிற்கால இலக்கியமான பிரபந்த திரட்டு, தமிழகத்தில் வசித்து வரும் பல்வேறு சாதிகளில் ராவுத்தரும் ஒரு பிரிவினர் என தொகுத்துள்ளது.[25]

தங்களது தொன்மையை இவ்விதம் நினைவு கூறும் வகையில் தமிழக ராவுத்தர் இன்றும் மணவிழாக்களில் பொழுது, மணமகனை நன்கு அலங்கரித்து குதிரைமீது ஏற்றி வைத்து, மணமகள் இல்லத்திற்கு அழைத்துச் செல்லும் வழக்கம் உடையவர்களாக இருக்கின்றனர். இந்தப்பழக்கம், தமிழக இஸ்லாமியர்களிடையே நானூறு ஆண்டுகளுக்கு முன்னரும் இருந்து வந்தது என்பதை பெரும் புலவர் உமறுவின் பாடல்களில் இருந்த புலப்படுகிறது. இறைமறையை வெளிப்படுத்தி இஸ்லாத்தைப் பரப்பிய ஏந்தல் நபிநாயகம் அவர்களது வாழ்க்கையை விவரிக்கும் சீறாப்புராண காவியம், தமிழ் நாட்டில் இயற்கைப் பின்னணி, பழக்க வழக்கங்கள், மரபுகள் ஆகியவைகளை உள்ளடக்கியதாக புனையப்பட்டு உள்ளது. மணமகனாகிய முகம்மது நபி (ஸல்) அவர்கள் மணக்கோலத்துடன் பரியில் அமர்ந்து பவனியாக மணமகள் இல்லம் சென்றதை,

"தாவிய பரிமேற் சேனைத் தளத் தொடும் வீதி வாயின்
மேவிய வள்ளலார் தம் மெய் எழில் நோக்கி .... ....
"கடுநடைப் புரவி மேலாய் கவிகை மாநிழற்ற வந்த
வடிவுடை முகம்மதின் தன் வனப்பலால் வனப்பு
மில்லை .... ..

24. Edgar Thurston-Castes and Tribes in South India (1909 vol. 5. p. 247
25. பிரபந்த திரட்டு (1982) பாடல் எண் : 362

"திரையின்றி பிறந்த மொழியார் செழுமணித் தீபங்
கனேந்த
இருபுற நெருங்கி அயினிநீர் சுழற்ற வெண்ணில
ஆலத்தி எடுப்ப
பாவையின் மறையில் குரவையுஞ் சிலம்ப பரியை
விட்டிரங்கின என்றே."

எனவும் அவர் பாடியுள்ளார்.[26] பாய் பரியினரான இஸ்லாமியரைப் போன்று தமிழகத்தில் "நகரத்தார்" "நாட்டுக் கோட்டையார்" என்று சிறப்புடன் அழைக்கப்படுகின்ற செட்டி மக்களது மணவினையில் முதல்அங்கமாக, இவளி மீது மணமகன் இவர்ந்து மணமகள் இல்லம் சென்று மணவினை மேற்கொள்வது இன்றளவும் இருந்து வருவது குறிப்பிடத்தக்கது. அத்துடன் இந்திய நாட்டின் பிற மாநிலங்களான காஷ்மீர், ராஜஸ்தான், பஞ்சாப், உத்திரப்பிரதேசம், மத்திய பிரதேசம் ஆகிய மாநிலங்களில் உள்ள மக்களிடமும் இந்த பழக்கம் இருந்து வருகிறது. இதனை, அங்கு "பராத்" (பவனி) யென அழைக்கின்றனர். இன்னும் விஞ்ஞானத்தில் மிகமிக வளர்ச்சியுற்ற சோவியத் யூனியனில் கூட காஜகிஸ்தானில் மணமகன், மணமகளைத் தனது குதிரையில் ஏற்றிக்கொண்டு ஊருங்கிளையும் உடன்வர, மணவினைப் பதிவு அலுவலகத்திற்குச் செல்வது இன்றளவும் வழக்கமாக இருந்து வருகிறது.

இவ்விதம், தமிழகத்தில் அரபிக் குதிரைகளுடன் வந்து தங்கி நிலைத்த தமிழக இசுலாமியரான ராவுத்தர்களது உறைவிடம், "ராவுத்தர்" என்ற விகுதியுடன் பல ஊர்கள் அமைந்து உள்ளன. அவைகளில் சில :-

1. ராவுத்த நல்லூர் — கள்ளக்குறிச்சி வட்டம்
2. ராவுத்த நல்லூர் — காஞ்சிபுரம் வட்டம்
3. ராவுத்தன்பட்டி — குளித்தலை வட்டம்
4. ராவுத்தன்பட்டி — திருமங்கலம் வட்டம்
5. ராவுத்தன் வயல் — பட்டுக்கோட்டை வட்டம்

---

26. உமறுப்புலவர் – சீறாப்புராணம் – மணம்புரிபடலம்
பாடல்கள் 58, 73

6. ராவுத்தர் பாளையம் — திருநெல்வேலி வட்டம்
7. ராவுத்தர் சாயபு தர்கா — அறந்தாங்கி வட்டம்
8. ராவுத்த ராயன் குப்பம் — திருக்கோயிலூர் வட்டம்
9. ராகுத்த ராய நல்லூர் — ஈரோடு வட்டம்.

இவை அனைத்தும் இஸ்லாமியத் தமிழர்களது தொன்மையான இருப்பிடங்கள் என்பதில் ஐயமில்லை. மேலும், ராவுத்தருக்கும் குதிரைக்கும் உள்ள சம்பந்தத்தை தெரிவிக்கும் வழக்கு இராமநாதபுரம் மாவட்டத்தில் ''குதிரைக்காக ராவுத்தர் கொக்காகப் பறந்தார்'' என்பது இன்றும் வழக்கில் உள்ளது. ஆனால் தமிழகமெங்கும் உள்ள ராவுத்தர் வழியினரிடம் இன்று குதிரையும் இல்லை; குதிரைச் சேவகமும் தொழிலாக இல்லை என்பது யாவரும் அறிந்த உண்மை.

# 6

## மரக்காயர்

தமிழக இஸ்லாமியர்களில் இன்னொரு பிரிவினர் மரக்கலராயர் என்ற மரைக்காயர்கள். பதினைந்தாம் நூற்றாண்டில், போர்ச்சுகல் நாட்டு பரங்கிகளது கடல் வலிமையினால் அரபிக் கடல் வழி பாதிக்கப்பட்டு கொள்ளையர் வழியாக மாறியது. அரபிக்குடா நாடுகளில் நிலவிய பலமற்ற அரசியல், அரபுகளது வெளிநாட்டு வணிகத்திற்கு முற்றுப்புள்ளி வைத்தது. அவர்கள் தமிழகத்தில் குடியேறி, தமிழ்ச் சமுதாயத்தின் ஒரு பகுதியாக நிரந்தரமாக தமிழ் மண்ணில் நிலை கொள்வதற்கான நிர்பந்தத்தை ஊக்குவித்தது. இதனால், போர்ச்சுகீஸியருடன் போரிட்டும் அவர்களது கீழைநாட்டு வணிகத்தில் போட்டியிட முடியாத தமிழக இஸ்லாமியர் கடலோர உள்நாட்டு வாணிபத்தில் கவனத்தைச் செலுத்தினர். அத்துடன், அண்மை நாடுகளான வங்காளம் இலங்கை, பர்மா, ஆகிய நாடுகளுடன் அரிசி, தேக்குமரம், கைத்தறித்துணி, ஆடு மாடுகள், ஆகியவைகளைத் தங்கள் மரக்கலங்களில் எடுத்துச் சென்றுவிற்றனர். மேலும், அவர்கள் மேற்கொண்டு இருந்த பல்வகைப்பட்ட தொழிலைக் கீழ்க்கண்ட பழம் பாடல்[1] விவரிக்கின்றது.

“ நீரோட்டஞ் சங்கெடுத்தல். நித்தில சலாப,
நீந்தி நீர்க் குளித்தல், வலையின் மீன் இழுத்தல்
பார்நீட்ட மறிதல், மீன் உலத்தல், மீன் விற்றல்,
பாறு முதற்பின் ளோப்பல், வெளிருப்புப் படுத்தல்,
காரோட்டங் காணல், மீன் கோட் பறையோடத்தி
கண்டை கோட்டல், வலைபாட்டு கழற ம்பியோட்டல்
சூழ்காட்டல், பிறர்தேசம் புகுதல் .... .... ... ” .

---

1. பிரபந்த திரட்டு (1982) பாடல் எண் 351

பெரும்பாலும், கிழக்கு கடற்கரையோரப் பட்டினங்களான நாக பட்டினம், அதிராம்படடினம், பாசிப்பட்டினம், தொண்டி, தேவி பட்டினம், பாம்பன் இராமேஸ்வரம், வேதாளை, பெரியபட்டி னம், கீழக்கரை, தூத்துக்குடி. காயல்பட்டினம், ஆகிய ஊர்களில் உள்ள இஸ்லாமியர் இந்த தொழில்களில் அண்மைக் காலம் வரை ஈடுபட்டு இருந்தனர். இவர்கள், தோணி, டிங்கி, சாம்பான் என்ற வகையான மரக்கலங்களைத் தங்கள் தொழிலுக்கு பயன் படுத்தினர். அவர்கள் மரைக்காயர், (மரக்கலராயர்) எனவும் வழங்கப்பட்டனர். மரக்கலம் என்ற பொருளைத் தருகிற "மர்க்கப்" என்ற அரபுச் சொல்லின் தமிழ் ஆக்கமே மரைக்கார் என்பது பேராசிரியர் முகம்மது ஹூஸைன் நயினார் அவர்களது முடிவு. தமிழக இஸ்லாமியரின் ஒரு பிரிவினரை, – தங்களுக்கு ஒப்பாரும் மிக்காருமின்றி கடல் வணிகத்தில் ஈடுபட்டிருந்த இஸ்லாமியரைக்–குறிக்க பயன்படுத்தப்பட்ட தமிழ்ச் சொல்லே மரைக்காயர் என்பது. மரக்கலராயர் என்ற நல்ல தமிழின் திரிபு தான் மரைக்கார் அல்லது மரைக்காயர். குதிரைப் படை யின் தளபதியைக் குறிக்க வழங்கிய ராகுத்தராயன் என்ற சொல் ராவுத்தன் எனத் திரிந்தாற் போல மரக்கலங்களின் தலைவன் என்ற பெயரில் மரக்கலராயர் என புனையப்பட்டுள்ள பிற் காலத் தமிழ்ச் சொல் இங்ஙனம் திரிபு பெற்றுள்ளது.† இதனைப் போன்று மரக்கலம் சம்பந்தப்பட்ட இஸ்லாமியரைக் குறிக்க "ஓடாளி" (ஓடாவி) என்ற பெயரும் உள்ளது, ஆனால் இந்தச் சொல் கீழக்கரை, தொண்டி போன்ற பழமையான கடற்கரை ஊர்களில் "ஓடாளி" (ஓடாவி) என வழக்கு பெற்றுள்ளது. ஓடத்தை ஆள்பவன் என்ற பொருளில்.

அண்மை நாடான இலங்கையில், இஸ்லாமியர்களை சிங்கள மொழியில் மரக்கல மினிசு" என்றே வழங்குகின்றனர்.[2] மரக்கலத்தில் வந்த (வணிக) மக்கள் என்னும் பொருளில், தமிழ்ப் பதமான மரக்கலம், சிங்களத்திலும் திசைச் சொல்லாக வழங்குகிறது. "கட்டுமரம்" என்ற தனித்தமிழ்ச் சொல், ஆங்கில மொழியில் "கட்டமரான்" என்றால் போல, இத்தகைய வணிகத்தில் பயன்படுத்தப்பட்டுள்ள மரக்கலத்திற்கு ஒரு வகை யான இறை விதிக்கப்பட்டது. செக்கிறை, தறிஇறை, போன்று

---

[illegible] – கலையும் பண்பாடும் (1962) பக். 58,

மரக்கலக் கர்ணம் என்பதே அந்த வரியாகும். இதே சொல் பிற்காலத்தில் மரக்காணம் என மருவியுள்ளது. செங்கை மாவட்டத்தில் சென்னை பட்டினத்திற்கு அருகில் உள்ள கடல் துறை ஒன்றினுக்கு மரக்காணம் என்ற பெயரே நிலைத்து விட்டது. இந்த ஊரைப் போன்று, இராமநாதபுரம் மாவட்டத்தில் ''மரைக்காயர்'' என்ற பெயருடன் கடற்றுறை யொன்று மண்டபத்திற்கு அண்மையில் ''மரைக்காயர் பட்டினம்'' என வழங்கி வருகிறது. கீழக்கரையில் வாணிபச் செல்வாக்கில் மிகுந்து நின்ற ஹபீபு மரக்காயர் என்பவர் நினைவாக எழுந்தது இந்த ஊர். மற்றும், புதுக்கோட்டை மாவட்டத்தில் உள்ள பதினைந்தாவது நூற்றாண்டு கல்வெட்டு ஒன்றில் ''மரக்கலச் சுதந்திரம்'' என்றதொரு தொடர் காணப்படுகிறது.[4] மரக்கலங்கள் அமைக்கத் தகுந்த மரங்களைக் காடுகளில் இருந்து வெட்டிக் கொள்ளும் உரிமைதான் இங்ஙனம் குறிக்கப்பட்டுள்ளது.

இந்த மரைக்காயரில் ஒரு பிரிவினர் — ''தண்டல்'' என அழைக்கப்பட்டுவந்தனர். இதனது நேரடியான பொருள் படகுத் தலைவன் என்பதை தமிழில் மட்டும் அல்லாமல், தண்டல் (சிங்களம்) தண்டெலு (தெலுங்கு) தந்தல் (மலையாளம்) தண்டேல் (உருது) (அரபி) ஆகிய பிற மொழிச் சொற்களிலும் வழங்கப் படுவது இங்கு சிந்திக்கத்தக்கது. கடல் வாணிபத்தின் பிறிதொரு பகுதியான மீன் வணிகத்தில் ஈடுபட்டுள்ள இன்னொரு பிரிவினர் ''சம்மாட்டி'' என்றும் அழைக்கப்படுகின்றனர். மீன் பிடித்தலுக்குப் பயன்படும் நடுத்தர வகையான ''**சாம்பான்**'' என்ற வள்ளத்தை இயக்குபவர் என்ற பொருளில் **சாம்பான் ஒட்டி** காலப் போக்கில் **சம்மாட்டி** யானதாகத் தெரிகிறது. இராமநாதபுரம் கடற்கரைப் பகுதிகளில் உள்ள இந்து, இஸ்லாமியர் ஆகிய இரு பிரிவினரான மீன் வணிகர்களும் சம்மாட்டி என்றே குறிக்கப்படுகின்றனர். சித்தூர் தர்ஷணப் பள்ளியின் கி.பி. 1409ம் ஆண்டு கல்வெட்டிலும் பரமக்குடி வட்டம் எமனேஸ்வரம் கிரா

---

† இதே சொல் அண்டை நாடுகளான இலங்கையிலும், கேரளத்திலும் சில பகுதிகளில் உள்ள இஸ்லாமியரைக் குறிக்கும் இனப்பெயராகவும் வழங்கப்பட்டு வருகின்றது.

4. Pudukottai State Inscriptions No : 58

மத்து கி.பி. 1567ம் ஆண்டு கல்வெட்டிலும் "சம்மாட்டி" என்ற சொல் கையாளப்பட்டுள்ளது.[5] எதிர்க்கரையான ஈழத்தில் வணிகர்களைக் குறிக்க "சம்மாங்காரர்" என்ற வழக்கு உள்ளது. "சம்மாந்துறை" என்ற ஊரும் அங்கு கிழக்கு மாகாணத்தில் உள்ளது. மலேசியா மொழியிலும், வணிகர்கள் "ஹம்மங்கராய" என்ற மூன்று சொற்களுக்கும் வணிகம் என்ற பொருளில் தொடர்பு உள்ளது[6]. காரணம் இந்த நாடுகளுடன் தமிழக இஸ்லாமியர்கள் வணிக தொடர்புகளுடன் மண உறவுகளும் கொண்டிருந்தது, இதற்கு காரணமாக இருக்கலாம். இந்த இஸ்லாமியர், ஈழத்தில் "மரிக்கார்" என்ற பிரிவினராக வழங்கப்படுகின்றனர். ஆனால், பர்மா, மலேஷியா நாடுகளில் இவர்கள் "சோழிய முஸ்லீம்கள்" என்று அழைக்கப்படுகின்றனர். பதினோராம், பன்னிரண்டாம் நூற்றாண்டுகளில், தமிழகம் முழுதும் சோழர்களது செங்கொற்றக் குடையின் கீழ் இருந்ததால் தமிழகத்தின் கிழக்கு கடற்கரை முழுவதும் சோழ மண்டலக் கரை என்றே குறிக்கப்பட்டது. (இந்தச் சொல்லை பிற்கால ஆங்கிலேயரும், சோழ மண்டலக் கரை முழுவதையும் "கோரமாண்டல் கோஸ்ட்" எனப்பெயரிட்டு அழைத்தனர்). இந்தக் கரையினின்றும் அந்த நாடுகளுக்குச் சென்று குடியேறிய முஸ்லீம்கள் என்ற காரணத்தினால் "சோழிய" (சோழ நாட்டு) என்ற சொல் சேர்க்கப்பட்டுள்ளது. ரங்கூனிலும் (பர்மா) பினாங்கிலும் (மலேஷியா)சோழிய முஸ்லீம் பள்ளிகளும், சங்கங்களும், வீதிகளும் இருந்து வருவது இங்கு குறிப்பிடத்தக்கது.

மரைக்காயர் பற்றிய விவரங்களைக் குறிப்பிடும் பொழுது மரைக்காயரில் பதினேழாவது நூற்றாண்டின் பிற்பகுதியில் செம்மாந்து நின்ற சீதக்காதியின் புகழ்வடிவு நம் மனத்திரையில் வரைபடமாக வளர்த்தோங்கி விளங்குகிறது. கீழக்கரையை தாயகமாகக் கொண்ட வள்ளல் ஷெய்கு அப்துல் காதிரு மரைக்காயர் அவர்கள் தம்மை நாடி வந்தவர்களுக்கு, பொன்னும் பொருளும், ஈந்து தமிழ் வள்ளல்கள் வழியிலே தமிழ் மரபு காத்தார். எழுவானையும் தொடுவானையும் தொடர்ந்து சென்ற அவரது நாவாய்கள், சுமந்து வந்த செல்வமனைத்தும்

5. A.R. 392/1914 — (பரமக்குடி)

6. A.R. 324 / 1912 — (திர்ஷணப்பள்ளி)

ஈதல் அறத்திற்கு ஈடாக நின்றன. பெரும் புலவர்களான படிக் காசுத் தம்பிரானும் நமச்சிவாயப் புலவரும் உமறு கத்தாப் புலவரும் இயற்றிய பாக்கள் அவரது வள்ளண்மைக்கு காலமெல்லாம் கட்டியங்கூறி, அவரது புகழைப் போற்றி வருகின்றன.[7] வள்ளல் அவர்களது வாணிபச் சிறப்பை பெரும் புலவர் உமறு கத்தாப்பின் "சீதக்காதி திருமண வாழ்த்து" பாக்கள் வழிகாணலாம். திரிகாலமும் உணர்ந்த தவச் செல்வர் ஞானி சதக்கத்துல்லாவை ஆசானாகவும், வணங்காமுடி வேந்தரான விஜய ரகுநாத (கிழவன்) சேதுபதியை உடன்பிறவாச் சோதரராகவும் கொண்டிருந்த இந்த வள்ளலை, தமிழ் வழங்கும் ஐந்திணை யெங்கும், செத்தும் கொடுத்த சீதக்காதி என, சென்ற இருநூறு ஆண்டுகளுக்கு மேலாக முழங்கி வருவதே அவரது நல்லியல்புகளுக்கு நிலையான சான்றாகும்.

7. பிறையன்பன் - கலையும் பண்பாடும் (இலங்கை) 1962 – பக். 58

# 7

## லெப்பை

இங்ஙனம், தமிழ்ச் சமுதாயத்தினரான இஸ்லாமியர் நாளடைவில் துருக்கர், சோனகர், ராவுத்தர், மரைக்காயர் என்று பிரிவினைப் பெயர்களால் பிற்காலங்களில், லெப்பை, நயினார், தரகனூர்முதலியார் அம்பலம், சேர்வை என்ற பெயர் விகுதிகளை இணைத்துக் கொண்டனர். அவர்கள் வாழ்ந்த அந்தந்தப் பகுதியில் உள்ள இதர பிரிவினர்களின் பெயராலே இவர்களது அந்தப் பெயர் விகுதிகளும் அமைந்தன. லெப்பை குடிக்காடு (திருச்சி மாவட்டம்) நயினார் கோவில், நயினார் பேட்டை. (முகவை மாவட்டம்) நயினார்புரம் (பசும்பொன் மாவட்டம்) நயினார் அகரம் (நெல்லை மாவட்டம்) என்று அவர்களது ஊர்ப் பெயர்களும் அந்த மக்களது விகுதிப்பெயருடன் வழங்கப்படுகிறது ஈண்டு குறிப்பிடத்தக்கனவாகும். "லெப்பை" என்ற சொல் தமிழகமனைத்தும் பரந்து வாழும் எல்லாப் பகுதியிலும் உள்ள இஸ்லாமியரைக் குறிப்பிடும் பொதுச் சொல்லாக உள்ளது. அரபுத் தாயகத்தில் இருந்து வந்து நாளடைவில் தமிழ் முஸ்லீம்களாக மாறிய பொழுதும், அவர்களது தலையாய கடமை திருமறையை ஓதியும், பிறருக்கு ஓதுவித்து உணர்த்தும் பணிபாக இருந்தது. என்றாலும், இவர்களது வாழ்க்கை நிலை, நெசவாளியாக, விவசாயியாக, கடல் தொழிலாளியாக இருந்து வந்தது. ஆனால், இவர்கள் பதினேழு, பதினெட்டாவது நூற்றாண்டுவரை லெப்பைகள் என்ற பொதுப் பெயரிலேயே வழங்கப்பட்டனர். யாக்கோபு சித்தரது பாடல் ஒன்றில் "சொல்

---

முகமது ஹுசேன் நயினார். Dr – வள்ளல் சீதக்காதி (1953) தனிப்பாடல் இணைப்பு பக். 45, 47

லவே நால்வேத லெப்பைமார் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. மார்க்கப்பணியில் முனைந்து இருப்பவர்கள் என்ற பொருளில் 1881ம் ஆண்டு ஆங்கிலேயரது மக்கள் கணக்கு அறிக்கை, லெப்பைகள் பற்றிக் குறிப்பிடும்பொழுது, அவர்கள் தஞ்சை, மதுரை இராமநாதபுரம் உள்ளிட்ட மாவட்டங்களில் பிரதானமாக வாழ்ந்து வருவதாகவும், மேற்குக்கரை முஸ்லீம், "மாப்பிள்ளைகளைப் போல இவர்களும் சோழ மண்டலக்கரை மாப்பிள்ளை" யென வருணித்துள்ளது. அராபிய இரத்தக் கலப்புடன் கூடிய மதம் மாறிய திராவிடர்களும் இந்துக்களுமான இவர்கள் சுறுசுறுப்பும், முன்னேற்ற மனப்பாங்கும் மிக்க வியாபாரிகள் எனவும் அந்த அறிக்கை குறிப்பிடுகிறது. இவர்களில் பெரும்பான்மையினர் வணிகத்திலும், கொடிக்கால் விவசாயத்திலும், சிலர், நெசவு, சங்கு, முத்துக்குளித்தல், சமயப்பணி ஆகியதொழில்களிலும் ஈடுபட்டுள்ளதாகவும் அறிவிக்கிறது.[2]

இந்த அரசு அறிக்கையை அடுத்து வெளி வந்துள்ள மதுரை கெஜட்டீர், "லெப்பைகள் நேர்த்தியான, உறுதியான, செயல்திறம் மிக்க மக்கள் என்றும், எந்தச் சூழ்நிலையையும் சமாளித்து நடந்து கொள்ளக்கூடியவர்கள்" என்றும் புகழுரை வழங்கியுள்ளது.[3] இவர்களில் பெரும்பான்மையினர் வணிகத்திலும், சிறிதளவினர் கைவினைக் கலைகள், கடல் தொழில், போன்ற துறைகளில் ஈடுபட்டிருப்பதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. தொண்டை மண்டலத்தில் உள்ள வெப்பைகள் வெற்றிலைக் கொடிக்கால் விவசாயிகளாகவும், தோல் வியாபாரிகளாகவும், சிறு ·தொழில் வணிகர்களாவும் அவர்களது பெண் பாலர், பாய் நெசவு தொழிலில் திறமை உள்ளவர்களாக இருப்பதாக தென் ஆற்காடு மாவட்டம் கெஜட்டீர்[4] குறிப்பிடுகிறது. வட ஆற்காடு மாவட்ட லெப்பைகள், வசதி உள்ளவர்களாகவும் திருமறைப்படி வாழ்வியலில் வாழ்வாங்கு வாழ்பவர்களாகவும்

---

2. Census Repont – Govt. of India (1881–AD)
3. Frana's W. - Madurai Gazetteer (1921)
4. Rajaram Roa - S. Manuel of Ramnad Samasthanam (1898) p. 49

வட ஆற்காடு மனுவலில் ஆசிரியர் ஸ்டுவர்ட் குறிப்பிட்டுள்ளார். இராமநாதபுரம் மாவட்ட கிழக்குப் பகுதியில் லெப்பைகள் நெசவிலும் விவசாயத்திலும் மிகுந்து இருப்பதாக இராமநாத புரம் மானுவலில் வரையப்பட்டுள்ளது.[5] சித்தார்கோட்டை, எக்ககுடி, பனைக்குளம், பேரையூர், கமுதி, அபிராமம், ஆகிய ஊர்களில் அவர்கள் முன்னர் நெசவில் ஈடுபட்டிருந்ததைக் குறிக்கும் "பாவோடி"கள் இன்றும் உள்ளன. மேலும் அருப்புக் கோட்டை, கடையநல்லூர், புளியங்குடி முஸ்லீம்கள் நெசவில் மிகுதியாக தொடர்ந்து ஈடுபட்டிருப்பது இந்த கூற்றினைத் வலியுறுத்துவதாக உள்ளது.

மற்றும் "நயினார்" "முதலியார்" விருதிகளையுடைய இஸ்லாமியப் பெயர்கள் திருநெல்வேலி மாவட்டத்திலும் "தர கனார்" என்ற சொல் குமரி மாவட்டத்திலும் "அம்பலம்", "சேர்வை" விருதிகளையுடைய இஸ்லாமியப் பெயர்கள், இராமநாதபுரம், பசும்பொன், மதுரை மாவட்டங்களிலும் இன் றளவும் வழக்கில் உள்ளன. பசும்பொன் மாவட்டத்தில் திருப் பத்தூர், இளையாங்குடி, இராமநாதபுரம் மாவட்டத்தில் ராஜ சிங்கமங்கலம், இராமநாதபுரம், கீழக்கரை, பெரியபட்டினம், மண்டபம், தொண்டி ஆகிய ஊர்களிலும் மதுரை மாவட்டத்தில், திண்டுக்கல், பழநி, வெத்திலைக்குண்டு ஆகிய ஊர்களிலும் "அம்பலம்" என்ற சொல் இஸ்லாமியப் பெயர்களுடன் இணைந்து ஒலிக்கின்றன. மற்றும் மதுரை, மேலூர் பகுதிகளில் "நாட்டாண்மை" என்ற பெயர் வழக்கில் உள்ளது. இராமநாத புரம் சேது மன்னரின் சேவையில் சிறந்து பணியாற்றிய அபி ராமம் நூர்முகம்மது என்பவருக்கு சேதுபதி மன்னர் சிறப்புகள் செய்து கௌரவித்ததுடன் "விஜயன் அம்பலம்" என்ற விருதுப் பெயரையும் வழங்கினார். இந்த நிகழ்ச்சி நடைபெற்று இரு நூறு ஆண்டுகளாகின்றன. அவரது வழி வந்த வள்ளல் ஒரு வரை பாட்டுடைத்தலைவராகக் கொண்டு மதுரை தமிழ்ச் சங்கப் புலவரான சோதுகுடி அப்துல்காதர் ராவுத்தர் என்பவர் "அகப்பொருள் கோவை" ஒன்றைப்பாடி உள்ளார்.[6]

---

5. Rajaram Rao - T. Manual of Ramnad Samasthanam (1898) p. 49.
6. சோதுகுடி அப்துல் காதிர் ராவுத்தர் – விஜயன் அப்துல் ரஹ்மான் அகப்பொருட் பல்துறைக்கோவை (ரங்கூன் 1911)

மற்றும். பரமக்குடி, முதுகுளத்தூர் வட்டாரங்களில் இஸ்லாமியர் சிலர் தங்கள் பெயருடன் ''சேர்வை'' என்ற சொல்லையும் இணைத்துப் பயன்படுத்துகின்றனர். மொத்தத்தில் ''அம்பலம்'' ''சேர்வை'' என்ற இரு சொற்களும் அந்தந்த ஊர்களில் சமூகத் தலைவர் என்ற பொருளில் தான் பிரயோகிக்கப்படுகின்றன. மதுரை மாவட்டத்தில் ஏனைய இந்து சமூகத் தலைவரைப் போன்று இஸ்லாமியத் சமூகத் தலைவரும் ''நாட்டாண்மை'' என வழங்கப் படுகின்றனர். இந்தச் சொற்களின் வழக்கு பற்றி சற்று தீவிரமாகச் சிந்தித்தால், இந்தத் தமிழ் மண்ணில் இஸ்லாம் எவ்வளவு ஆழமாக வலுவாக, வேர் பரந்துள்ளது என்பது விளங்கும். தமிழ்நாட்டில், முதன்முதலில் இரர்மநாதபுரம், நெல்லை, மதுரை மாவட்டங்களில் அராபியரது பூர்வ குடியேற்றங்கள் ஏற்பட்டதால், அந்த இஸ்லாமியர்கள், அங்குள்ள மக்களுடன் நாளடைவில் நெருக்கமான தொடர்பும் தோழமையும், உறவும் கொண்டு, தமிழ்ச் சமூக அமைப்பில் உறுதியாக ஊடுருவி, இணைந்து இன்றளவும் நிற்பதுவே இத்தகைய அரபு தமிழ்ப் பெயர்கள் இணைப்பிற்கு காரணம் என்பதும் புரியும் கடந்த சில நூற்றாண்டுகளில், அரசியல், பொருளாதாரச் சூழ்நிலை காரணமாக போர்ச்சுக்கீசியர், டச்சுக்காரர் ஆங்கிலேயர், பிரெஞ்சுக்காரர், போன்ற பிற நாட்டவர் தமிழ்நாட்டிற்கு வந்துள்ளனர். தமிழ்ச் சமுதாயத்தில் கலந்தும் இருக்கின்றனர். ஆனால், அரபுநாட்டு இஸ்லாமியர்களைப் போன்று, இந்த மண்ணின் மாட்சியை, பாரம்பரிய விழுதுகளை என்றென்றும் வலுவாகப் பற்றி நிற்கும் பெற்றி, பண்பாடு, உள்ளப்பாங்கு அவர்களுக்கு அமையவில்லை என்பது வரலாறு உணர்த்தும் உவமையாகும்.

# 8

## துக்காணிகள்-பட்டாணிகள்

இதுவரை அரபு நாடுகளில் கடல்வழியாக தமிழகம் போந்த இஸ்லாமியர்களைப் பற்றிய விபரங்களைக் கண்டோம். இவர்களைப் போன்றே அரபு நாடுகளில் இருந்தும். ஆப்பிரிக்கா, அபிஸீனியா, பாரசீகம், மத்ய ஆசியா, ஆகிய பிற நாடுகளில் இருந்தும், கடல் வழியாகவும், நிலம் வழியாகவும், இந்தியாவின் பிற மாநிலங்களுக்குள் புகுந்து குடியேறியவர்களும் உண்டு. குறிப்பாக சிந்து, குஜராத், மராட்டம், உத்தரப் பிரதேஷ் ஆகிய மாநிலங்களில் படையெடுப்புகளின் மூலமும் சமயப் பணியின் நிமித்தமும், இஸ்லாமியர் வந்து தங்கி' இந்தியப் பெண்களை மணந்து நிலைத்து நின்றனர்.[13] அரேபியாவில் இருந்து சமயப் பிரச்சாரம் செய்வதற்காக ஹிஜிரி 160 ல் அல் அஸதி அல்பஸரி வந்து சிந்துவில் தங்கினர். கி.பி. 1067 ல் யமன் நாட்டில் இருந்து போரா முஸ்லீம்களின் தலைவரான பாபா சத்ருதீன் குஜராத்தில் தங்கி மார்க்கப்பணியில் ஈடுபட்டார். மத்ய ஆசியாவில் இருந்து வந்த புனித காஜா முயினுத்தீன் ஷிஸ்தி கி.பி. 1197 ல் ஆஜ்மீருக்கு வந்து அங்கேயே தங்கிவிட்டார்கள். இன்னும், சையித் ஜலாலுத்தீன் புகாரி கி.பி. 1244 ல் வடநாட்டிலும், சையித் முகம்மது கேசுதரால் பதினான்காம் நூற்றாண்டில் பூனா – பெல்காம் பகுதியிலும், அதே சமயம் – கட்ச் குஜராத் பகுதியில் இமாம்ஷ. வும், வந்து தங்கி சமயப்பணியில் ஈடுபட்டனர். அரபுத் தளபதியான முகம்மது-பின்–காசிமின் முதலாவது இந்தியப் படையெடுப்பை (கி.பி.

---

2. Eswari Prasad – A. Short History of Muslims Rule in India (1939) p. 37

712 ல்) தொடர்ந்து தில்லியில் கஜினிமுகம்மது, அடிமை வம்சத்தினர், கில்ஜிகள், துக்ளக், முகலாயர், பாமனி சுல்தான்கள் என பல்வேறு இஸ்லாமிய மன்னர்களது ஆட்சி, பல நூற்றாண்டு கால இந்திய வரலாற்றுக்குள் இடம் பெற்றுள்ளது. ஆனால், இறுதியாக முகலாய மன்னரான அவுரங்க ஜேப்பின் தென்னிந்திய படையெடுப்பின் பொழுதும் அதனைத் தொடர்ந்து அவரது அரசப் பிரதிநிதிகளான நிஜாம், நவாப்களின் காலத்தில் வடக்கே வாழ்ந்த இவர்களில் ஒரு பகுதியினர் தமிழகத்திற்கு வந்து நிலையாகத் தங்க வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது. பெரும்பாலும் அரசுப்பணி (போர்ப்பணி)யை மேற்கொண்டிருந்த அவர்கள் எட்டு ஆண்டுகளுக்கு அதிகமாக நீடித்த செஞ்சிப் போர் போன்று (கி.பி. 1689–1697) பல போர்கள், அரசிறை வசூல் போன்ற காரணங்களினால்-தமிழகத்தில் நிலைத்து, நாளடைவில் இந்த சமுதாயத்தில் கலந்து விட்டனர். அன்று இந்திய அரசின் ஆட்சி மொழியாக இருந்த பார்ஸி, இந்துஸ்தானி ஆகிய மொழிகளின் கலப்பினால் தோன்றிய உருது மொழியை அவர்கள் தாய் மொழியாகக் கொண்டிருந்த போழ்தும், தமிழக மக்களின் பொது மொழியான தமிழை விழைந்து கற்கவும், தமிழில் புலமை பெறவும் அவர்கள் தயங்கவில்லை.

அவர்களின் வழியினர் இன்றும் செங்கல்பட்டு, வடஆற்காடு, தென் ஆற்காடு, தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி, மதுரை, இராமநாதபுரம், மாவட்டங்களில் சிறுபான்மையினராக இருந்து வருகின்றனர். இவர்களைப் பட்டாணியர் என்றும் தக்கனிகள் என்றும் பிற்கால இலக்கியங்களிலும் வழக்கிலும் குறிப்பிடப் பட்டுள்ளன. குறிப்பாக "சீதக்காதி நொண்டி நாடகம்" "இராமப்பையன் அம்மானை" ஆகிய நூல்களில் பட்டாணியர் என்ற சொல் பலயிடங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது. ஆனால், தமிழக இஸ்லாமியரின் ஒரு பிரிவினரைக் குறிக்க இந்த சொல்லைப் பயன்படுத்தி இருப்பது பொருத்தமற்றதாகும். காரணம் முந்தைய இந்தியாவின் (தற்பொழுது பாகிஸ்தான்) வடமேற்கு எல்லைப்புற மாநிலத்தில் புஷ்த்து மொழி பேசும் இந்து முஸ்லீம் இரு சமயத்தவரை குறிப்பது பதான் (Pathan) என்ற இனச் சொல்[2]. அந்த "பதான்" என்ற சொல்லின் திரிபுதான் பட்டாணி என்பதாகும். உடல் வாகிலும், செயல் திறத்திலும் சிறந்

2. Oxford English Dictionary (1944) p. 581

தவர்களைக் குறிக்க எழுந்த சொல் போலத் தோற்றுகிறது. தமிழ்நாட்டின் வணிக குலமான ஆயிர வைசியரில் சிலர் கூட, இந்தப் பெயரினால் பட்டாணிச் செட்டியார் என அழைக்கப் படுகின்றனர். மேலும் இன்னொரு பிரிவினரான வாணியச் செட்டியார் குலத்திலும்'' பட்டாணி'' என்ற பெயர் இணைத்து வழங்கப்படுகிறது. இவர்கள் காமராசர் (ராஜபாளையம்) மதுரை (பெரியகுளம்) நெல்லை (கம்பங்குளம்) ஆகிய மாவட்டங்களில் தொகுதியாக வாழ்ந்து வருகின்றனர். இவர்களது குல தெய்வம் குதிரையில் அமர்ந்த வீர உருவம், கொடி பச்சை இளம் பிறைக் கொடியாகவும் இருந்து வருகிறது. மேலும் அந்த தெய்வத்தின் கோயிலை ''பட்டாணி'' கோவில்'' என வழங்கி வருவதும் இங்கு குறிப்பிடத் தக்கது. தமிழ்நாட்டில் பல ஊர்களில் ''பட்டாணி (வலி)'' ''பட்டாணி சாயபு'' என்று இறை நேசர்கள் சிலரது அடக்கவிடங்களும் உள்ளன. அவைகள் இஸ்லாமியரது கபுறுஸ்தான் போன்ற வடிவில் உள்ளன.

தக்னி என்பது டெக்கானிஸ் (Deccanese) என்ற ஆங்கிலச் சொல்லின் திரிபு, பீஜப்பூர், பீடார், பேரார், பாமினி, கோல் கொண்டா என்ற ஐந்து தக்கணப்பகுதி இஸ்லாமியத் தன்னரசுகளின் பணியில் இருந்து அவை சிதைந்த பிறகு தெற்கே தமிழகத்தில் குடி புகுந்தவர் என்ற கருத்தில் அவர் தம் தொன்மையை சுட்டும் சொல்லாக அமைந்துள்ளது பொருத்தமானதாகும். அவர்கள் அனைவரும் ஆற்காட்டு நவாப்புகளின் ஆட்சியில், அரசியல் சலுகைகளும், வாழ்க்கை வசதிகளும், பெற்று பயனடைந்தவர்கள். ஆனால், கால மாறுதலினால் இவர்களில் பெரும்பாலோர் பொருளாதார வீழ்ச்சியுற்று தோல் பதனிடும், பீடி, சுருட்டு. ரொட்டி தயாரித்தல் போன்ற சிறு தொழில்களிலும் விவசாயத்திலும் காவல் துறை போன்ற அரசுப் பணிகளிலும் ஈடுபட்டுள்ளனர். இவர்களும், இன்றைய தமிழ்ச் சமுதாயம் என்ற பேரணியில் உள்ள சிறுபான்மையினராக, தமிழக இஸ்லாமியர் என்ற சிறுபிரிவிற்குள் அடங்கியவர்கள். அவர்களது தாய் மொழி, தமிழ் – உருது, என வேறுபட்டு இருந்தாலும், இவர்கள் அனைவரையும் தமிழ்நாடு அரசு, கல்வி, பொருளாதார நிலைகளில் பின்னடைந்துள்ள ''பிற்பட்டவர்'' என பாகுபாடு செய்துள்ளது.[3] தமிழக இசுலாமியர் என்ற பெருநட்டத்தில் இவர்களும் அடங்கியவராவர்.

3. G.o. Ms. No. 1298 (Pub) 17-12-1975

# 9

## வணிகம் வந்த வழியில்

தமிழகத்திற்கும் அரபு நாடுகளுக்கும் வாணிப பண்டமாற்றிற்குப் பயன்பட்ட பாய்மரக்கலங்கள், அராபிய இஸ்லாமியர் தமிழகத்திற்கு வந்து செல்லும் போக்குவரத்துச் சாதனமாகவும் பயன்பட்டன. இன்றைய குமரி மாவட்ட குளச்சலிலிருந்து ஆந்திரக் கரையில் உள்ள முத்துப்பள்ளி வரையான வங்கக் கடலின் விரிந்த கடற்கரையில் பல இடங்களில் அவர்களது கலங்கள் நங்கூரமிடப்பட்டு நின்றன. இந்தப்பகுதி அரபு மொழியில் **மாபார்** என அழைக்கப்பட்டது.[1] கடந்து செல்லும் பகுதி என்ற பொருளுடைய இந்தப்பகுதி, நாளடைவில் அவர்கள் விரும்பி வாழும் நாடாக மாறியது வியப்பிற்குரியது. அவர்களது கலங்களில் ரோம, எகிப்து, பாரசீக நாட்டுப் பண்டங்களுடன், குதிரைகளும், கரை இறக்கப்பட்டதுடன் நீண்ட அங்கியும் வண்ண முண்டாசுகளும் அணிந்த, இனிய தோற்றமுடைய இஸ்லாமியத் துறவிகளும், தொண்டர்களும் கரை இறங்கும் காட்சி, பல நூற்றாண்டுகளுக்கு முன்னர் தமிழக கடற்கரைப் பட்டினங்களில் ஆங்காங்கே காணக்கூடியதாக இருந்தது.

ஏற்கனவே, தமிழ்ச் சமுதாயத்திற்கு அறிமுகமாகி, அஞ்சு வண்ணங்களில் வணிகச்சாத்துக்களுடன் நிலைத்துவிட்ட அராபிய இஸ்லாமியர்களது நேர்மையான வணிகத்திலும், வாழ்க்கை நெறிகளிலும் ஈர்க்கப்பட்டிருந்த தமிழ் மக்கள், இந்த இஸ்லாமிய துறவி – தொண்டர்களது பேச்சிற்கு தங்கள் செவிகளைத்

---

1. Mohammed Hussain Nainar Dr. – Arab Geographers Knowledge on South India (1642) p. 19.

தாழ்ந்த நயங்களில்லை. ஏக இறைக் கொள்கையை அடிப் படையாகக் கொண்டு அண்ணல் நபிநாயகம் (ஸல்) அரபி மக்களிடம் போதித்த போதனைகளையும், எய்திய சாதனை களையும் அவர்கள் எடுத்துக்காட்டி, தமிழ் மக்கள் உலகம் தழுவிய அந்த ஒற்றுமை அணியில் சேர்ந்து, இம்மை மறுமைக் கான இனிய பணிகளில் ஈடுபட, வேண்டுகோள் விடுத்தனர். அவர் களது இனிய பேச்சும் இறைக்கொள்கை விளக்கங்களும், ஏழை எளியவர்களிடம் ஈடுபாடு கொண்டு செய்த சேவையும், தமிழ் மக்களது சமய வாழ்வில் புதிய உணர்வையும் சிந்தனைத் தெளி வையும் தந்தன. அத்துடன், இடையோடிகள் இல்லாத அவர் களது எளிய இறை வழிபாடும் இனிய நடைமுறைகளும் யாவரையும் கவர்ந்தன. குறிப்பாக நடுத்தர அடித்தள மக்க ளிடையே விழிப்பை ஏற்படுத்தியது.

இத்தகைய மன மாற்றத்திற்குப் பல காரணங்கள் இருந் தன. அன்றைய தமிழ்ச் சமுதாயம், சமய மோதல்கள், சமயக் காழ்ப்பு, சமூகக் கொடுமைகள், பகுத்தறிவுக் கொவ்வாத பழக்க வழக்கங்கள், உயர்வுதாழ்வு, ஆண்டான் அடிமை நிலைகள் – ஆகியவை விஞ்சி நின்றதாகும். ‘‘பிறப்பொக்கும் எல்லா உயிர்க் கும்’’ என்ற பேருண்மை எங்கேயோ மறைத்து வைக்கப்பட்டி ருந்தது. ஒன்றே குலமும், ஒருவனே தேவனும் என்ற உயரிய கொள்கை, உருமாறி பல நூற்றாண்டுகளாகி இருந்தன. இந் நிலையில், இந்து சமயத்தில் சீர்திருத்தம் கோரிய பௌத்தக் கொள்கையை பலவீனமடையச் செய்தது. சமணம் கொல்லா மையை கோடிட்ட அதனை சீர் குலைத்தது சைவம். பழமை யையும் பல தெய்வ வணக்கத்தையும் கொண்ட சைவத்தையும் சமாளித்து நின்றது வைணவம். இவையனைத்தும் ஆரிய இனக் கொள்கை என்ற ஒரு தாயின் பிள்ளைகள். தமிழக சமய வாழ் விலும், சமுதாய முன்னேற்றத்திலும் சிறப்பாக எதனையும் சாதித்து விடவில்லை. எட்டு, ஒன்பதாம் நூற்றாண்டுகளில் தமிழ்ச் சமுதாயத்தின் நிலை இதுவேயாகும். இந்தப் பின்னணி யில், அராபிய நாட்டு இறைநேசர்களும் தொண்டர்களும் தூவிய புனித இஸ்லாம் என்ற வித்து, நமது தமிழ் மண்ணில் வேரூன்றி வளர்ந்து தழைத்துப் பூத்தது. அதனுடைய மோகனத் தோற்றத் தையும், மென்மையான சுகந்தத்தையும் கண்டு, உணர்ந்தவர்கள் அதனை வேற்று நாட்டு மலர் என வேறுபாடு கொள்ளவில்லை.

இந்தப் புதிய சமயப் பணிக்கு, செயற்கரிய சாதனைக்கு, தமிழ் மண்ணில் தங்கள் உழைப்பையும் உயிரையும் வழங்கிய இசுலாமிய உத்தமர்கள் அனைவரையும் கடந்த காலம் இனங் காட்டத் தவறிவிட்டது. அவர்களில் ஒரு சிலரைப் பற்றிய வாழ்க்கைக் குறிப்புகள் அங்கும் இங்குமாக கிடைத்துள்ளன. (அவர்களது பெயர் பட்டியல் ஒன்றும் இணைப்பில் கொடுக்கப் பட்டுள்ளது) அவை வரலாற்று ஆய்விற்கு வழி துலக்குவதாக இல்லை. தமிழ்நாட்டின் காடுமேடுகளில், சாலை, சோலையில் பெயர் தெரியாத அடக்க விடங்களில் தங்களை முடக்கி அருந் துயில் கொள்ளும் அரபு, துருக்கி, சிரிய, பாரசீக நாட்டு மேதை களே அவர்கள். அவுலியாக்கள், மஸ்தான்கள், மலுங்குகள், பீர் கள், பக்கீர்கள், சூபிகள், ஷைகுகள், தர்வேஸ்கள், ஆலிம்கள் என்று மட்டுமே அவர்களை இனம் தெரிந்து கொள்ள முடி கிறது. அவர்கள் அனைவரும் அண்ணல் நபி (ஸல்) வழியில் வாழ்ந்தவர்கள். அவர்களது வழியில் வாழும்படி வழிகாட்டிய வர்கள். அந்தப் பணியில் கண்ட இன்னலை, கனிந்த கன்ன லாக ஏற்று மகிழ்ந்தவர்கள். இவைகளுக்கு மேலாக அவர் களைப் பற்றி தெரிந்து கொள்ள வேறு வாய்ப்பு இல்லை.

குறிப்பாக, திருச்சிராப்பள்ளியில் மோனத்துயில் கொள் ளும் தப்லே ஆலம் நத்ஹர் (வலி) பாபா அவர்கள் பத்தாம் நூற்றாண்டில் ஸிரியா நாட்டினின்றும் சமயப் பணிக்கென அப் பொழுது அரசியல் சிறப்புற்று இருந்த தமிழகத்திற்கு வந்தவர் உறையூரில் தங்கி தங்களது இஸ்லாமியப் பணியைத் தொடங் கினார்கள்.[2] இன்று திருச்சி, தஞ்சை மாவட்டங்களில் உள்ள முஸ்லீம்களது முன்னோர்கள் பெரும்பாலும் பாபா அவர்களு டைய போதனைக்குப் பணிந்து இஸ்லாத்தில் இணைந்தவர்கள். இத்தகைய மகானுடைய மகத்துவங்களைத் தவிர்த்து அவர்களு டைய வரலாற்றுக் குறிப்புகள் எதுவும் கிடைக்கவில்லை. இவர் களைப் போன்று, மதுரை, நெல்லை, இராமநாதபுரம் மாவட்டங்களில் இஸ்லாத்தைப் பரப்பிய முன்னோடிகள் யார் எனத் தெரியவில்லை. ஆனால் கி.பி. 1050 இல் மாலிக்–உல்– முல்க் என்பவர் தலைமையில் தொண்டர் பலர் மதுரையில்

2. அப்துல்ரஹீம் எம். ஆர். எம். இசுலாமிய கலைக்களஞ்சியம் (1962) தொகுதி III பக். 375

இஸ்லாமியப் பணியில் ஈடுபட்டிருந்தனர். அந்தக் குழுவில் சையத் அலியார் ஷா என்ற இறைநேசரும் இருந்தார் எனத் தெரிகிறது.[3] மாலிக்-உல்-முல்க் அப்பொழுது மதுரை ஆளுநராக இருந்தார் என மதுரைச் சீமை வரலாற்று ஆசிரியர் வரைந்துள்ளார்.[4] அந்தப் புனிதரைப்பற்றி வேறு தடயங்கள் எதுவும் இல்லை.

மற்றும், கி.பி. 1182இல் மதினத்திலிருந்து பாண்டியநாடு போந்த சுல்தான் ஸையது இபுராகிம் (வலி) அவர்கள் தங்களது பணியை நெல்லை மாவட்டத்தில் தொடங்கினார்கள். அப்பொழுது பாண்டியநாடு மூன்று பகுதிகளாக மூன்று பாண்டிய மன்னர்களது ஆட்சியில் அமைந்து இருந்தது. காயலைக்கோ நகராகக் கொண்டு குலசேகர பாண்டியனும், மதுரையில் திருப் பாண்டியனும் கிழக்குச் சீமை பவுத்திர மாணக்கப்பட்டினத்தில் விக்ரம பாண்டியனுமாக மூவர் ஆட்சி பீடங்களில் இருந்தனர் பாண்டியர்களிடையே பட்டத்திற்குரியவர் மட்டுமல்லாது, இளவல்களும், பேரரசர்களுக்குச் சமமாக அரசியல் சம்பிரதாயங்களுடன் பல பகுதிகளில் ஆட்சிப் பொறுப்பைக் கவனித்து வரும் பழக்கம் அப்போது பாண்டிய நாட்டில் இருந்தது. இவ்விதம் ஐவர் பாண்டியநாட்டை ஆட்சி செய்ததையும் இதனால் பாண்டியர்களுக்கு **பஞ்சவர்** என்ற பெயர் இருந்ததையும் இலக்கியங்களில் காணப்படுகின்றன.[5] † சமுதாய வளர்ச்சிக்கு உதவுவதற்காக, அரசியல் அதிகாரங்களைப் பரவலாக்கும் வகையில் இந்த முறை, கடைபிடிக்கப்பட்டு இருந்தாலும் பாண்டியர்களிடையே போட்டியும் பொறாமையும் வளர்ந்ததைத்தான் வரலாறு காட்டுகிறது.

சுல்தான் ஸையது இபுராகீம் (வலி) அவர்களும் அவர்களது திரளான தொண்டர்களும் தமிழகப் பயணத்தை மேற்கொண்டிருப்பது, ஏக தெய்வ வணக்கத்தையும் இறைவனது சன்மார்க்

---

3. Appadorai Dr. A. Economic Conditions of South Indian (1940) vol. II p. 22
4. Alexander Nelson - manual of Madura Country (1868)
5. ஜெயங்கொண்டார் – கலிங்கத்துப்பரணி – பாடல் 382.
'' விட்ட தண்டினின் பீனவர் ஐவரும்
கெட்ட கேட்டினைக் கேட்டிலை போலும் நீ ''

கத்தையும் மக்களிடம் விளக்கும் பிரச்சார நோக்கம் கொண்டது என்பதை காயலில் இருந்த குலசேகர பாண்டியன் புரிந்துகொண் டவுடன் அவர்களது பணி தொடருவதற்கு தடங்கல் எதுவும் ஏற் படுத்தவில்லை. ஆனால் மதுரை, இராமநாதபுரம் பகுதியில் இருந்த பாண்டியர்கள் அவர்களது பணிக்கு இடையூறு செய்தமை யும், அதனை எதிர்த்து முறியடித்த போரில் அவர்கள் தங்களது இன்னுயிரைத் தியாகம் செய்த விவரங்களையும் ஸஹாதத் நாமா என்ற பாரசீக நூலை ஆதாரமாகக் கொண்டு வரைய பெற்ற ஷஹீது சரிதை தெரிவிக்கிறது.[6] சுல்த்தான் சையது இபுராகீம் (வலி) அவர்கள் பாண்டிய நாட்டில் கிழக்கு கடற்கரையில் அமைந்து இருந்த பவுத்திர மாணிக்கப் பட்டினத்தில் பன்னி ரண்டு ஆண்டுகள் ஆட்சிப் பொறுப்பை ஏற்று இருந்ததால் அவர் களது ஜீவியத்தின் பொழுதே நெல்லை, மதுரை, இராமநாத புரம் மாவட்ட மக்களின் ஒரு பகுதியினர் இஸ்லாம் மதத்தை ஏற்றனர், அவர்களது சந்ததிகளும் தொண்டர்களும் பாண்டிய நாட்டில் பல பகுதிகளில் சன்மார்க்க சேவையைத் தொடர்ந் தனர். இவர்களது புனிதப்பணியின் காரணமாக பாண்டிய நாட் டில் ஒருசிறு பிரிவு மக்கட் தொகையினராக முஸ்லீம்கள் வாழ்ந்து வந்ததை மார்க்கோ போலோவின் பயணக்குறிப்புகளில் இருந்து ஊகித்து அறிய முடிகிறது. பாண்டிய மக்களது உணவுப் பழக் கங்களை விவரிக்கும் மார்க்கோபோலோ, அந்த மக்கள் விலங்கு கள், பறவைகள் ஆகியவற்றை நேரடியாக கொன்று தின்பது கிடையாது என்றும் அவைகளின் ஊனைப் பெற்று உண்டனர் என்ற குறிப்பில் இருந்து, முஸ்லீம்கள் பயன்படுத்திய ஹலாலான ஊனை அந்த மக்களும் உண்டனர் என்பது பெறப்படுகிறது.

பன்னிரண்டாவது, பதிமூன்றாவது நூற்றாண்டுகளின் பிற்பகுதியில், பாண்டிய நாட்டு இஸ்லாமியர்களுக்கு அரசியலில் செல்வாக்குடன்' அரசினது மத சகிப்பு இருந்ததால் சோழ நாட் டின் தென்பகுதி உட்பட்ட தமிழகத்தில் இஸ்லாம் பரவுவதற்கு ஏற்ற சூழ்நிலை இருந்தது. அப்பொழுது ஹஸரத் அலியுத்தீன் அவர்களும், ஹாஜி சையித் தாஜுத்தீன் என்பவரும் மதுரையில் இஸ்லாமிய சேவையில் ஈடுபட்டனர்.[7] இவர்கள் யாவர்? இவர் களது பணியின் விவரம் என்ன? என்பன போன்ற வினாக் களுக்கு விடை இறுக்கும் வரலாற்று ஆவணங்கள் இல்லை.

---

6. முகமது இப்ராஹீம் லெப்பை – ஷஹீது சரிதை (1954) பக்கம் – 138

மதுரைச்சீமை வரலாற்று ஆசிரியருக்கு கிடைத்த ஆவணங்களின் படி ஹஜரத் அலியுத்தின் அவர்கள் கி பி.1290ல் இறுதியில் மதுரை வந்தவர் என்பதுமட்டும் புலனாகிறது[8]. இன்னொரு வரலாற்று குறிப்பிலிருந்து மதுரையின் தென்பகுதியில் உள்ள ''காஜி மொக் கல்லா'' என வழங்கப்படும் காஜியார்தெரு குடியிருப்பு ஏற்பட்டதும் அதனை ஏற்படுத்திய காஜி தாஜித்தீன் மதுரை வந்ததும் இந்த நூற்றாண்டில்தான் என்பது புலனாகிறது.[9] வைகையாற்றங் கரையின் தென்பகுதியில் ஏற்பட்ட இக்குடியிருப்பைப் போன்று வடகரையிலும் இஸ்லாமியரது குடியிருப்பு ஒன்று வளர்ச்சி பெற்றது. பன்னிரண்டாம் நூற்றாண்டின் இறுதியில் டில்லியைக் கைப்பற்றி ஆட்சி செய்த முகம்மது கோரியின் பெயரால் கோரிப்பாளையம் என அந்த குடியிருப்பு இன்றளவும் வழங்கி வந்தாலும் அதனைத் தோற்றுவித்தவர் யார்? எப்பொழுது தோற்றுவிக்கப்பட்டது? என்பதைத் தெரிந்து கொள்ள இயலவில்லை. அதே கால கட்டத்தில், தென்பாண்டிச் சீமையில் (இன்றைய நெல்லை, குமரி மாவட்டங்களில்) அரபு நாடுகளில் இருந்து ஏராளமான இஸ்லாமிய வணிகர்கள் தமது குடும்பங்களுடன் குடியேறினர். குறிப்பாக கிஸ்நாட்டு அதிபதி சையது ஜமாலுத்தீன் தலைமையில் பல அரபுக்குடும்பங்கள் காயல் வந்து சேர்ந்தன[10]. இங்ஙனம் பன்னிரண்டாவது நூற்றாண்டின் முடிவிற்குள், அரபிய இஸ்லாமிய வணிகர்களும் தொண்டர்களும் தமிழகத்தை புதிய தாயமாகக் கருதி, குடியேறி, தங்கி, வாழ்ந்த துடன் தமிழ் மக்களுடன் மண உறவுகள் கொண்டு தங்கள் சந்ததியினரைப் பெருக்கிக் கொண்டனர். இந்த தமிழ் மண்ணின் மைந்தர்களாகவே மாறி இருந்தனர். தமிழ்ச்சமுதாய அமைப்பில் கணிசமான எண்ணிக்கையுடன் அவர்கள் ஒரு புதிய அங்கமாக விளங்கினர். அதனால் அன்றைய ஆட்சியாளர் அவர்களை மதித்து சிறப்புடன் நடத்தினர்.

---

7. Alexander Nelson – Manual of Madura Country
Vol. II Part III Chap II p.p. 44-4
8. Ibid p.p. 68, 69
9. Hussaini — Dr. S.A.Q. - History of Pandiya Country (1962
p. 5
10. Hussain Nainar Dr - Arab Geographers knowledge abou
South India (1942

# 10

## அரசியல் முதன்மை

மூவேந்தர்களின் ஆட்சியில் தமிழகத்தில் உள்நாட்டு, வெளிநாட்டு வணிகர்களுக்கு ஆதரவும் ஊக்குவிப்புகளும் இருந்து வந்தன. கொடுமனம், பந்தர், முசிறி, கொற்கை, புகார் போன்ற பட்டினங்களின் செல்வச் சிறப்பிற்கு ஆதாரமான வணிகத்தை பதிற்றுப்பத்து, பட்டினப்பாலை, பத்துப்பாடல் ஆகிய சங்க இலக்கியங்கள் சான்று பகர்கின்றன. கல்வெட்டுக்களிலும் அந்த வணிகச் சாத்தினர், மணிக்கிராமம், அஞ்சுவண்ணம், நானா தேசிகள், திசையாயிரத்து ஐந்நூற்றுவர், வலஞ்சியர், எனக் குறிப்பிடப்பட்டுள்ளனர். அவர்களது வணிகம் தங்கு தடையின்றி நடைபெற அரசியலார் அவர்களுக்கு எல்லா வித வசதிகளையும் வழங்கியதுடன், அரச அவைகளில், எட்டி, ஏனாதி ஆகிய சிறப்பு விருதுகளையும் வழங்கி அவர்களைப் பெருமைப்படுத்தினர். அதன் காரணமாக வெளிநாட்டு வணிகர்கள் அரசியலில் தீவிர பங்கு கொள்ளும் வாய்ப்பும் ஏற்பட்டது.

இத்தகைய வணிகரில் ஒருவரான துருக்கன் அகமது முதல் ராசராசனது அவைக்களத்தை அலங்கரித்த முக்கியமான இஸ்லாமிய அரசியல் தலைவர் என்பதை ஆனைமங்கலச் செப்பேட்டில் குறிக்கப்பட்டுள்ளது.[11] இவரைப் போன்றே கங்கை கொண்ட சோழபுரத்து ராஜராஜ வித்யாதரப் பெருந்தெருவைச் சேர்ந்த சோனகன் சாவூர் முதலாம் ராஜேந்திர சோழனின் திருமந்திர ஓலை நாயகனாக விளங்கியதை கோலார் கல்வெட்டு மூலம் தெரிந்து கொள்ள முடிகிறது. மேலும், அதே மன்னனது

---

11. நடனகாசிநாதன் — கல்வெட்டு ஒரு அறிமுகம் (1976) பக்கம் 33

இருபத்து நான்காவது ஆட்சியாண்டைக் குறிக்கும் மன்னார் கோவில் கல்வெட்டு, அந்தப்பெருமகனை'' ''ராஜேந்திர சோழ கந்தர்வப் பேரரையன்'' என பெருமிதத்துடன் சுட்டுகிறது.[12] இங்ஙனம் சோழப் பேரரசின் அரசியலில் முதன்மை பெறத் துவங்கிய இஸ்லாமியர் என்ன காரணத்தினாலோ குலோத் துங்கனது ஆட்சியில் வெறுப்பையும் வீழ்ச்சியையும் பெற்றதை சிதம்பரம் கோயில் கல்வெட்டுக்களில் இருந்து ஊகிக்கமுடிகிறது அந்தக் கோயிலின் திருப்பணிகளைத் திறம்பட நிறைவேற்றிய சோழ சேனாபதி நரலோகவீரனைப் பற்றிய புகழ்ச்சிக் குறிப்பு களில் ஒன்று. அவனது கொல்லம் படையெடுப்பு பற்றியதாகும் இந்த நிகழ்ச்சி குலோத்துங்க சோழனது இருபத்து எட்டாவது ஆட்சி ஆண்டில் (கி.பி. 1096) நிகழ்ந்தது.[13] அன்று வேணாடு என வழங்கப்பட்ட கொல்லம், சோழப்பேரரசின் ஒரு பகுதியாக விளங்கியது என்பதும், அங்கு இஸ்லாமியர்கள் அப்பொழுது பெரும் எண்ணிக்கையில் இருந்தனர் என்பதும் தெளிவு. இந்தப் படையெடுப்பின் காரணத்தை வரலாறு வழங்காவிட்டாலும் அதனால் என்ன விளைவு ஏற்பட்டது என்பதனை அதே கல் வெட்டு கூறுகிறது.[14] ''... ... ... பஞ்ச பாண்டியர்களை அடக்கி ஒடுக்கிய புகழ் வாய்ந்த குலோத்துங்கனது பெரும்படை இந்தப்போரில் (கொல்லம்) எதிரிகளை சிதறியோடச் செய்த வெற்றிச் சிறப்பை எதிர்க்கரையில் உள்ள பாரசிகர் நாட்டு இளம் பெண்களும் பரவிப் பாடுவர். ''... ... ... இந்த நிகழ்ச் சிக்குப் பிறகு கி. பி. 1323 இல் மதுரையில் நிறுவப்பட்ட இஸ் லாமியர் ஆட்சியைக் குறிப்பிடும் மதுரைத் தல வரலாறு '... ... ... கொல்லம் அழிந்து 226 ஆண்டுகளுக்குப் பிறகு அதாவது சகம் 1246 (கி. பி. 1324) இல் ருத்ரோகரி ஆனி மாதம், பராக்கிரம பாண்டியன், என்பவர் ஆட்சி செலுத்தும் பொழுது நேமி என்று அழைக்கப்பட்ட டில்லி ஆதி சுல்தான் முல்க் நாட்டைக் கைப்பற்றினார். ... ... ...'' என்று தொடர்கிறது.[15]

---

12. A.R. 112/1905 — (மன்னார் கோயில்)
13. Nilakanta Sastri K.A - Studies in Chola History and administration
14. Epigraphica India. vol. v. p. 103
15. மதுரைத் திருப்பணி மாலை–மதுரைத் தமிழ்ச்சங்கப் பதிப் (1932)

இந்த நிகழ்ச்சி சாலிவாகன சகாப்தம் இன்ன வருடம், இன்ன மாதம் இன்ன நாளில் என்று மட்டும் குறிப்பிடாமல் "கொல்லம் அழிந்த 227 ஆண்டுகளுக்குப் பிறகு'' என்று விளக்கம் கொடுப்பதிலிருந்து இஸ்லாமியர்கள் மதுரையைக் கைப்பற்றிய இந்த நிகழ்ச்சிக்கு முன்னதாக இஸ்லாமியர்கள் கொல்லத்தைக் கைப்பற்றி இருந்தனர் என்பதை சூசகமாகக் குறிப்பிடும் நோக்கத்துடன் தான் "கொல்லம் அழிந்த 227 ஆண்டுகளுக்குப் பிறகு'' என்ற தொடரும் இந்த வரலாற்றுக் குறிப்பிலே சேர்க்கப்பட்டுள்ளது.[16] பாண்டிய மன்னர்களது தலைநகரான மதுரையில் இஸ்லாமியர்களது செல்வாக்கு அரசியலில் மிகுந்து வந்தது. கி.பி. 1182 இல் மதினத்திலிருந்து பாண்டியநாடு வந்த இஸ்லாமியப் பிரச்சாரகரான புனித ஸையது இபுராஹீம் (ஷஹீது) அவர்கட்கு கொற்கையில் ஆட்சி புரிந்த குலசேகர பாண்டியன் எல்லா வசதிகளையும் வழங்கியதுடன், தனது ஆட்சிக்கு குந்தகம் விளைவித்துக் கொண்டிருந்த தனது தாயாதிகளை அடக்குவதற்கு உதவுமாறு கேட்டுக் கொண்டான். இதனை அறிந்த மன்னன் திருப்பாண்டியன், அஞ்சியவனாக மதுரையை விட்டே ஓடிவிட்டான். புனிதர் சையது இபுராகீம் அவர்களது தொண்டர்கள் மதுரையைக் கைப்பற்றினர். மதுரைக் கோட்டையும் அதன் சுற்றுவட்டாரத்து சீமையும் தளபதி அமீர் இஸ்கந்தர் என்பவரது நிர்வாகத்தில் பல ஆண்டுகள் இருந்து வந்தன.[17] திருப்பரங்குன்ற மலையின் உச்சியில் உள்ள பள்ளியின் பக்கத்தில் இவரது அடக்க இடம் அமைந்துள்ள காரணத்தினால் மக்கள் அந்த மலையை சிக்கந்தர் மலையென்றும், அங்குள்ள பள்ளியை சிக்கந்தர் பள்ளி என்றும் வழங்கி வருகின்றனர். ஆனால் வரலாற்று நூலாசிரியர் டாக்டர் ஹுசைனி, மதுரை சுல்த்தான்களில் இறுதியாக கி.பி. 1372–73ல் அரியணை ஏறிய விஜய நகர இளவல் குமார கம்பணனால் கொல்லப் பட்டவருமான சுல்தான் சிக்கந்தர் ஷாவின் அடக்கவிடம் அது என குறித்துள்ளார்.[18] இந்த அடக்கவிடத்தை கி.பி. 1762 ல், மதுரை ஆளுநராக இருந்த கம்மந்தான் கான்சாகிபு

16. சுப்பிரமணியன் க.நா. – தென்னிந்திய கோயில் சாசனங்கள் பகுதி 2 பக். 77. தொகுதி III
17. முகமது இப்ராஹிம் லெப்பை–ஷஹீது சரிதை (1953)
18. Hussaini. Dr. S. A. Q - History of Pamdia country (1963) p.p. 111

அழகிய தர்காவாக அமைத்து உதவினர்.[19] அத்துடன் அதற்கு அண்மையில் உள்ள தணக்கன் குளம் கிராமமும் இந்த தர்கா வின் பராமரிப்பிற்கு தானமாக வழங்கப்பட்டது.

அந்த கால கட்டத்தில், கிழக்கு இராமநாதபுரம் சீமை யின் தென்கிழக்குப் பகுதியை ஷஹீது அவர்கள் விக்கிரம பாண்டியனிடமிருந்து கைப்பற்றி தமிழகத்தில் முதன்முறையாக, இஸ்லாமியக் கோட்பாடுகளுக்கிணங்க மக்கள் ஆட்சியை நிறுவி னார்கள். இந்த ஆட்சி நீண்டகாலம் நீடிக்கவில்லை. வடக்கே ஓடிப்போன திருப்பாண்டியன் பன்னிரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு தனது தாயாதிகளுடைய படைபலத்துடன் நாடு திரும்பி னான். புனித ஷஹீது அவர்கள் முதுமைப் பருவமுற்றவர்களாக இருந்ததுடன், திருப்பாண்டியனைச் சமாளிக்கும் வகையில் அவர்களிடம் போதிய படைபலமும் இல்லை. என்றாலும், ஏறுபதி அருகே நடந்த வீரப்போரில் ஷஹீது அவர்கள் பாண்டி யனை வெட்டி வீழ்த்தியதுடன் தாமும் வீரமரணம் எய்தினார் கள். இந்த வரலாற்றுச் சிறப்பு மிக்க போர் கி.பி. 1196 இல் நடைபெற்றது.[20] தமிழக வரலாற்று ஆசிரியர்களின் வரலாற்று நூல்களில் இந்தப்போர் பற்றிய சிறு குறிப்பைக்கூட காணமுடிய வில்லை. இத்தகைய இருட்டடிப்பிற்கு, காலம் தான் பதில் அளிக்க வேண்டும். ஆனால் பெரியபட்டினம், வாணி, வைப்பாறு, வாலிநோக்கம், காட்டுப்பள்ளிவாசல், புல்லந்தை, ஏறுபதி ஆகிய ஊர்களில் தொடர்ச்சியாகக் காணப்படும் நூற்றுக்கணக்கான மீஸான்களுடன் கூடிய அடக்கவிடங்களும் ஷஹீது அவர்கள். அவர்களுடைய தொண்டர்கள் குறிப்பாக அப்பாஸ், ஷம்ஷீத்தின் உமையா, இஸ்உறாக் (ஷறஉறீதுவின் புத்திரர்) இம்ரான் ஆகி யோர்களது அடக்கவிடங்களும், எழுச்சிமிக்க அந்த இறைநேசர் கள் தங்களது தியாகத்தால் வரைந்த தமிழக வரலாற்றை மக் களுக்கு என்றும் நினைவூட்டுவனவாக உள்ளன. இந்த தியாகி களது புகழ் வாழ்க்கையை மீசல் வண்ணக் களஞ்சியப் புலவர் அவர்கள், காலத்தால் வாடாத கவி மலர்களாக, பாடியுள்ளார்

---

19. துர்க்காதாஸ் ஸ்வாமி-கம்மந்தான் கான்சாகிபு (1960) பக்கம் – 83
20. முகமது இபுறாகிம் லெப்பை ஷஹீது (1953) பக்கம் 142–4

கள்.[21] தமிழகத்தில், ஷஹீது அவர்கள் மிகவும் குறுகிய கால வாழ்ந்த பொழுதிலும், அவர்களது தொண்டும் அரசியலும் தமிழ் மக்களையும் பிற்கால தமிழக ஆட்சியாளர்களையும், மி வும் கவர்ந்து விட்டன. அதன் விளைவு தமிழகத்தில் இஸ்லா பரவுவதற்கு நல்ல வாய்ப்பும் சூழ்நிலையும் ஏற்பட்டன. ம மாற்சரியங்களுக்கு அப்பாற்பட்டு, இஸ்லாமியர் அல்லாதவரும் ஷஉறீது அவர்களை, ஆத்ம சுகம் வழங்கக்கூடிய ஞான குருவ கக்கருதி காலமெல்லாம் போற்றி வருகின்றனர். இதனை அடுத்து இஸ்லாமியத் தலைவர்களை தங்களது ஆட்சிக்கு அரண் செ யும் அமைச்சர்களாக, தளபதிகளாக, அரசியல் தூதுவர்களா வரித்துக் கொள்ளும் வாய்ப்பும் தமிழகத்தில் வலுப்பெற்றன.

பதின்மூன்றாம் நூற்றாண்டின் தொடக்கம் சோழப் பேர சின் வீழச்சிக்கு கோடிட்டது. பராந்தக சோழன் முதல், மூன் றாம் குலோத்துங்கன் வரையான சோழ மன்னர்கள்–இரண் நூற்றாண்டுகளுக்கு மேலாக பாண்டியர்களுக்கிழைத்த பெரும் பழியை நீக்கினான் முதலாவது மாறவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி. 1216–38) இவனது ஆட்சிக்காலத்தில் பாண்டியப் பேரர வடக்கே வாரங்கல் நாட்டிலிருந்து தெற்கே திருவிதாங்கூர் வ பரவியது. இதனுடைய வளர்ச்சிக்கும் பராமரிப்பிற்கும் குதிரைப் படை இன்றியமையாததாக இருந்ததால் பாரசீக வளைகுடா நாடுகளில் இருந்து ஆண்டுதோறும் குதிரைகள் ஆயிரக்கணக்கில் தரவழைக்கப்பட்டன. அதே மன்னனது ஆட்சிக்காலத்தில் சீனத் தில் இருந்து இலங்கைவழியாக, பாண்டியநாடு போந்த உலகப் பயணி மார்கோ போலோவின் பயணக் குறிப்புகளும் இதனை உறுதிப்படுத்துகின்றன.[22]

---

21. வண்ணக்களஞ்சியப் புலவர் – தீனெறி விளக்கம் (1898)
22. Marcobolo – vol II. p. 324

# III

## இஸ்லாமிய அமைச்சர்கள்

அரபு நாட்டுக் குதிரைகள் பத்திரமாகக் கொண்டுவரப் பட்டு பாண்டிய நாட்டின் அன்றைய துறைமுகங்களான கபில் (காயல்) பத்தன் (பெரியபட்டினம்) மாலிபத்தன் (தேவிபட்டினம்) ஆகிய கடற்துறைகளில் கரை இறக்கப்பட்டன. இதனைக் கண்காணிப்பதற்கான அமைச்சு ஒன்று இயங்கி வந்தது.[1] இந்த வணிகத்தில் பெரிதும் ஈடுபட்டிருந்த கிஸ்நாட்டு அதிபதியான ஜமால்தீன் என்பவர் மாறவர்மன் குலசேகரன் பாண்டியரது பெருமதிப்பிற்குரியவராக விளங்கினார். இவர் தமது ஒன்றுவிட்ட தமையனாரன ஐக்கியுதீனை வணிகத்துறை அமைச்சராக பணி புரியும்படி ஏற்பாடு செய்தார். இவர்களது குடும்பத்தினரும், கிளையினரும், பாண்டிய நாட்டு அரசியலில் தொடர்ந்து பல் லாண்டு காலமாகப் பெரும் பங்கு பெற்று இருந்தனர். மூவா யிரம் மைல் தொலைவில் உள்ள வளைகுடா நாட்டில் இருந்து தமிழகம் வந்த இஸ்லாமியர், தமிழ்ச் சமுதாயத்தில்–அரசியல், நிர்வாகத்தில், எத்தகைய சிறந்த, உயர்ந்த, நம்பிக்கைக்குரிய பொறுப்புக்களுக்கு உரியவர்களாக உயர்த்தப் பட்டிருந்தனர் என்பதை வரலாற்று ஆசிரியர் வஸ்ஸாப், ரஷீத்தின் ஆகியோர் களது குறிப்புக்களைப் படிக்கும் பொழுது வியப்புத்தான் விஞ்சி நிற்கிறது.

சுல்தான் ஐக்கியத்தின் அப்துல்ரகுமான் என்ற மதினத்து பிரமுகர் பாண்டியனது பிரதான அமைச்சராக விளங்கினார்.

---

1. Krishnasamy Ayyangar. Dr. S—South India and her Moham madan Invaders (1921) P.P. 70-71.

அவரது நல்ல பண்புகளும், செயல்முறைகளும், தீர்க்கமான தீர்ப்புக்களும், பாண்டியநாட்டுப் பெருந் தலைவர்களது புகழ்ச்சிக்கும் பாராட்டுதலுக்கும் உரியவையாக பல காலம் நிலைத்து நின்றன.[2] காயலில், அவரது பெயரைக் குறிப்பிட்டு, வெள்ளிக் கிழமை தொழுகையின் பொழுது, குத்பா பிரசங்கம் நிகழ்த்தப் பட்டது. கி.பி. 1293இல் பாண்டிய மன்னன் இறந்தபிறகு, அவர் தொடர்ந்து பிரதம அமைச்சராக விளங்கினார். இதனால் அவர் ஒரு சில காலம் அந்தப் பகுதியின் மன்னராக இருந்தார் என வரலாற்று ஆசிரியர் லஸ்ஸாப் மிகைப்பட வரைந்துள்ளார் அதன் காரணமாக அவரது சிறப்பும் செல்வாக்கும் ஆயிரம் மடங்கு அதிகரித்து விட்டதாகவும் அவர் குறித்துள்ளார். இதற்கான வேறு ஆதாரம் எதுவும் இல்லை. அப்பொழுது பாண்டியனது சிறப்பான துறைமுகங்களாக காயல்பட்டினம், பெரிய பட்டினம், தேவிபட்டினம் ஆகிய மூன்று துறைகளது செயல் பாடுகள் இந்த அமைச்சரது பொறுப்பில் இருந்தன. சீனம் ஸயாம் நாட்டு புதினப்பொருட்களும், இந்துஸ்தானத்தின் கைவண்ணமிக்க பொருட்களும், நிறைக்கப் பட்ட பெரிய கலன் கள், இறைக்கைகள் பொருத்தப்பட்ட சிறிய குன்றுகளைப் போன்று நீரில் மிதந்தவாறு இந்த துறைகளுக்கு வந்து போய்க் கொண்டிருந்தன.

சுல்தான் ஐக்கியுதீனின் ஒன்றுவிட்ட தமையனாரான மாலிக்குல் இஸ்லாம் சுல்தான் ஜமாலுத்தீன், துவக்கத்தில் ஆண்டு தோறும் தம்மிடமுள்ள புகழ்வாழ்ந்த இனக் குதிரைகளுடன் கிஸ் நாட்டில் இருந்து கப்பலேறி பாண்டிய நாடு வந்து போய் கொண்டிருந்தார். வருடந்தோறும் இறக்குமதியாகும் பதினாயிரம் குதிரைகளில் அவரது சொந்தக் குதிரைகள் மட்டும் ஆறில் ஒரு பகுதியாகும். நாளடைவில் இவரும் பாண்டிய நாட்டில் நிலையாகத் தங்கிவிட்ட பொழுதும், அவரைச் சார்ந்த வர்த்தகர்கள், பாரசீகநாட்டைச் சேர்ந்த காத்திப், லஹ்ஷா, பாஹ்ரைன் ஹீர்முஸ், குல்கத்து ஆகிய ஊர்களில் இருந்து குதிரைகளையும் அவைகளை பத்திரமாக பாதுகாத்து கரை இறக்க பழக்கப்பட்ட அரபிகளையும், தமிழ்நாட்டிற்கு அனுப்பி வைத்தனர்.[3]

---

2. Yule Cordier - Travels of Marcopolo - Book III chap - XIV
3. Wassaff - Elliot and Dowson – VOL III P.32

அவ்விதம் தரவழைக்கப்பட்ட குதிரை ஒன்றில் கிரயத் தொகை 220தினர் பொன்னாகும். பயணத்தின் பொழுது இந்தக் குதிரைகளுக்கு காயம் ஏற்பட்டாலும், சாவு சம்பவித்தாலும். அதற்கான கிரையத்தை பாண்டியனது கருவூலத்திலிருந்து வழங்கப்பட வேண்டும் என்பது தான் ஒப்பந்த நிபந்தனை, பொதுவாக இந்தக் குதிரைகள், இந்து அறநிலயங்கள், ஆலயங்களுக்கு நிறுவப்பட்ட அறக்கொடைச் சொத்துக்களிலிருந்து கிடைக்கும் மேலதிக வருமானம் தொகையினின்றும், அந்தச் சொத்துக்களை சார்ந்தோர் செலுத்தும் இறைகளில் இருந்தும் வாங்கப்பட்டன. அரசாங்கத்தின் செலவில் இந்த இனம் சேர்க்கப்படவில்லை.[4]

இந்தக் குதிரை ஒன்று ஐநூறு தினார் பொன் வீதம் வாங்கப்பட்டதாக உலகப் பயணி மார்க்கோபோல வரைந்துள்ளார். பன்னிரண்டாம் நூற்றாண்டின் இறுதியில் பாண்டிய நாட்டிற்கு வந்த அந்தப் பயணி காயலுக்கு வருகை தந்தார். அங்குள்ள பாண்டிய மன்னருக்கு நான்கு சகோதரர்கள் இருந்ததாகவும், அவர்களும் பாண்டிய நாட்டில் பல பகுதிகளில் ஆட்சி புரிந்ததாகக் குறிப்பிட்டுள்ள அவர் காயல் மன்னன் தமது சகோதரர்களைப் போன்றே வருடந்தோறும், 2000க்கு அதிகமான குதிரைகளை வாங்கினார் என்றும் வரைந்துள்ளார். ஆனால் வருட முடிவில் நூறு குதிரைகள் கூட எஞ்சி இருக்காது என்றும் அவர் குறிப்பிட்டுள்ளார்.[5] காரணம் நிர்வாகக் குறைபாடும் குதிரைகளை அக்கரையுடன் சிறப்பாகப் பராமரிக்க தவறியதும் ஆகும். குதிரைகளுக்கு இலாடம் பூட்டும் பணியாளர் கூட அப்பொழுது தமிழ்நாட்டில் இல்லை என்பதாக அவரது குறிப்புகள் தெரிவிக்கின்றன.

ஆனால் ஆசிரியர் வஸ்ஸாப் சொல்லும் காரணம்,

. . . . . . . . இந்தக் குதிரைகள் கரை இறக்கப்பட்டவுடன் அவைகளுக்கு பார்லி தானியத்தை அப்படியே கொடுப்பதற்குப் பதிலாக அதனை வறுத்து தயிருடன் சேர்த்துக் கொடுத்தனர், சூடான பசும்பாலும் கொடுத்தனர். இலாயத்தில் நாற்பது நாட்கள் கட்டிப்போட்டு அவைகளைக் கொழுக்கச் செய்தனர்.

---

4. Ibid. P. 33
5. Nilakanta Sastri — K.A. – Foreign Notices of S. India (1972) P.167

பிறகு, அவைகளுக்குப் போதுமான பயிற்சி அளிக்காத நிலையில் போர் வீரர்கள் அவைகளின் மீது பிசாசுகளைப் போல் ஏறி அமருவர். இந்தக் காரணங்களினால் மிகவும் வலுவான வேகமான, துடிப்பான குதிரை கூட சிறு காலத்திற்குள் பலவீனமாகவும், சோம்பலுடையதாகவும் பயனற்றதாகவும் மாறி விடுகின்றன. இந்த நாட்டுக் கால நிலையில், சாட்டையின் சாடுதல் இல்லாமல், பாய்ந்து செல்லக்கூடிய வன்மைமிக்க இந்தக் குதிரைகளை, இலாயத்தில் நிழலான இடத்தில் நிறுத்தி வைக்க வேண்டிய நிலை ஏற்பட்டால், அவை பலவீனமுற்று, சவாரிக்கு தகுதியற்றதாகி விடுகின்றன. இதன் காரணமாக ஆண்டு தோறும் புதிய குதிரைகளுக்கான தேவை எழுகிறது. இஸ்லாமிய நாட்டு வணிகர்கள் அவைகளை கொண்டு வருகின்றனர்'' என அவர் வரைந்துள்ளார்.[6]

சுல்தான் ஜமால்தீன் வளம் சேர்க்கும் வணிகத்தில் மட்டுமல்லாமல், அஞ்சாமை, ஈகை, அறிவு, ஊக்கம் ஆகியவை எஞ்சாதிருக்கும் அரசியலில் சிறப்புற்று விளங்கினார். ''தம்மில்பெரியார் தமரா ஒழுகுதல், வன்மையில் எல்லாம்தலை'' என்றபொது மறைக்கேற்ப, பாண்டியன் குலசேகரன் சுல்தான் ஜமால்தீனிடம் அரசியல் பணிகளில் உதவிகளை அவாவினார். அப்பொழுது ஈழத்திற்கு அனுப்பப்பட்ட பாண்டியப் படையணிக்கு தலைமை தாங்கும் பொறுப்பு அவருக்கு அளிக்கப்பட்டது. ஈழத்திலிருந்து தமிழர் தளபதிகளான காலிங்கராயர், சோழகங்கன் ஆகியோர்களையும் பாண்டிய நாட்டு கரையிலிருந்து எதிர்கரையான ஈழ நாட்டிற் இயல்பாகச் சென்ற தமிழர்களை துரத்தியடித்த சிங்கள அரசர் புவனேகபாகுவைப் பொருதுவதற்காக பாண்டிய நாட்டுப் படைகள், கிழக்குக் கடற்கரை பட்டினம் ஒன்றிலிருந்த கப்பல்களில் புறப்பட்டன. அவை ஈழத்தையடைவதற்குள்ளாக மன்னர் புவனேகபாகு இறந்துவிட்டார். நாட்டில் அராஜகமும் பசிப்பிணியும் நிலவின. இந்தச் சூழ்நிலையில் சுல்தான் ஜமால்தீன் ஈழத்தின் உறுதிமிக்க சுபகிரி கோட்டையைக் கைப்பற்றிஅதனை நாசமுறச் செய்ததுடன் அங்கு புனிதப் பொருளாக காக்கப்பட்டு வந்த புத்தபிரானது பல்லையும் ஏனைய கொள்ளைப் பொருட்களையும் கவர்ந்து வந்து பாண்டியனிடம் ஒப்படைத்தார். பாண்

---

6. Wassaff — Elliot and Dowson – Part II P.314.15

டியனும் "கதிரவனைக் கண்ட தாமரை போல மகிழ்ச்சி அடைந்ததாக" இலங்கை வரலாறான மகாவம்சம் விவரித்துள்ளது. அத்துடன், சுல்தான் ஜமால்தீனை ஆரிய சக்கரவர்த்தி எனவும் தமிழர்களில் தலைசிறந்தவர் என்றும் அந்நூலில் குறித்துள்ளது[7]

"ஆரியச் சக்கரவர்த்தி" என்று விருது, அந்த கால கட்ட அரசியலில், தளபதிகளுக்கு வழங்கப்பட்டதொரு சிறப்புப் பட்டமாகும். இதனை, 13வது, 14வது நூற்றாண்டைச் சேர்ந்த திருப்புல்லாணி திருக்கோயில் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.[8] சுல்தான் ஜமால்தீனுக்கும் இந்த விருது வழங்கப்பட்டிருந்தது. என்பது தெளிவாகிறது.[9] கல்வெட்டு ஒன்றில் பாரசீக மன்னர் ஷாவிற்கு "ஆரியா" என்ற பட்டம் இருந்தது இங்கு நினைவு கொள்ளத் தக்கது. பாண்டியப் பேரரசர் குலசேகரரிடமிருந்து இந்த ஆரியச் சக்கரவர்த்தி, ஆணையொன்றைப் பெற்றது விவரிக்கப்பட்டுள்ளது. இன்னொரு இலங்கை வரலாற்று நூல், இந்த ஆரியச் சக்கரவர்த்தி, பாண்டிய நாட்டில் இராமேசுவரத்தை அடுத்த பகுதியை ஆண்ட குறுநில மன்னர் எனவும் பெரிதுபடுத்திக் குறித்துள்ளது.[10] வணிகத்தின் மூலம் எய்திய செல்வத்தைத் தவிர்த்து கீழ்க்கோடி நாடான சீனத்திலிருந்தும், இந்துஸ்தானத்தின் வடபகுதிகளிலிருந்தும், மாபார் என வழங்கப்பட்ட தென் தமிழகத்தின் தேவைக்கு எந்தவிதமான பொருட்கள் இறக்குமதி செய்யப்படல் வேண்டும் என்பதற்கான கட்டளைகளை சுல்தான் ஜமால்தீன் வழங்கி வந்தார். தரவழைக்கப்பட்ட பொருட்களை அவரது முகவர்கள் முதலில் தேர்வு செய்த பிறகு எஞ்சியவற்றை மற்றவர்கள் விலைக்கு வாங்க இயலும். அவ்விதம் தேர்வு பெற்ற பொருட்களை அவரது கப்பல்களில் அல்லது பிறரது வாணிபக் கலங்களின் மூலம் மேற்கு நாடுகளுக்கு அனுப்பப்பட்டன. இதனைப் போன்றே மாபாரின்

---

7. Nicholos and Paranavitana-Concise History of ceylon(1960)
8. A.R 110, 113/1903
9. Srinivasa Ayangar Dr.S-South India and har Mohammadan Invaders (1921) P.57.
10. Nicholos and Paranaviathana - Concise History of ceylon (1961) p. 289.

பண்டங்களும் மாலிக்–குல்–இஸ்லாமினால் தேர்வு செய்யப்பட்டு எஞ்சியவை கிழக்கு, மேற்கு நாடுகளுக்கான கப்பல்களில் ஏற்றுமதி செய்யப்பட்டன. அவைகளின் மூலம் சம்பாதிக்கப்பட்ட செலாவணியைக் கொண்டு உள்நாட்டுச் சந்தைக்குத் தேவையான பொருட்கள் அந்த நாடுகளில் வாங்கப்பட்டன. உலகின் கடைக்கோடி நாடான சீனத்தின் பொருட்கள் மேற்கு கோடி மூலையில் உள்ள நாடுகளில் பாவிக்கப்பட்டன. இத்தகைய முறையான தொடர் வாணிகம் அதுவரை யாராலும் திறம்பட மேற்கொள்ளப்பட வில்லையென வஸ்ஸாப் வரைந்துள்ளார்.[11] கிழக்கும், மேற்கும் கொண்டிருந்த இத்தகைய உலகம் அளாவிய கடல் வணிகத்திற்கு வித்திட்டவர்கள் இந்த தமிழ்நாட்டு அரபு முஸ்லீம்கள் என்பதை யாரும் மறுக்க முடியாததாகும். அவர்களின் வழித்தோன்றல்கள் இந்த வாணிக முறையை பதினெட்டாம் நூற்றாண்டின் துவக்கப்பகுதி வரை மேனாட்டாரும் வியக்கும். வண்ணம் காயல், கீழக்கரை, தொண்டி, தேவிபட்டினம், நாகப்பட்டினம் ஆகிய துறைகளில் தொடர்ந்து ஒழுகி வந்தனர். இவர்களில் சிறந்து விளங்கிய செம்மல்களான சீதக்காதி மரைக்காயர், அப்துல் காதிர் மரைக்காயர் ஹபீப் மரைக்காயர் பற்றிய வாணிப வளம், வள்ளண்மை, வாழ்க்கை ஆகியவை, வரலாற்று இதழ்களில் வாடாத மலர்களாக இடம் பெற்றுள்ளன.

இந்நிலையில் சீனத்தில் சிறப்புடன் ஆட்சிபுரிந்த பேரரசர் குப்ளாய்கானது அரசவைக்கு அரசியல் தூதுவராக செல்ல வேண்டிய சூழ்நிலை சுல்தான் ஜமாலுத்தீனுக்கு ஏற்பட்டது. அன்புடைமை, ஆன்ற குடிப்பெருமை, வேந்தன் விரும்பும் பண்புடைமை, ஆகிய தூதுக்குரிய இலக்கணம் அனைத்தும் அவரிடம் அமைந்து இருந்ததை நன்கு உணர்ந்த பாண்டியன் மாறவர்மன் குலசேகரன், இந்த வணிகப் பெருமகனை நகச்சொல்லி நன்றி பயக்கும் தூதாகக் கொண்டதில் வியப்பில்லை. கி.பி. 1279ல் சீனம் சென்ற இவர் பேரரசர் குப்ளாய்கானது விருந்தோம்பலில் திளைத்தவராக பத்துமாதங்கள் தங்கிவிட்டு காயல் திரும்பினார். தொடர்ந்து அவரும் அவரது மக்களும் இந்தப் பணியில் பாண்டி

11. Nilakanta sastri K.A. – Foreign Notices of South India (1952) p. 189.

யனுக்கு உதவியதை யுவாங்ஷிங் என்ற சீன நூல் வரைந்துள்ளது[12]. இவர்களது பணியில் பாண்டியனைப் போன்று மகிழ்ச்சியும் மனநிறைவும் கொண்டார் பேரரசர் குப்ளாய்கான். இதனால் தனது "மருமகன்" என்று பொருள்படும் "பூ-மா" என சீன மொழியில் பாண்டியனை உறவு கொண்டாடி வந்தார்.[13] இவ்விதம் சீனமும் தமிழகமும் அரசியலுக்கு அப்பாற்பட்டு, அன்று, நெருக்கமான, இயல்பான மனித உணர்வுகளுடன் இணைக்கப்பட்டிருந்ததை எண்ணும்பொழுது, நமது நெஞ்சம் நெகிழ்வு பெறுகிறது. பதின்மூன்றாம் நூற்றாண்டில் எய்திய சாதனையை இருபதாம் நூற்றாண்டு அரசியலில் எய்த இயலவில்லை !

பாண்டிய நாட்டிலிருந்து அரசியல் தூதுக்குழுக்கள் கி.பி. 1279, 1280, 1282, 1283, 1284. 1286, 1288, 1290, 1301 மற்றும் 1314 ஆகிய ஆண்டுகளில் சீனம் சென்று வந்தன.[14] கி.பி. 1301ல் சுல்தான் ஜமால்தீனது மகன் பக்ருதீன் அகமது என்பவர் சீனம் சென்று நான்கு ஆண்டுகள் தூதுவராகப் பணியாற்றிய பின் தாயகம் திரும்பினார். வழியில், கரையை எட்டுவதற்கு இரண்டு நாட்கள் பயணத் தொலைவில், கப்பலில் இறந்து போனார், கிழக்கு இராமநாதபுரம் கடற்கரையில் சுந்தரமுடையான் என்ற கிராமத்திற்கு அருகில் உள்ள சீனியப்பா தர்கா என்ற தலம் அவரது அடக்கவிடமாக இருக்க வேண்டுமென ஊகிக்கப்படுகிறது.[15] இவரது மைந்தர் நிஜாமுத்தின் கி.பி. 1341ல் பாண்டிய நாட்டின் கடைசித் தூதுவராக சீனத்திற்கு அனுப்பப்பட்டார். அவரது இன்னொரு மைந்தரான ஸிராஜ் தக்கியுத்தீன் பத்தனில் (பெரியபட்டினம்) பெரும் வணிகராகவும், பாண்டிய மன்னரது வணிகப் பிரதிநிதியாகவும் இருந்து வந்தார். இஸ்லாத்தில் நிர்ணயம் செய்யப்பட்டுள்ள ஐம்பெரும் கடமைகளில் ஒன்றாகிய ஜக்காத்தை (தானம்), — மொத்த இருப்புச் சொத்தின் பெறுமா

---

12. Nilakanta Sastri K.A. — Foreign Notices of South India (1972) p. 150
13. Ibid — 153
14. Ibid — 154
15. Krishnasamy Iyanger Dr. S.K. — South India and Her Mohammedan Invaders (1921) p. 193.

னத்தில் இரண்டரை சதவீத மதிப்புத்தொகையை ஆண்டிற்கு ஒருமுறை வழங்குவதற்குப் பதிலாக ஒவ்வொரு மாதமும் வழங்கி வந்தார் என பாரசீக காப்பியமொன்றில் குறிப்பிடப்பட்டுள்ளது.[16] சிறப்பான வகையில் செல்வமும் செல்வாக்கும் பெற்று இருந்தும், சமயத்தைப் பேணுவதிலும், அன்றறிவாம் எண்ணாது அறஞ் செய்யும்'' ஆற்றலும் பெற்று இருந்த அவரது அரிய பண்பினை யாரும் பாராட்டாமல் இருக்க முடியாது. அதனைஅடுத்து சகோதர சண்டைகளினால், பாண்டியப் பேரரசு பலவீனமடைந்தது. ஏறத்தாழ நாற்பது ஆண்டுகளுக்கு மேலாக தமிழக அரசியலில் ஏற்பட்டிருந்த இஸ்லாமியரது நெருக்கமும், பிடிப்பும் தளர்ந்தது. தில்லிப் பேரரசின் தலையீடு அதனை உறுதிப்படுத்தியது.

---

16. Futuhus Salatin of Isami — (English Trans) vol II Aligarh 1977 verses. 7037-39

# 12

## தில்லியும் தமிழ்நாடும்

பாண்டியப் பேரரசை தொடர்ந்து நாற்பது ஆண்டுகளுக்கு மேலாக ஆட்சிசெய்த முதலாவது மாறவர்மன் குலசேகர பாண்டியன் கி.பி. 1310ல் அவனது மக்களால் கொலையுண்டான். மதுரை, கொங்கு ஆகிய பகுதிகளில் முழு உரிமையுடன் ஆட்சி புரிந்த பாண்டிய இளவல்கள், பேரரசு கட்டிலில் அமருவதற்கு போட்டியும் பூசலும் விளைவித்தனர். தமது குறிக்கோளை எய்துவதற்கு அந்நியர் தலையீட்டையும் உதவியையும் எதிர்பார்த்தனர். இன்றைய கருநாடகப் பகுதியான துவாரசமுத்திரத்தில் ஆட்சி புரிந்த ஹொய்சாள மன்னன் மூன்றாவது வீர பல்லாளனது நட்பை, வீரபாண்டியன் நாடினான். இன்னொரு இளவலான சுந்தர பாண்டியன், தில்லியில் அரசாண்ட அலாவுதீன் கில்ஜியின் உதவியைக் கோரினான். இதனைத் தஞ்சை மாவட்ட திருக்களர் கல்வெட்டு ''முன்னால் ராசராசன் சுந்தரபாண்டியன் துலுக்கருடன் வந்த நாளிலே, ஒக்கருடையாரும் இவருடைய தம்பிமாரும் அனைவரும் அடியாரும் செத்தும் கெட்டும் போய் அவரது ஊரும் வெள்ளத்தாலும் கலகத்தாலும் பாழாய் இருக்கிற அளவிலே .... ... .... ...'' என்று விவரிக்கிறது.[1] முடிவு பாண்டியர்கள் தங்களது ஒற்றுமைக் குறைவாலும் திறமையற்ற நிர்வாகத்தாலும் சிறுகச் சிறுக அழிந்தார்கள்.

இவர்களது பூசலில் தலையிட்ட தில்லி தளபதி மாலிக்காபூர், அவர்களது பலவீனத்தைப் புரிந்து கொண்டு, அவர்களைப் புறக்கணித்தவனாக இராமேஸ்வரம் வரை ஊடுருவிச்

---

1. A.R. 642/1902 (திருக்களர்)

சென்று தமிழகத்தில் ஸ்ரீரங்கம், சிதம்பரம், மதுரை, இராமேஸ்வரம் ஆகிய கோயில்களில் கொள்ளைப் 'பொருட்களுடன் கி.பி. 1311ல் தில்லி திரும்பினான். அப்பொழுது அவனது சிறிய படையணி யொன்று மதுரையில் தளம் கொண்டிருந்தது.[2] ஊர் இரண்டுபட்டால் கூத்தாடிக்குத்தானே கொண்டாட்டம். மீண்டும் கி.பி. 1318ல், தளபதி குஸ்ராகான் தலைமையில் தில்லிப் படையொன்று தமிழகத்தை சூறையாட வந்தது. பாண்டிய நாட்டுப் பெருநகரான பத்தனி (பவித்திர மாணிக்கப்பட்டினத்தி)லிருந்து பாண்டியனும் அவனது ராஜகுருவும் பயந்து பட்டினத்தை விட்டு மறை இடங்களுக்கு ஓடினர். அப்பொழுது பாண்டியனது அமைச்சராக இருந்த பெருவணிகர் சுல்தான் ஸிராஜ் தக்யுதீன் மட்டும் கொள்ளைக்காரன் குஸ்ராகானுக்கு அஞ்சாமல் பத்தனில் இருந்தார். அவர் ஒரு அராபிய முஸ்லீம் என்பதைக் கூட கருதாமல் கொடியோன் குஸ்ரு அவரை கைது செய்து அவரது பெருஞ்செல்வத்தை கொள்ளை கொண்டான். பிறகு அந்தக் கல்நெஞ்சன் அவரைக் கொலை செய்துவிட்டான் என வரலாற்று ஆசிரியர் **சாகிருத்தீன் பர்ணி** குறித்துள்ளார்,[3] ஆனால் இன்னொரு வரலாற்று ஆசிரியரான அமீர் குஸ்ருவின் குறிபபுகளில் கொள்ளையன், சுல்தான் ஸிராஜுத்தீனது அழகிய மகளைத் தனக்கு மணமுடித்து தருமாறு கட்டாயப் படுத்தினான் எனவும், அதனால் மணமுடைந்த சுல்தானும், அவரது அழகு மகளும், விஷம் அருந்தி தற்கொலை செய்து கொண்டனர் எனவும் வரையப்பட்டுள்ளது. இந்த நிகழ்ச்சிக்கு பத்து ஆண்டுகளுக்குப் பிறகு, தமிழகம் வந்த பாரசீகக் கவிஞர் இஷமி, இந்த சோக நிகழ்ச்சியை ஒரு சிற்றிலக்கியமாகவே பாடியுள்ளார்.[4]

பாண்டிய நாட்டில் எழுந்த சீரழிவு, குழப்பம் ஆகியவைகளின் பின்னணியில் தமிழகம் தில்லிப் பேரரசுடன் கி.பி. 1323ல் இணைக்கப்பட்டது.[5] தில்லிப்படையின் ஒரு அணி தொடர்ந்து

---

2. Srinivasa Ayyangar Dr. S. -South India and her Mohammedan Invaders (1921) p. 123
3. Elliot and Dowsson-History of India - vol. III p. 219.
4. Futa-hu-Saltin (Madras) p. 369, 70.
5. S.A.Q. Hussaini-History of Pandya Country (1962) p.74

மதுரையில் செயல்பட்டு வந்தது. அன்றைய கால நிலையில் மதுரை தில்லியுடன் தொடர்பு கொள்ள பத்து மாதங்கள ஆகின. கி.பி. 1320ல் ஆட்சிக்கு வந்த கியாஸுதீன் துக்ளக் ஆட்சி நீடிக்கவில்லை. அவரது வாரிசான முகம்மது பின் துக்ளக் கி.பி. 1323ல் பதவி ஏற்றபொழுது, மாபார் என அரபிய வணிகர்களால் அழைக்கப்பட்ட தமிழகம் தில்லிப் பேரரசின் இருபத்து மூன்று மாநிலங்களில் ஒன்றாக இருந்து வந்தது. அவருடைய குழப்பமான அரசியல் முடிவுகளும், மக்களது மனநிலையைப் பிரதிபலிக்காத அவரது நடைமுறைக்கொள்கைகளும், தில்லித் தலைநகரை மாற்றும் திட்டமும், அவருக்கு பல புதிய பிரச்சனைகளைத் தோற்றுவித்தன. சில அரசியல்வாதிகள் இதனை தமக்குச் சாதகமாக பயன்படுத்திக் கொண்டு தமிழகத்திற்கு வடக்கே இருந்த தில்லிப் பேரரசின் மாநிலங்களான காம்பிளி.திலாங் ஆகியவைகள் தில்லி பேரரசில் இருந்து விடுபட்டு தன்னாதிக்கம் பெற்றன. இதனால் மாபார் தில்லியில் இருந்து துண்டிக்கப்பட்டது. அவரது ஆட்சி முறையை எதிர்த்தனர். அவர்களில் ஒருவராக அவரது உறவினரும் மதுரை ஆளுநருமான செய்யத் ஜலாலுதீன் அஸன் தன்னாட்சி பெற்ற தனி மன்னராக, மாபாரின் சுல்தானாக கி.பி. 1333ல் மதுரையில் ஆட்சி பீடமேறினார்.[6] அவரைத் தொடர்ந்து எட்டு சுல்தான்கள் மதுரை மன்னர்களாக கி.பி. 1378 வரை ஆட்சி புரிந்தனர். அவர்களின் பெயர்களும், ஆட்சிக்காலமும்.

| | | |
|---|---|---|
| 1. | ஜலாலுத்தீன் அஷன்ஸா | கி.பி. 1333–1340 வரை |
| 2. | அலாவுதீன் உத்தொஜி | கி.பி. 1340–1341 வரை |
| 3. | குத்புதீன் | கி.பி. 1341 (நாற்பதுநாட்கள்) |
| 4. | கியாஸுத்தீன் தமகானி | கி.பி. 1341–1344 வரை |
| 5. | நஸிருத்தீன் | கி.பி. 1344–1355 வரை |
| 6. | அதில்ஷா | கி.பி. 1356–1358 வரை |
| 7. | பக்ருத்தீன் முபாரக்ஷா | கி.பி. 1359–1371 வரை |
| 8. | அலாவுதீன் சிக்கந்தர்ஷா | கி.பி. 1372–1378 வரை |

இவர்கள் வெளியிட்ட வெள்ளி, செம்பு நாணயங்களின் நிழல் படம் இணைப்பில் கொடுக்கப்பட்டுள்ளது. அவை மதுரை, பெரிய

6. Venkataramayya Dr. Journal of Madras University vol. XI-1 p. 44,47.

பட்டினம், அழகன்குளம், ஏர்வாடி ஆகிய ஊர்களில் அகழ்ந்து எடுக்கப்பட்டவை. மேலும், புதுக்கோட்டை மாவட்டத்தில் உள்ள பனையூர், ராங்கியம் ஆகிய ஊர்களில் கி.பி. 1332, 1341 களிலும் வருட ஆட்சிக்கால கல்வெட்டுக்களிலும் பசும்பொன் தேவர் திருமகன் மாவட்டம் திருக்கோலக்குடி, கண்டதேவி ஆகிய ஊர்களில் கி பி. 1358, 1368 வருட ஆட்சிக்கால நிகழ்ச்சிகளைக் குறிப்பிடும் கல்வெட்டுக்களும் கிடைத்துள்ளன.[7] இவைகளைத் தவிர இந்த சுல்தான்களின் ஆட்சி விவரங்களை அறிவிக்கக்கூடிய வரலாற்று ஆவணங்கள் எதுவும் இல்லை. அத்துடன் மதுரை சுல்தான்களது ஆளுகைக்கு உட்பட்ட பகுதி பற்றிய சரியான விவரங்களும் இல்லை. எனினும் சுல்தான்களது ஆட்சியை அகற்றிய குமாரகம்பணனது மனைவி கங்காதேவியின் மதுரை விஜயம்! என்ற நூலில் இருந்து, சிதம்பரத்திற்கு தெற்கே உள்ள தமிழகம் முழுவதும் மதுரைக்கு உட்பட்டு இருந்தது என்ற குறிப்பு கிடைக்கிறது.[8] சோழ மண்டலக் கரையையொட்டிய தஞ்சை, திருச்சிராப்பள்ளி, இராமநாதபுரம், திருநெல்வேலி, சீமைகளுடன் மதுரையும், தென்ஆற்காட்டில் ஒருபகுதியும் இணைந்த பகுதி என டாக்டர் ஹுசேனி கருத்து தெரிவித்து இருக்கிறார்.[9] சுல்தான் கியாஸுதீன் தமகானி ஆட்சியின் பொழுது மதுரைக்கு கி.பி. 1344ல் விஜயம் செய்த துனிஷிய நாட்டுப் பயணியான இபுனு பதூதாவின் பயணக் குறிப்புகள் ஒரு சில விவரங்களைத் தருகின்றன. மதுரை சுல்தான் ஈவு இரக்கம் இல்லாமல் தனது எதிரிகளை அழித்து ஒழித்த கொடுஞ் செயல்கள், கண்ணனூர் கொப்பம்போர், அங்கு சிறைபிடிக்கப் பட்ட ஹொய்சள நாட்டு மன்னன் (வீரபல்லாளா) கொல்லப் பட்டது. தில்லிநகர அமைப்பில் மதுரை நகரம் அமைக்கப்பட்டு இருப்பது ஆகியவை பற்றிய விபரங்கள் அவை.

சிறிது காலம் கழித்து இபுனு பதூதா மீண்டும் பத்தனுக்கு வந்து அங்கிருந்து ஏமன் நாட்டிற்குப் புறப்பட்டுக் கொண்

---

7. Krishnaswamy Ayyangar South India and Her. Mohammedan Invaders 225-229.
8. Journal of Madras University -Vol XI No : 1 P.56
9. Hussaini Dr. S.A.Q - History of Pandiya Country (1962) P. 194.

டிருந்த எட்டுக் கப்பல்களில் ஒன்றில் பயணமாகி கொல்லம் போய்ச் சேர்ந்தார், என்றாலும் இந்த சுல்தான்களின் ஆட்சி, தமிழகத்தில் எந்தவிதமான புதிய சாதனையும் ஏற்படுத்த இயல வில்லை என்பதை மட்டும் ஊகிக்க முடிகிறது. அன்றைய கால கட்டத்தில் தமிழக அரசியலில் நிலவிய பிரிவினை சக்திகளின் ஒரு அங்கமாகவே தனிமையுற்று அந்த ஆட்சி தோற்றமளித்தது. காரணம் மதுரை அரசை எந்த சந்தர்ப்பத்திலும் கைப்பற்றி தங்கள் அரசுடன் இணைப்பதற்கு மதுரை சுல்தான்களின் எதிரி கள் தயாராக இருந்தனர். வடக்கே தொண்டை மண்டலத்தை ஆண்ட ராஜ கம்பீரச் சம்புவரயர்கள். வடமேற்கே கொப் பத்தையும் அடுத்து திருவண்ணாமலையும் கோநகர்களாகக் கொண்டு ஆட்சி செய்த ஹொய்சாள மன்னர்கள். திருவிதாங் கூரில் ஆட்சி செய்த மன்னர் ரவிவர்ம குலசேகரன் ஆகியோர் மற்றும் ஆங்காங்கு சில பகுதிகளில் ஆட்சி செய்த பாண்டிய இள வல்கள் இவர்கள் அனைவரையும் அடிமைப்படுத்தி ''இந்து ராஜ்யம்'' என்ற சமயப் பூச்சில் தென்னகம் முழுவதையும் ஆந் திர ஆதிக்கத்தில் கொண்டு வர முயன்றான் குமார கம்பண் ணன். இந்த இக்கட்டான சூழ்நிலையை, மதுரையில் மலர்ந்த இசுலாமியரின் புரட்சி அரசு, சமாளித்து நின்றது. கி.பி.1342ல் மதுரை சுல்தான் மூன்றாவது விரபல்லாளனைக் கொப்பம் போ ரில் முறியடித்தார்.[10] தெற்கே தனது கண்ணோட்டத்தைக் கொண்டிருந்த குமார கம்பண்ணன் ஹொய்சாள அரசு வீழ்ச்சி யைத் தனக்கு சாதகமாகப் பயன்படுத்தி, தொண்டை நாட்டு சம்புவரையர்களை கி.பி.1347ல் வென்றான். அடுத்து அவனது படைகள் குழப்பத்திலிருந்த தமிழகத்தை ஊடுருவி சேது மூலம் வரை சென்று திரும்பின. இந்தப் படையெடுப்பிற்கான நியா யத்தை அவனது மனைவி கங்காதேவி ஸமஸ்கிருதத்தில் எழுதிய கம்பராயன சரித்திரம் அல்லது'' மதுரை விஜயம்'' என்ற கற்பனைக் காவியத்தில் குறிப்பிடுகின்றார்.[11]

பாண்டிய நாட்டு ஆலயங்களில் வழிபாடுகள் நடைபெற வில்லை. தாம்பிரபரணி ஆறு, பசுக்களின் இரத்தஆறாக ஓடி

---

10. Krishnasami Iyangar Dr. S — South India and her Mohammedan Invaders (1921) PP 167, 168.
11. Madura Vijayam (Annamalai University Publication) 1957

யது. தமிழ்நாடு அடுக்களைகளில் சமைக்கப்படும் இறைச்சியின் மணம் எங்கும் பரந்து வீசியது. முந்தைய பாண்டியர்களுக்கு அகத்திய முனிவரால் வழங்கப்பட்ட வீரவாள் மூலையில் கிடந்தது. அதனை சுமங்கலியான பெண் ஒருத்தி கம்பனனிடம் கொடுத்து துலுக்கர்களை வெற்றி கொள்ளுமாறு வேண்டினாள்.'' ...... இங்ஙனம் தொடர்கிறது அந்த கற்பனைக்காவியம்! கணவனைப் புகழ்ந்து பாடும் மனைவியின் பாடல்கள் வேறு எப்படி இருக்கும்? இஸ்லாமியர்களுக்கு எதிராக இதைவிட மோசமான கற்பனையை அந்த அம்மையார் செய்ய இயலாது! இது ஒருதலைப்பட்சமான மிகைப்படுத்தப்பட்ட வர்ணனை இதனை உறுதி செய்யும் வேறு ஆதாரம் எதுவும் கிடைக்கவில்லையென்றாலும், மதுரை மீதான குமார கம்பணனது மின்னல் தாக்குதல் கற்பனையல்ல. இந்த தாக்குதலுக்கு இருபது ஆண்டுகளுக்குப் பிறகும், மதுரை சுல்தான்களது ஆட்சி தொடர்ந்ததை வரலாற்றுச் சான்றுகள் உறுதிப்படுத்துகின்றன. மேலும் மதுரையிலும், பெரியபட்டினத்திலும், கிடைத்த மதுரை சுல்தான்களது காசுகள் அவர்களது ஆட்சிக்கால வரம்பை தெளிவாக தெரிவிப்பனவாக உள்ளன.[12] தொடர்ந்து குமார கம்பனது வெற்றி தென்னகத்திலும் விஜயநகரப் பேரரசு உருவாகும் ஒரு புதிய திருப்பத்தின் முன்னறிவிப்பாக அமைந்தது.

பாமர மக்களின் மத உணர்வுகளை கூர்மைப்படுத்தி அந்நியர்களாக, தமது மத விரோதிகளாக, மதுரை சுல்தான்களைத் தமிழ் மக்களிடம் அறிமுகப்படுத்தி, அவர்களைத் தனிமைப் படுத்தி. முடிவில் அவர்களது அரசை கி.பி. 1378 ல் கம்பணன் அகற்றினான். ஆனால், தலைமுறை தலைமுறையாக தென்னகத்தை ஆண்ட பாண்டியமன்னர்களது, தமிழ்வேந்தர்களது வழித்தோன்றல்களிடம் இந்த மன்னர்களிடம் அவர்கள் இழந்த ஆட்சியை மீண்டும் கொடுக்கவில்லை. மாறாக தமிழ் மண்ணில் வடுகரது பாளையப்பட்டு ஆட்சியும், தல, தேச, திசை காவல் முறைகளும் அவர்களது கலாச்சாரமும், ஆந்திர நாட்டிற்கு தெற்கே தமிழகம் முழுவதும் அரசியல் மூலமாக பரவுவதற்கு வழி வகுத்தன. வெகு தொலைவில்உள்ள தில்லியுடன் இணைக்கப்பட்டிருந்ததற்குப் பதிலாக அதைவிட குறைவான தொலைவில் உள்ள

---

12. கமால் எஸ்.எம் தமிழ்நாட்டு வரலாற்றுக் கருத்தரங்கு (1979) பக் : 312

விஜயநகரத்துடன் மதுரை இணைக்கப்பட்டது. இசுலாமிய ஆள வந்தார்களுக்குப் பதில் வடுகர், தொடக்கத்தில் விஜயநகரப் பேரரசின் நேரடி ஆட்சியிலும், அடுத்து, அவர்களது ஆளுநர் களால் துவக்கப்பட்ட மதுரை, மைசூர், தஞ்சை, செஞ்சி நாயக் கர்களது பரம்பரை ஆட்சியிலும் ஏறக்குறைய முன்னூறு ஆண்டு கள் தமிழகம் இறுக்கமாகப் பிணைக்கப்பட்டது.

இவர்களது ஆட்சியின் விளைவு என்ன என்பதைப் பற் றிய பலதிறப்பட்ட கருத்துக்கள், வரலாற்று ஆசிரியர்களால் வெளியிடப்பட்டுள்ளன. அவைகளில்,

''அந்த அரசின் செல்வமும் சிந்தனையும் ஆலயங்களாக வும் சிற்பங்களாகவும்வெளிப்படுத்தப்பட்டன. அத்தஅரசு தனது முழுவளத்தையும் மக்களுக்குச் செலவிடச் சித்தமாக இருந்ததை அப்பொழுது நிறைவு செய்யப்பட்ட நீர்ப்பாசனத் திட்டங்களின் எண்ணிக்கையையும் இயல்பையும் கொண்டும், மனநிறைவு பெற்று மலர்ச்சியடைந்த மக்களைக் கொண்டும் உணரலாம்.'' என்பது திருநெல்வேலி மாவட்ட' மானுவல் நூலாசிரியர் ஏ. ஜே ஸ்டூவர்ட்டின் கணிப்பு ஆகும். ஆனால் அவருக்கு காலத்தால் முற்பட்ட மதுரைச் சீமை வரலாற்று ஆசிரியர் நெல்சனோ

''நாயக்கர் ஆட்சியின் முடிவு மதுரைக்கு ஒரு பெரிய வரப்பிரசாதமாகும். காரணம் அந்த ஆட்சி எல்லாவிதமான முன்னேற்றத்திற்கு முட்டுக்கட்டையாக இருந்தததுடன், பல திறப்பட்ட மக்களது – செல்வந்தர், ஏழை – உயர்ந்தவர் தாழ்ந் தவர் – ஆகிய அனைவருக்கும் உண்மையான மகிழ்ச்சியைத் தந்தது'' என மிகவும் தெளிவாக தமது கருத்தை வெளியிட் டுள்ளார்.[14] நெல்லை மாவட்ட வரலாற்று ஆசிரியரான புனித தந்தை கால்ட்வெல்,

''மேலைநாட்டு நாகரிக முறைப்படி, அல்லது, நல்லது கெட்டது என முடிவு செய்யப்படும் முறை அல்லது இந்து இசுலாமிய நெறிமுறைகளின் அடிப்படையில் ஆய்வு செய்தால் கூட நாயக்க மன்னர்கள், தங்களது கடமையில் இருந்து நழுவி

---

13. Stuart A.J. — Tinnevely Manual (1928)
14. Alexander Nelsonn-Manual of Madura Country (1868)

யுள்ளனர் என்றே முடிவு செய்யப்பட வேண்டியுள்ளது. அவர்களது ஆட்சி, விபச்சாரம், பாதகங்கள், கொள்ளை, கொடுமைகள், கொலைகள், பொது மக்களுக்கு எதிரான செயல்களின் பட்டியலாக இழி செயல்களின் பதிவுகளுமாக இருந்தது. அர்ச்சகர்களுக்கும் ஆலயங்களுக்கும் அன்பளிப்புகளை வழங்கியதின் மூலம் அவர்களுக்கு சாதகமாக விளம்பரம் செய்யுமாறு செய்து பொதுமக்களை அவர்களது அக்கிரம ஆட்சியில் வாயடைத்துப் போகுமாறு செய்தனர்''. என தமது திருநெல்வேலி சீமை வரலாற்றில் கருத்து தெரிவித்துள்ளார்.[15]

இந்தகாலக்கட்டத்தில் வடுகர் ஆந்திரமாநிலத்தில் இருந்து கணிசமான எண்ணிக்கையில் பெயர்ந்து வந்தனர். தமிழகத்தில் வேலூர், செஞ்சி, தஞ்சை மதுரை நாயக்க அரசுப்பகுதியில் நிலையாகக் குடியேறினர். ஆங்காங்கு அவர்களுக்கு பாளையப் பட்டுக்களில் நிர்வாகம் ஒப்படைக்கப்பட்டது. மிகவும் சிறுபான்மையரான அவர்களுக்கு சிறப்பான சலுகைகள் அளிக்கப்பட்டன அரசுப் பணிகளிலும் தலைமைப் பொறுப்புகள் வழங்கப்பட்டன. மொழி, கலை, பண்பாடு, இனம் ஆகியவைகளில் தம்மோடு இணக்கமுள்ள குடிகளுக்கு அந்த அரசு அரசியல் ஊக்குவிப்புகள் அளித்தது இயல்புதான்! ஆனால், எந்தக்குடி மக்களது நலனுக்காக கோலோச்சியதாக பெருமைப்பட்டார்களோ—அந்தக் குடிமக்களது, தமிழர்களது மொழி, கலை ஆகிய முன்னேற்றத்திற்கு எவ்வித முனைப்பும் கொள்ளவில்லை என்பது வரலாறு, அவர்களது ஆட்சிக்காலங்கள் கி.பி. 1736 வரை இந்த அரசர்களது அவையில் எந்த தமிழ்ப்புலவர்களும் பாராட்டப் படவில்லை. இந்த நெஞ்சை நெருடும் நிலையை, ''கனத்த சிராப்பள்ளிதனில் வடுகர் கூத்து கட்டியாளுவதாச்சு, தஞ்சாவூரோ, முனைத்த மராட்டிய காடு மிஞ்சிப் போச்சு ... ...'' என்ற தனிப்பாடல் தெளிவாகச் சுட்டுகிறது.

---

15. Caldwell Fr. — Political and Physical History of Tirunelveli Dist.

# 13

## நாயக்கரது நேயம்

நாயக்கர்களது ஆட்சியில் தமிழக இஸ்லாமியர்களது பங்கு அரசியலில் மிகவும் குறைவு. வடக்கே இருந்த பாமினி சுல்தான்களுக்கும் நாயக்கர்களுக்கும் கடுமையான பகை உணர்வுகள் நிலவி வந்தபொழுதும் தமிழக அரசியலில் அதன் பிரதிபலிப்புகள் இல்லையென்றும் அளவிற்கு அமைதியான போக்கு காணப்பட்டது. நாயக்கர்களது படைப்பிரிவுகளில் தமிழக இஸ்லாமியர்கள், படை வீரர்களாகவும், பொறுப்புள்ள பணிகளிலும் சேவை செய்தனர். அதன் காரணமாக இராமராயர் போன்ற நாயக்க மன்னர்கள், இஸ்லாமியர்களது மத உணர்வுகளை மதித்துப் போற்றிய சம்பவங்கள் வரலாற்றில் குறிக்கப்பட்டுள்ளன. மன்னருக்கு ராஜ விசுவாசம் தெரிவித்தல் போன்ற நிகழ்ச்சிகளிலுங் கூட, இஸ்லாமியர்கள் அரசருக்கு முன்னே வந்து தலைதாழ்த்தி அடி பணிந்து விசுவாசப் பிரமாணம் செய்வதற்குப் பதிலாக அவர்களது திருமறையான திருக்குர்ஆன் முன்னதாக விசுவாசப் பிரமாணம் எடுத்துக் கொண்டால் போதும் என நாயக்க மன்னர் ஆணை பிறப்பித்து இருந்ததாகத் தெரிகிறது.[1] மதுரை, திருச்சி, தஞ்சை போன்ற புகழ் வாய்ந்த கோட்டைகளில் முழுப் பொறுப்பு (கிலேதார் பதவி) இஸ்லாமியருக்கு வழங்கப்பட்டிருந்தது. மேலும், முக்கியமான படைப் பிரிவுகளையும் இஸ்லாமியர் இயக்கி வந்தனர். கி.பி. 1639ல் திருமலை மன்னர் இராமநாதபுரம் சேதுபதி மன்னரை செயித்துவா தனது தளபதி இராம்பையன் தலைமையில் பெரும் படையணியை அனுப்பி வைத்தார். அந்தப் படையெடுப்பில் வர்ணனையை படிக்கும்பொழுது

---

1. Sathianathair - History of Madurai Nayaks-Chap. 2 p. 353

இந்த உண்மையை உணர முடிகிறது. நாயக்க மன்னருக்கு உதவ அவரது எழுபத்து இரண்டு பாளையபட்டுகளில் இருந்து பெரும் படை புறப்பட்டது. என்றாலும் நாயக்க மன்னரது தனிப்படை பிரிவுகளை நடத்தியவர்கள் யார் தெரியுமா?

,,உச்சிமியாவும் உசர்ந்த பெருந்தளமும்
சவ்வாசு கானும் தன்மாவு அத்தனையும்
வாய்பூசு கான் தளமும் வாய்த்த புரவிகளும்
வாவுகான் தன்படையும் வாய்த்த பரிகளும்
சின்னராவுத்தர் சேர்ந்த புரவிகளும்
மூஸாகான் குதிரையுடன் முற்று புதலியாரும்
காதிரு சாயிபு சுன்னம் புரவிகளும்
சூரன் தாவூது ராவுத்தன் தன் புரவி அத்தனையும்
மீரா சாகிபும் வேந்தன் பெரும்படையும்
ஆதிரு சாயிபும் அடர்ந்து வரும் சேனைகளும்
மகமது சாகிபு மன்னன் புரவிகளும்
படேகான் கிலிசும் வாய்த்த புரவிகளும்
மகமது கான் கிலிசும் வாய்த்த புரவிகளும்.....''

என இராமப் பையன் அம்மானை, இனம் சுட்டிப் பாடுகிறது.

நாயக்க மன்னர்களின் ஆட்சியின் பொழுது பல போர்கள் நடைபெற்றன. மக்கள் அமைதியான சூழ்நிலையில் வாழ வாய்ப்பு மிகக் குறைவு. மன்னார் வளைகுடாவில் இருந்து தெற்கே தூத்துக்குடி வரையான கடற்பிரதேசத்தில் போர்த்துகேசியர் கி.பி. 1502 முதல் செல்வாக்கு எய்தினர். அவர்களிடம் சிறந்த கப்பல்படை இருந்தது. இதற்கும் மேலாக எதிரிகளை ஈவு இரக்கம் இல்லாமல் அழித்து ஒழிக்கும் "நல்ல" மனமும் அவர்களுக்கு இருந்தது. ஏற்கனவே இந்தப்பகுதியில் இருந்த இஸ்லாமியரது இறுக்கமான பிடிப்பிலிருந்த பரவர்கள், எளிதில் போர்த்துக்கேஸியரது கிறிஸ்துவ மதத்திற்கு மத மாற்றம் பெற்றதுடன் போர்ச்சுகல் நாட்டு மன்னரது பிரஜையாகவும் மாற்றம் பெற்றதுடன் போர்ச்சுகல் நாட்டு மன்னரது பிரஜையாகவும் மாற்றம் பெற்றனர். தூத்துக்குடி, புன்னைக்காயல், மணப்பாடு, வேம்பாறு, வைப்பாறு, வீரபாண்டியன்பட்டினம் ஆகிய ஊர்களும் அவர்களது செல்வாக்கில் இருந்தன. போர்ச்சுகல் நாட்டு அரசியல் முறையிலான ஆட்சிக் குழுக்கள் அங்கு நிர்வாகத்தை இயக்கி வந்தன.[2] பெயரளவில் அவை நாயக்கர்

2. Sathianathair - History of Madura Nayaks (1924) P.329-330.

களது சீமை என்பதற்கு அடையாளமாக போர்த்துகேஸியர் மதுரை நாயக்கருச்கு ஆண்டுதோறும் ஒரு சிறிய தொகையை மட்டும் அன்பளிப்பாக அளித்து வந்தனர். அவர்களுடைய வளமையான வாணிபத்துடன் மன்னார் வளைகுடா முத்து சிலாபத்திலும் அவர்களுக்கு பெரும் தொகை லாபமாக கிடைக்கும் பொழுது ஒரு சிறு தொகையை கப்பமாகச் செலுத்துவதில் அவர்களுக்கு எவ்வித சிரமும் இல்லாதிருந்தது.[3]

என்றாலும், அந்நிய ஆதிக்கம் மிகுந்த இத்தகைய சூழ்நிலை தெற்கு கடற்கரையில் உருப்பெறுவதை உணர்ந்தார் திருமலை மன்னர் (கி.பி, 1623–59) கடல் வலிமையிலும் வாணிபத்திலும் போர்த்துக்கீஸியருக்குத் தக்க போட்டியாளராக விளங்கிய காயல் நகர இஸ்லாமியர்களை அணுகினார். காயலை மீண்டும் சிறந்த துறைமுகமாக நிலைபெறச் செய்யுமாறு கேட்டுக் கெண்டதுடன் அதற்கு ஆவன அனைத்தையும் உதவினார். இதனால் மகிழ்ச்சியடைந்த இஸ்லாமியர், பெருத்த அளவில் அங்கு குடி புகுந்தனர். கடற்கரை முழுவதும் அவர்களது பல்வகையான கலங்கள் நிலை கொண்டன. பிள்ளை மரைக்காயர் என்ற தமிழக இஸ்லாமியக் குடிமகன் அரசாங்க பிரதிநிதியாக அந்தப் பகுதிக்கு திருமலை மன்னரால் நியமனம் பெற்றார். அவரது கௌரவ பணிக்கு திங்கள் தோறும், அறுமது சக்கரம் பணக்கொடை வழங்கவும் மன்னர் ஏற்பாடு செய்தார். யாழ்ப்பாணத்திலும், தூத்துக்குடியிலும், போர்த்துகீஸியரது குடியிருப்பிற்கு அண்மையில் தங்கி வாழவும் மன்னார் வளைகுடாவில் முத்து விளையும் பகுதிகளைக் கண்காணித்து வரவும் ஏற்பாடு செய்தார்,[4] நாயக்க மன்னரது அரசியல் சேவையில் இஸ்லாமியரது ஈடுபாட்டிற்கு இதைவிட வேறு சான்று என்ன வேண்டும்.

மேலும் மதுரைக் கோட்டையின் பிரதான காவல் பொறுப்பை ஏற்றுக் கொண்டிருந்தது ஷெய்கு ஹஸீன் என்ற கிலே தார், அவரது இயற்பெயர் ஷெய்கு முகம்மதுஷா ஆகும். பண

3. Ibid - P. 138.

4. Arunachalam S. - History of Pearl Fishery in Tamil coa (1952) P. 1

யில் இருந்து விலகி, ஞானமார்க்கத்தில் ஈடுபட்டு, கீழைக் கடற்கரையில் கோட்டைப்பட்டினத்தில் அடக்கம் பெற்றார். அந்த மகானைத்தான் இன்று மக்கள் மரியாதையுடன் "ராவுத்தர்சாகிப்" என அழைத்து வருகின்றனர்.

மன்னார்வளைகுடாவில் முத்துக்குளிக்கும் உரிமை நெடுங்காலமாக மதுரை நாயக்க மன்னருக்கும் இராமநாதபுரம் சேதுபதி மன்னருக்கும் இருந்து வந்தது. ஆனால், காயல்பட்டினம் பிள்ளைமரக்காயருக்கு தமது உரிமையினின்றும் பத்துகல்விட்டுக் கொடுத்தார். திருமலை மன்னர்.[6] மரக்காயரிடம் கொண்டிருந்த தனியான மதிப்பிற்கு இந்த நிகழ்ச்சிக்கு ஒரு எடுத்துக்காட்டாக இருக்கிறது. இன்னும் ஒரு சிறப்பான செய்கை, தமிழக இசுலாமிய வீரர்களை தமது நம்பிக்கைக்குரிய அந்தரங்க மெய்க்காப்பாளராக அவர் அமர்த்தி வைத்து இருந்தது.[7] மதுரைக் கோட்டையில் வாயில் பாதுகாப்பிற்கு, அவரது ஆட்சியில் இருந்த எழுபத்து இரண்டு பாளையக்காரர்களை நியமித்து இருந்தார். அவர்கள் பெரும்பாலும் "மணவாடுகள்" — நாயக்கர்களும் கம்பளத்தார்களும். ஆனால் அவரது மாளிகையில் காவலுக்கும் சொந்த உடமைகள், உயிருக்கும் பொறுப்பாக இருந்தவர்கள் இசுலாமியர்.[8] இசுலாமியரிடம் இமயமலைபோன்ற இணையற்ற நம்பிக்கை வைத்து இருந்தார் மதுரை மன்னர். அவரை அடுத்து நாயக்க மன்னராகப் பட்டமேறிய சொக்கநாத நாயக்கர், மதுரையிலிருந்து தமது தலைநகரை திருச்சிராப்பள்ளி கோட்டைக்கு மாற்றியவுடன், அந்தக் கோட்டையின் முழுப்பொறுப்பையும் ருஸ்தம்கான் என்ற இசுலாமியரிடம் தான் கொடுத்து இருந்தார்.[9]

மேலும் அறக்கொடைகளையும் இசுலாமிய நிறுவனங்களுக்கு நாயக்க மன்னர்கள் வழங்கியுள்ள விபரமும் தெரியவருகிறது. தளவாய் கம்பணன் என்ற நாயக்க ஆளுநர். கி.பி.1624ல் நெல்லை மாவட்ட பனங்குடியில் உள்ள புத்தாமியான் பள்ளிவாசலுக்கு பனங்குடி கிராமம் முழுவதையும் முற்றூட்டாக வழங்

6. Arunachalam S. — History of Pearl Fishery in Tamil coast (1952) p. 115
7. Vincent kronin — Pearl to India (1959) (New York) p. 122
8. அப்துற்றகீம் – எம்.ஆர்.எம் — தொண்டிமாநகர் (1959) பக்.12
9. Old Historical Manuscripts - vol II p. 35

கினான். கி.பி. 1712ல் விஜயரங்க சொக்கநாதர் திருநெல்வேலி யில் உள்ள பள்ளிவாசல் ஒன்றினுக்கு ஈழம்பூர், ரஹ்மத்பூர், லக்ஷிமிபூர், அணைக்கரை, அந்தராயம், நெல்லையம்பலம் ஆகிய ஆறு ஊரிகளை பள்ளிவாசல் தருமமாகக் கொடுத்தார். அந்த மன்னர், கி.பி. 1692ல் திருநெல்வேலியில் உள்ள இன்னொரு பள்ளிக்கும் கி.பி. 1633ல் கீழப்புலியூர் சையது பக்கீர்தீன் தர்கா விற்கும் நிலக்கொடைகள் வழங்கியுள்ளார்.[10] மதுரை மன்னர் சொக்கநாதரது மனைவி ராணி மங்கம்மாள் திருச்சியில் மோனத் துயில் கொள்ளும் நத்தர் (வலி) அவர்களிடம் மிகுந்த ஈடுபாடு கொண்டு அவரது தர்காவின் பராமரிப்பிற்காக சில நிலங்களை கி.பி. 1701ல் தானமாக வழங்கினார். இந்த அரசியார், பெனு கொண்டாவில் உள்ள பாபா தர்காவிற்கும் நிலக்கொடைகள் வழங்கி உள்ளார். இவரைப் போன்று ராணி மீனாட்சியும் பள்ளிவாசல்களுக்கு நிலக்கொடைகள் அளித்துள்ளார்.[11] மதுரை நாயக்க மன்னர்களைப் போன்று தஞ்சாவூர் நாயக்கர் களும் தமிழக இசுலாமியரை அன்புடனும் ஆதரவுடனும் நடத்தி வந்தனர் எனத் தெரிய வருகிறது.

இத்தகைய அரசியல் ஊக்குவிப்புகளினாலும் சலுகைகளி னாலும் பயனடைந்த இசுலாமிய சமூகத்தினருக்கும் இசுலாமி யரைப் போன்று வெளியே இருந்து வந்து தமிழ் மண்ணில் நிலைத்துவிட்ட நாயக்கர் சமூக மக்களுக்கும் இடையில் நல் லெண்ணமும் நட்புறவும் வளர்ந்தது. இரு சமூக மக்களும், ஒரே குடும்பத்தினரைப்போன்று அன்புடன் நடந்து கொண்டனர். குறிப்பாக, தென் மாவட்டங்களில், இன்று ஒரு முஸ்லீமும் நாயக்கரும் சந்தித்துக் கொண்டால் அவர்கள் ஒருவரையொரு வர் அன்னியோன்னியமாக அழைத்துக் கொள்வது "மாமா" என்ற அன்புச் சொல்லினால்தான். முன்னூறு ஆண்டு கால வரலாற்றில் எவ்வளவோ அரசியல் மாறுபாடுகள் ஏற்பட்டிருந் தாலும், தமிழகத்தின் சிறுபான்மையினரும் பிற்பட்ட நிலையில் உள்ளவர்களுமான இந்த இரு சமூக மக்களது நேயமனப் பான்மையிலும் நட்பு நிலையிலும் எவ்வித வேறுபாடும் ஏற் படவில்லை.

---

10. Board's Miscellnious Register (Tamilnadu Archieves) vol. II
11. Sathianathair - History of Mydura Nayalcs (1924) (p.p. 362 - 69).

# 14

## சேதுபதிகள் ஆட்சியில்

மதுரை நாயக்க மன்னர்களுக்கு சம காலத்தவராக இராமநாதபுரம் சீமையில் தன்னரசு ஆட்சி செய்தவர்கள் சேதுபதிகள் என்ற மறவர் குடிப் பெருந்தலைவர்கள். முன்னூறு கிலோ மீட்டருக்கும் கூடுதலான கீழைக் கடற்கரைக்கு சொந்தக்காரரான அவர்களது நாடு, வரலாற்றுப் பெருமையுடையது. ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பு இருந்தே இந்தக்கடற்கரை யவனர்களுக்கும் யூதர்களுக்கும் அறிமுகமாகி இருந்தது என்பதை அண்மையில் அழகன்குளம் அகழ்வில் கிடைத்த ரோமப்பேரரசரது நாணயங்களும் வண்ணக்கல்மணிகளும்.[1] பெரியபட்டினம் அகழ்வில் கிடைத்த யூதர்களது உறிப்ரு மொழிக் கல்வெட்டும்[2] உறுதிப்படுத்துகின்றன. இன்னும் உலகப் பயணிகளான தாலமியும், பிளினியும்குறிப்பிடுகின்ற சிறந்தகடற்பட்டினங்களான மோரெல்லா, அற்றகாரு ஆகிய ஊர்களும் இந்தக் கடல்பகுதியில் இருந்து கடல் கோளினால் அழிந்து மறைந்துவிட்டன.

சேதுநாட்டின் கடற்கரைப்பகுதிகளில் பன்னிரண்டு பதின் மூன்றாவது நூற்றாண்டுகளில் அராபிய வணிகர்களது அஞ்சு வண்ணங்கள் அமைந்து, அந்தப்பகுதியின் வணிகப் பொருளான முத்தையும், கைத்தறித் துணிகளையும் கீழை மேலைநாடுகளுக்கு ஏற்றுமதி செய்ய உதவின. அத்துடன் அந்தப் பகுதியில் சமயப் பணிகளில் ஈடுபட்ட சான்றோர்களுக்கும் பேராதரவாக இருந்து வந்தன. தங்களது நாட்டில் குடியமர்ந்த அஞ்சு வண்ணத்தாரி

---

1. Nagasamy, Dr. R. "The Hindu" - 26.10.1986
2. ARE - 35 (B)/1942-43

டம் பரிவும் பாசமும் கொண்டிருந்தனர் என்பதை சேதுபதி மன்னர்களது பட்டயங்கள் சான்று பகருகின்றன. தமிழ்ப் பணிகளுக்கும் தெய்வீக கைங்கர்யங்களுக்கும் தம்மை, அர்ப்பனித்துக் கொண்டு இருந்த திருமலை ரகுநாத சேதுபதி (கி.பி.1636-1674) குணங்குடியில் அடக்கப்பெற்றுள்ள புனிதசையதுமுகம்மது புகாரி என்ற இறைநேசரது தர்கா பராமரிப்பிற்காக, நிலக்கொடைகள் அளித்தார்.[3] இந்த மன்னரை அடுத்து அரியணை ஏறிய ரகுநாத கிழவன் சேதுபதி (கி.பி.1674-1710) மீண்டும் சில நிலக் கொடைகளை அந்த தர்காவிற்கு வழங்கியதுடன் திருச்சுழியல், காரேந்தல், கொக்குளம், நாடாகுளம் பள்ளிவாசல்களுக்கும் நிலக்கொடை வழங்கிய, விவரம் இராமநாதபுரம் சமஸ்தானம் ஆவணம் ஒன்றில் காணப்படுகிறது. மற்றும் சேதுபதி மன்னர்கள், திருச்சுழியில், காரேந்தல், கொக்குளம், நாடாகுளம், பொந்தாம்புளி, கொக்காடி, கன்னிராஜபுரம், நாரணமங்கலம், ஆகிய ஊர்களில் உள்ள பள்ளிவாசல்களுக்கும், இராமேசுவரம், இராமநாதபுரம், எறுபதி தொண்டி ஆகிய ஊர்களில் உள்ள தர்காக்களுக்கும் வழங்கியுள்ள அறக்கொடைகள், அந்த மன்னர்களது சமரச மனப்பான்மைக்கு சாட்சியமாக, இன்றளவும் இருந்து வருகிறது.[4]

இராமநாதபுரத்தை முதன் முதலில் கோநகராகக் கொண்டு ஆட்சி செலுத்திய ரகுநாத கிழவன் சேதுபதி, கொடையால் தமிழ் வளர்த்த கோமான் வள்ளல் சீதக்காதி மரக்காயரை, ஆள்வினையுடைய அமைச்சராக தமது அவையில் அமரச் செய்து இருந்தார். இராமநாதபுரம் கோட்டைக்குள், மன்னரது மாளிகைக்கு அருகில் அழகிய மாளிகையொன்றையும் மரக்காயருக்கு அளித்து இருந்தார் என்ற விபரம் சீதக்காதி நொண்டி நாடகத்தில் காணப்படுகிறது. "யாதினினும் இனிய நண்ப! எம்முடன்

3. இராமநாதபுரம் சமஸ்தானம் நிலமாண்யமணக்கு.
4. இராமநாதபுரம் சமஸ்தானம் நிலமான்ய கணக்கு மற்றும் இராமேசுவரம் ஆபில்காபில் தர்கா செப்பேடு, ஏறுபதி செய்யது இபுறாஹிம் (வலி) தர்கா, செப்பேடு இராமநாதபுரம் ஈசாசாயபு தர்கா செப்பேடு.
5. சீதக்காதி நொண்டி நாடகம் - முகம்மது உசேன் நயினார் (பதிப்பு (1952) பாடல் எண்-171

யாண்டும் இருத்தி'' என வள்ளலை மன்னர் தம்முடன் வைத்துக் கொண்டதுடன், தமது இளவல்களில் அன்பால் சிறந்தவர் என்ற பொருளில் ''விசைய ரகுநாத பெரியதம்பி'' என்ற விருதும் வழங்கிச் சிறப்பித்தார். மாறவர்மன் குலசேகர பாண்டியனது அமைச்சராக இருந்த சுல்தான் தக்கியுத்தீனுக்குக் கூட கிடைக்காத பேறு. கோட்டை கொத்தளம், அரண், அமைப்புகளில் இசுலாமியர் சிறந்து இருந்தவர்கள். ஆதலால், சேதுபதி மன்னரும் அது வரை, மண்ணாலாகிய கோட்டை மதிலுடன் விளங்கிய தமது இராமநாதபுரம் கோட்டையை அகற்றிவிட்டு, வள்ளல் அவர்களது ஆலோசனையைக் கொண்டும் பொருள் வளத்தைக் கொண்டும் முப்பத்து இரண்டு கொத்தளங்களுடன் இருபத்து ஒரு அடி உயரமும் ஐந்து அடி அகலமும் கொண்ட செவ்வக வடிவிலான கற்கோட்டையையும் முகலாய மன்னர்களது பாணியில் அரண்மனையையும் அமைத்தார்.[6] இராமநாதபுரம் அரண்மனை அமைப்பிலும், அரண்மனை நிர்வாகத்திலும் சேதுபதி மன்னரது அரசியல் நடைமுறையிலும் வள்ளல் சீதக்காதிக்கு பெரும்பங்கு இருந்தது. அத்துடன் மறவர் சமையின் கடற்கரைப் பகுதி வணிகத்தை கண்காணிப்பதற்கும், கடற்கரைப்பகுதியில் மன்னரது இறையை வசூலிப்பதற்கும் அவருக்கு அதிகாரம் வழங்கப்பட்டு இருந்தது. இதனால் டச்சு ஆவணங்களில் சீதக்காதி மரக்காயர் ''ரிஜண்ட் பெரியதம்பி'' என்று குறிக்கப்பட்டுள்ளார்.[9]

இந்த ''விஜய ரகுநாத'' என்ற சேதுபதிகளது விருது, முதன்முறையாக இசுலாமியரில் வள்ளல் சீதக்காதி மரைக்காயருக்கு வழங்கப்பட்டு இருந்த பொழுதிலும், பிற்காலத்திலும் கீழக்கரையைச் சார்ந்த ஒரு குறிப்பிட்ட மரைக்காயர் குடும்பத்தினருக்கு மட்டும் தொடர்ந்து வழங்கப்பட்டு அவர்கள் அதனை ஆவணங்களில் பயன்படுத்தி வந்துள்ளனர்.[7] இதனைப் போல அபிராமத்தை (கமுதி வட்டம்) சேர்ந்த சிறந்த இஸ்லாமிய பெரு

6. Rajaram Rao. T. Manual of Ramnad Samasthanam (1898( p. 232.
7. அமீர்அலி. என்.ஏ.–வள்ளல் சீதக்காதி வாழ்வும் காலமும். (1982) பக் : 194

மகன் ஒருவருக்கு அவரது சிறப்பான வீரச்செயலுக்காக, வெற்றியாளன் என்ற பொருளில் சேதுபதி மன்னரால் ''விஜயன்'' என்ற விருதும் வழங்கப்பட்டுள்ளது. அந்தக் குடும்பத்தின் இன்றைய தலைமுறையினரும் கூட தங்களது பெயருக்கு முன்னால் விஜயன் என்ற அந்த விருதுச் சொல்லைப் பயன்படுத்தி வருகின்றனர். இவர்களைப் போன்று போகலூர் கிராமத்தைச்சேர்ந்த கனி ராவுத்தர் என்பவர் சேதுபதி மன்னரால் ''சேர்வை'' என்ற சிறப்புப்பட்டம் அளிக்கப்பட்டு சிறப்பிக்கப்பட்டதுடன், இன்றைய கன்னிராஜபுரம் (முதுகுளத்தூர் வட்டம்) என்ற கிராமமும் அவருக்கு செல்லத்தேவர் சேதுபதி என்பவரால் தானமாக வழங்கப்பட்டது.[8] அந்த கனி சேர்வையின் வழியினர் இன்றும் அந்த ''சேர்வை'' என்ற சிறப்பு விருதியைத் தங்களது இசுலாமியப் பெயருடன் இணைத்து பயன்படுத்தி வருகின்றனர்.

சேது நாட்டுக்குடிகளில் இசுலாமியர் சிறுபான்மையரில் பெரும்பான்மையராக இருந்து வந்தனர். இப்பொழுதும் இருந்து வருகின்றனர். பெரும்பாலும், வியாபாரத்திலும் நெசவிலும், சிறிய அளவினர் கடல் தொழில். விவசாயம், இரும்பு, செம்பு, வார்ப்பு தொழிலிலும் ஈடுபட்டு இருந்தனர். ஆனால் கீழ் நிலையில் இருந்த சாதாரண இசுலாமியர், நெவுத் தொழிலில் ஈடுபட்டு இருந்ததைப் பல ஆவணங்கள் தெரிவிக்கின்றன. இராமநாதபுரம், கீழக்கரை, எக்ககுடி, பனைக்குளம், கமுதி, கடலாடி, அபிராமம், முதுகுளத்தூர், பரமக்குடி, கோட்டைப் பட்டினம் கீழக்கரை, இராமநாதபுரம் வெளிப்பட்டினம் ஆகிய ஊர்களில் இசுலாமியர் நெசவுத் தொழிலிலும், சாயங் காய்ச்சு தலையும் மேற்கொண்டு இருந்ததாக இராமநாதபுரம் சமஸ்தான மானுவல் தெரிவிக்கின்றது.[10] அந்தப்பகுதிகள் இன்றும் ''பாவோடிகள்'' எனப் பல ஊர்களில் குறிப்பிடப்பிடுகின்றன. இராமநாதபுரம் சீமையின் கைத்தறி உற்பத்தியை நேரில் பார்வையிட்டு, கும்பெனித் தலைமைக்கு, கும்பெனியாரது நாகூர்

---

8. Madurai District Reconds - vol 4669. p. 90, 91.

9. Sanjay Subramanian - Citakhati PRINCE of Poets and poht) (Delhi) page. 16.

10. Rajaram Rao-T. Manual of Ramnad Samasthanam (1828)P. P. 160. 170. 175

வணிகப் பிரதிநிதியான மைக்கேல் என்பவர் கி.பி. 1794ல் அனுப்பிய ரகசிய அறிக்கையில் முஸ்லீம் மக்கள் பெரும்பான்மையாக உள்ள கீழ்க்கண்ட ஊர்களின் கைத்தறி மையங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன.[11]

| | | | |
|---|---|---|---|
| 1. | சித்தார்கோட்டை | கிராமம் | 30 தறிகள் |
| 2. | பன்னைக்குளம் | ,, | 20 தறிகள் |
| 3. | எக்ககுடி | ,, | 50 தறிகள் |
| 4. | போகலூர் | ,, | 50 தறிகள் |
| 5. | ஆனையூர் பேரையூர் | ,, | 50 தறிகள் |
| 6. | கமுதி | ,, | 100 தறிகள் |
| 7. | திருப்பாலைக்குடி | ,, | 20 தறிகள் |
| 8. | நம்புதாழை | ,, | 20 தறிகள் |
| 9. | நயினார்கோயில் | ,, | 20 தறிகள் |
| 10. | நகரம் | ,, | 20 தறிகள் |
| 11. | பரமக்குடி | ,, | 60 தறிகள் |
| 12. | எமனேஸ்வரம் | ,, | 30 தறிகள் |
| 13, | இளையான்குடி | ,, | 150 தறிகள் |
| | | மொத்தம் | 980 தறிகள் |

இவையனைத்தும் இசுலாமியரது தறிகள் கும்பெனியாரது இன்னொரு ஆவணத்தின்படி, பரமக்குடியில் மட்டும் கி.பி.1790ல் அறுநூறு தறிகள் இருந்ததாகவும் அதில் அறுபது சோனகருடையவை என குறிப்பிடப்பட்டிருப்பதுடன், இந்த தறிகளில் உற்பத்தி செய்யப்படும் துணிவகைகளை டச்சுக்காரர்கள் விரும்பி வாங்கி ஏற்றுமதி செய்து வந்தனர் எனவும் தெரியவருகிறது[12] இந்த துணிவகைளில் ''முறி'' என்ற வகை இருந்ததும் தெரிய வருகிறது. இசுலாமியரைக் குறிக்க உதவும் ''மூர்'' என்ற சொல்லின் ஆதாரமாகக் கொண்டது இந்த துணியின் பெயராகும். இந்த இசுலாமிய நெசவாளிகள் பற்றிய இராமநாதபுரம் மன்னரது கி.பி. 1742ம் வருடத்திய செப்புப் பட்டயத் தொடரில் உள்ள ''நமது காவல் குடியினரான துலுக்கரது ''தறிக்கடமை'' நீக்கி'' என்ற சொற்கள் இஸ்லாமியர்பால் சேதுபதிகள் கொண்டிருந்த

11. Tamilnadu Archives-Public Consultations VoJ. 184. A. 12. 2. 1793–PP. 862-65

12. Tamilnadu Public Consultations

வாஞ்சையை "நமது" என்ற சொல் மிகவும் அழுத்தமாக வலியுறுத்துகிறது.[13]

மேலும் கி.பி. 1759ல் நிகழ்ந்த நிகழ்ச்சியொன்று இந்த நெருக்கத்தை காலமெல்லாம் நினைவூட்டுவதாக உள்ளது. சேது மன்னர்களது அனுமதியுடன் பாம்பனிலும், கீழக்கரையிலும் தங்களது பண்டக சாலைகளை டச்சுக்காரர்கள் அமைத்து, மன்னார் வளைகுடாவில் வணிகத்தை வளர்த்து வந்த நேரம். இலாபத்தைக் கண்டு மகிழ்ந்த அவர்கள் தங்கள் பண்டக சாலைகளைச் சுற்றி முதலில் முள்வேலிகளை அரண்களாக அமைத்தனர். அடுத்து, சிறு கற்கோட்டைகளைப் போன்று பாதுகாப்பு நிலைகளுடன் அதனைப் பலப்படுத்தினர். நிலத்தில் நிகழ்த்திய இத்தகைய ஆக்கிரமிப்புடன், அமையாமல் நீரிலும், அவர்கள் தங்களது கைவரிசையை காட்டினர். கி.பி. 1750ல் மன்னாரிலிருந்து இராமேஸ்வரத்திற்கு கொட்டைப்பாக்கு, அரிசி, நெல், நல்ல எண்ணை ஆகியவற்றை ஏற்றிவந்த பாய்மரக் கப்பலை டச்சுக்காரர் தங்களது அனுமதி பெறாமல் பயணத்தை மேற்கொண்டதாக காரணம் காட்டி கைப்பற்றினர். அதனுடைய சொந்தக்காரர், தாம் சேது நாட்டைச் சேர்ந்த கோட்டைப் பட்டினவாசி என்றும், சேது மன்னரது அனுமதியுடன் செல்வதாக விளக்கம் சொல்லியும் அதனை டச்சுக்காரர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை.

அடுத்து, மன்னாரில் இருந்து கீழக்கரைக்கு வந்து கொண்டிருந்த டச்சுக்காரரது தோணியை சேதுபதியின் ஆட்கள் தடுத்து கைப்பற்றினர். இரு தரப்பிலும் ஏற்பட்ட இத்தகைய ஆத்திரம் மூட்டும் நிகழ்ச்சிகளினால் பிரச்சினை உணர்ச்சி வயமானதாகி விட்டது. தூத்துக்குடியிலிருந்து டச்சுக்காரரது படையணி கீழக்கரைக்கு வந்தது. சேதுமன்னரது படையணியொன்றும் கீழக்கரையில் உள்ள டச்சுக்காரரது பண்டகசாலையைச் சூழ்ந்து, பிரங்கியினால் அதனைத் தகர்த்து எரியும் முயற்சியை மேற்கொண்டது. சமாதானம் பேசவந்த டச்சுத் தரப்பினரும் இராமநாதபுரம் சிறையில் அடைக்கப்பட்டனர். பேச்சு வார்த்தை

---

13. சேதுபதி மன்னர் செப்புபட்டயம் எண். 28 (இராமேசுவரம் திருக்கோயில் கும்பாபிஷேக மலர் — 1965)

குள் முறிந்து பெரும் மோதல் ஏற்படும் நிலையில் சேதுமன்னரது நெருங்கிய நண்பரான கீழக்கரை வணிகர் தம்பி மரைக்காயர் என்பவரது தலையீடும் தளராத முயற்சியும் மன்னருக்கும் மாற்று நாட்டாரான டச்சுக் காரருக்கும் இடையில் பெரும் போர் ஏற்படாமல் தடுத்ததுடன், மீண்டும் அவர்கள் சமூகமான சூழ்நிலையில் வேந்தர்–வணிகர் என்ற உறவுகளை நீடிப்பதற்கு உதவின.[14]

சைவநெறியில் திளைத்து வாழ்ந்த, சிறந்த சிவனடியார்களான சேதுபதி மன்னர்கள், இசுலாத்தை வேற்று நாட்டு சமயம் என விகற்பமாக எண்ணாமல், சமயப்பொறையுடன் நடந்து வந்தனர். அதனால் அவர்களது சீமையில் இசுலாம் தழைத்தது. ஆனால், அதே காலகட்டத்தில், மறவர் சீமையில் நிலை கொள்ள முயன்ற இன்னொரு வேற்றுச்சமயமான கிறித்தவ மதத்தை வேரோடு பறித்து வீழ்த்த சேதுபதிகள் கொண்ட சீற்றம் – குறிப்பாக அந்தோணி கிரிமினாலினி என்ற இத்தாலிய பாதிரியாரது வேதாளை என்ற படுகொலை – கி.பி. 1549 ஜான் டி. பிரிட்டோ சாமியார் ஒரியூரில் சிரச்சேதம் கி.பி, 1692ல் ஆகிய கறும் புள்ளிகளை வரலாற்றில் பார்க்கும்பொழுது, இசுலாமியரிடம் அந்த மன்னர்கள் காட்டிய சகோதர வாஞ்சை, அன்பு பரிவு, பாசம் ஆகியவை நமமை பிரமிக்கச் செய்கின்றன. இங்ஙனம், நாட்டின் வளஞ்சேர்க்கும் நல்லியல்பு வணிகர்களாகவும் அரசியல் சாமந்தர்களாகவும் இசுலாமியர், தொடர்ந்து விளங்கினர் என்பது இந்த நிகழ்ச்சிகளால் பெறப்படுகிறது.

---

14. Seshadri Drr S. - Sethupthis of Ramnad (un Published Thesis) pages.96-97.

# 15

## பரங்கியரும் முஸ்லீம்களும்

நமது நாட்டுடன் வாணிபத்தில் தொடர்பு கொண்ட இசுலாமிய அரபிகள், மேற்கு, கிழக்கு கரைகளில் உள்ள கடற் துறைகளில் தங்கி தங்களது வாணிபத்தை வளர்த்ததுடன் இந்த மண்ணின் மலர்ச்சிக்கும் உதவியதை முந்தைய பகுதிகளில் பார்த்தோம். ஆனால் பதினாறாவது நூற்றாண்டின் துவக் கத்தில் இந்தப்புனித மண்ணில் பரங்கிகளது கால்கள் பட்ட வுடன் இங்கிருந்த இசுலாமியர்களது சமய வாழ்க்கையிலும் சமுதாய அமைப்பிலும் விரும்பத்தகாத மாற்றங்களும் விளைவு களும் நிகழ்ந்தன. அந்தப் பரங்கிகள் யார்? அவர்கள் இழைத்த இன்னல்கள் யாவை? பன்னிரண்டாம் நூற்றாண்டில் அரபுத் தாயகத்தில் நடைபெற்ற சிலுவைப்போரில் கலந்து கொண்ட ஐரோப்பியர் அனைவரையும் முஸ்லீம்கள் "பரங்கி" என அழைத்தனர். "பலாங்" என்ற சொல் "பரங்" ஆகி பின்னர் "பரங்கி" ஆயிற்று. பாரசீக மொழியில் "பெரங்கி" என்றா கியது. முகலாயப் பேரரசர் பாபர், முதன் முதலில் போர்ச்சு கீசிய மக்களை "பரங்கி" என அழைத்தார்.1 ஏனெனில் முதன் முறையாக வணிகத்திற்கு நமது நாட்டிற்கு வந்த மேனாட்டார் போர்ச்சுகல் நாட்டவர். ஆதலால் அவர்கள் பரங்கி எனக் குறிப்பிடப்பட்டனர். பின்னர் அவர்களையடுத்து இங்கு வந்த பிரஞ்சு, ஆங்கில நாட்டவரும் அதே இடு குறிப்பெயரில் வழங் கப்பட்டனர்.

---

1. P. E. Peris and R.B.Naish — Ceylon and Portughese. (1986) P.26

அரபுத் தாயகத்தின் தென்கோடியில் மலர்ந்த இசுலாம். வடக்கில் பாலத்தீனம், ஸிரியா, பைஜான்டைன், ஆகிய நாடுகளில் விரைவாகப் பரவியதுடன் மத்திய தரைக்கடலின் மேற்குப் பகுதியான ஸ்பெயினிலும் பரவியது. அப்பொழுது ஸ்பெயின் நாடு, ''அல் அந்தலுஸ்'', ''அந்தலூஷியா'' என அரபு மொழியில் வழங்கப்பட்டது. சிலுவைப்போர்கள், கிறித்தவ குருமார்களது இடைவிடாத பொய்ப்பிரச்சாரம், இசுலாமிய தலைமை பீடத்தில் நிலவிய ஊழல்கள், ஒழுக்கக்கேடுகள் ஆகியவை காரணமாக, அட்லாண்டிக் மாகடலையொட்டிய ஸ்பெயின் நாட்டின் சிறு பகுதி மீண்டும் கிறித்தவ சமயப்பிடிக்குள் சென்றது. இசுலாமியருக்கு எதிராக கலவரத்தை முன் நின்று நடத்திய ஜான் என்பவன் புதிய போர்ச்சுகல் நாட்டை அமைத்து அந்த நாட்டின் அதிபரானான். அவனுடைய மகன் ஹென்றி, புதிய நாட்டை வலுவும் சிறப்பு மிக்கதாக ஆக்க வேண்டும் என்ற ஆசையினால் அல்லும் பகலும் சிந்தித்து வந்தான். அவன் கண்ட முடிவு அன்றைய ஐரோப்பிய சமுதாயத்தில் புகழும் பொலிவும் பெற்றுத் திகழ்ந்த இசுலாமியரது வாணிபச் செல்வாக்கை அழிக்க பாடுபட வேண்டும் என்பது.

அன்றைய நிலையில், இந்துமாக்கடல், பாரசீகவளைகுடா கடல், செங்கடல், மத்யதரைக்கடல் ஆகிய அனைத்து நீர்வழிகளும் இசுலாமியரது வாணிப வளர்ச்சிக்கு உதவும் ஏகபோக பகுதிகளாக இருந்தன.[2] கீழை நாட்டுப் பொருட்களுடன் அவர்களது பொருட்களையும், கப்பல், ஒட்டகம், மூலமாக வெனிஸ் நகரத்தில் நிறைத்தனர். அங்கிருந்து அவை ஐரோப்பிய கண்டம் முழுவதும் வினியோகிக்கப்பட்டன. இசுலாமியர் இதனால் பெருத்த ஆதாயம் அடைந்து வந்தனர். ஆதலால், அவர்களது வாணிபச் செல்வாக்கை அழிப்பதற்கு அவர்கள் பயன்படுத்திய நீர்வழிக்கு மாற்று வழியொன்றைக் கண்டுபிடிக்க ஹென்றி முயற்சித்தான். காகரி என்ற இடத்தில் இதற்கான ஆய்வுக்கூடம் ஒன்றையும் அமைத்தான். அவனது உழைப்பு, ஊக்குவிப்பு காரணமாக போர்ச்சுகல் நாட்டு மாலுமிகள், அலைகடலுக்கு அப்பால் போர்டோ, காண்டோ தீவுகள் (கி.பி. 1419) மதீரியா (கி.பி. 1420) கானரி, அஜோர்தீவுகள் (கி.பி. 1431) பிரான்கோ

---

2. Fr. Pereira - History of Ceylon - page. II

முனை, ஸெனகல் ஆறு, கினியா (கி பி. 1445) வெர்டோ முனை (கி.பி. 1446) ஆகிய புதிய நீர், நிலப்பகுதிகளைக் கண்டுபிடித்தனர்.[3] இத்தகைய ஊக்குவிப்புகளின் தொடராக, வாஸ் கோடா காமா என்ற மாலுமி கி.பி. 1497ல் ஆப்பிரிக்க பெருங் கண்டத்தின் மேற்கு, தெற்குப்பகுதிகளைக் கடந்து இந்து மகா கடல் வழியாக கி.பி. 1498ல் நமது நாடடின் மேற்கு கரைப் பட்டினமான கோழிக்கோட்டை வந்தடைந்தார். போர்ச்சுகல் நாட்டு மன்னரது பரிந்துரை மடலுடன்.

கோழிக்கோடு மன்னர் ஸாமரின், போர்ச்சுகல் மாலுமி குழுவினருக்கு வரவேற்பு வழங்கி ஆதரவு அளித்தார். என்றாலும் அந்த மன்னரது நண்பர்களாக, அலுவலர்களாக, குடிகளா, ஏற்கனவே அங்கு இருந்து வந்த இசுலாமியரது செல்வாக்கும், செல்வ வளமும் பரங்கிகளது கண்களை உறுத்தின. வாஸ்கோடா காமாவைத் தொடர்ந்து போர்ச்சுகல் நாட்டில் இருந்து கொங்கணக்கரை கேரளக்கரைக்கு வந்த வாணிப கப்பல்களில் விற்பனைப் பொருட்களுடன் பீரங்கிகளும் இருந்தன. ஆங்காங்கு இசுலாமியரது வாணிபக் கப்பல்களை கொள்ளையடிப்பதற்கு அவை உதவின. அத்துடன் ஸாமரின் மன்னரை அடக்கி, அஞ்சுமாறு செய்யவும் அவை பயன் பட்டன.[4] நான்கு ஆண்டுகள் கழித்து அவர்கள் கிழக்கு கரையையும் எட்டிப்பார்த்தனர். கி.பி. 1502ல் அவர்கள் தூத்துக்குடிக்கு வந்தனர். அங்கு அவர்கள் கண்ட காட்சி அவர்களை பிரமிக்க வைத்தது. தமிழகத்திலும் இசுலாமியர், தூத்துக்குடி துறைமுகத்தை மட்டுமின்றி மன்னார் வளைகுடா பகுதி முழுவதையும் அவர்களது கட்டுபாட்டில் வைத்து இருந்தனர். அப்பொழுது காயலில் இருந்த இசுலாமிய அரசர் முத்துக்களாலான மாலையை அணிந்து காணப்பட்டதாக ஒரு குறிப்பு தெரிவிக்கிறது. மீன்பிடித்தல், முத்துக்குளித்தல் ஆகிய பாரம் பரிய தொழில்களில் ஈடுபட்டு இருந்த பரவர்கள், இசுலாமியரது இறுக்கமான பிடியில் இருந்து வந்தனர். அன்றைய நிலையில் முத்துகுளித்தல் பெரிதும் ஆதாயம் அளிக்கும் தொழிலாக இருந்தது. ஆனால், பரவர்களது ஒத்துழைப்பு இல்லாமல் அந்த

---

4. Arunachalam - History of Pearl fisheries of Tamil Coast. (1952) p.p. 17.18

தொழிலில் ஈடுபட முடியாத நிலையை உணாநத பரங்கிகள் பொறுமையாக சூழ்நிலைகளை கவனித்து வந்தனர். முத்துக்கள் வணிகத்தைப் பற்றிய அவர்களது பொறாமையும் பேராசையும் வளர்த்தன.

மன்னார் வளைகுடாவில் கிடைத்த முததுககளைப் பற்றிய குறிப்புகள் சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன.* பாண்டிய நாடு முழுவதையும் வெற்றி கொண்ட ராஜராஜ சோழனது (கி.பி. 985–1012) கல்வெட்டுக்களிலும் இந்த முத்துக் களைப்பற்றிய விவரங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. வட்டம், அனுவட்டம், ஒப்புமுத்து, குறுமுத்து, கோத்தமுத்து, நிம்பளம், பயிட்டம், அம்பு, முதுங்கறடு, இரட்டை, சப்பத்தி, சிவந்தநீர், குளிந்தநீர் என்பன அவை.[5] ஆனால் இவைகளைப் பற்றி முதல் முறையாக எழுதிய வெளிநாட்டார் அல்இத்ரிசி (கி.பி. 1154) என்ற அரபு நாட்டார். கி.பி. 1292ல் பாண்டிநாடு வந்த உலகப் பயணி மார்க்கோபோலோ, மன்னார் வளைகுடாவில் பத்த லாரில் – (கப்பலாறு – பெரியபட்டணம்) ஏப்ரல், மே மாதங்களில் நடைபெறும் முத்துச்சிலாபம் என்ற முத்துக்குளித்தலை நேரில் பார்வையிட்டு, அவரது குறிப்புகளில் விவரம் தந்துள்ளார்.[6] அவரைத் தொடர்ந்து தமிழகம் வந்த பிரையர் ஜோர்தனஸ் என்ற பிரஞ்சு நாட்டு பாதிரியாரும் வாங்-தா–யூவன் என்ற சீனப் பயணியும் முத்துச் சிலாபம் பற்றிய குறிப்புகளை வரைந் துள்ளனர்.[7]

முத்துக்குளித்தலில் மதுரைநாயக்க மன்னர் 96½ கல்லும் இராமநாதபுரம் சேதுபதி மன்னர் 59 கல்லும் போட்டு முத்துக் குளிக்கும் உரிமை பெற்று இருந்தனர். திருமலைமன்னர் அவருக் குரிய கல்லில் பத்துக்கல் போட்டு முத்துக் குளிக்கும் உரிமையை, அவரது பிரதிநிதியான காயல்பட்டினம் நாட்டாண்மை "**முதலி யார் பிள்ளை மரைக்காயருக்கு**", அளித்து இருந்தார்.[8] திரு மலை மன்னரிடம் காயல்பட்டினத்து மரைக்காயருக்கு, அந்த

---

5. நாகசாமி Dr. ஆர் – தஞ்சை பெருவுடையார் கோயில் கல் வெட்டுகள் (1969) பக். 13, 44.
6. Arunachalam-History of Pearl fisheries 1952 p. 63.
7. I bid p.p. 78:80
8. I bid

அளவிற்கு பெரும் செல்வாக்கு இருந்தது. இந்த உரிமையை போர்ச்சுக்கியரும் பின்னர் டச்சுக்காரரும் மதித்தனர் என்றால் மரைக்காயரது அறிவாற்றலையும் ஆள்விளை உடமையையும், என்னவென்பது? மதுரை மன்னரைப் போன்று சேதுபதி மன்னர்களும் தங்களுக்குரிய முத்துக்குளித்தல் உரிமையில் இராமேசுவரம் இராமநாதசுவாமி கோயிலுக்கும், திருப்புல்லணை ஜகநாதப் பெருமாள் கோயிலுக்கும் சலுகைகள் வழங்கி இருந்தனர்[9]. இந்த சலுகைகளின்படி அந்தக் கோயில்களுக்காக முறையே இராமேசுவரத்திலும் கீழக்கரையிலும் இருந்த மரைக்காயர் குடும்பங்கள், முத்துச்சலாபம் நடத்தினர். கி.பி. 1823ல் ஆங்கில கிழக்கிந்திய துரைத்தனம் இந்தச் சலுகைகளைப் பறிமுதல் செய்தது.

இராமேசுவரம் திருக்கோயிலுக்காக முத்துக்குளித்தவர்கள் இராமேசுவரம் சுல்தான் மரைக்காயர் குடும்பத்னர். அண்மைக் காலம் வரை, அந்தக்கோயிலின் தெப்பத்திருவிழாவிற்கு படகுகள் கொடுக்கும் "ஊழியம்" அவர்வழியினருக்கு இருந்தது. அந்தக் குடும்பத்தினரின் கண்ணியத்தையும் வாணிபச் செல்வாக்கையும் கருதிய திருக்கோயில் நிர்வாகத்தினர். கோயில் கருவறையின் திறவுகோல்களை அந்தக் குடும்பத்தினரது பொறுப்பில் கொடுத்து வைத்து இருந்தனர்.[11] இந்த நூற்றாண்டுத் தொடக்கத்தில் கோயிலுக்கு அரசினர் தர்மகர்த்தாக்கள் நியமனம் செய்த பிறகுதான் இந்த முறையில் மாற்றம் ஏற்பட்டது. முத்துச்சலாபம் காரணமாக தோன்றிய இந்த மரபுகளை இங்கே குறிப்பிடுவது பொருத்தம் தானே!

தமிழக இசுலாமியர், முத்துக்குளித்தலில் மட்டுமல்லாது அவைகளை முறையாக விற்பனை செய்யும் வணிகத்திலும் ஈடுபட்டு இருந்தனர். அவர்களது வணிக நிலையங்கள் பாண்டி நாட்டுத் தலைநகரான மதுரையிலும், இராமேசுவரத்திலும் முத்துச்சாவடி அல்லது "முத்துப்பேட்டை" என வழங்கப்பட்டன. இராமேசுவரத்தில் இருந்த முத்துச்சாவடியில் விற்பனை செய்யப்பட்ட அழகிய முத்துக்கள், கேரளக்கரையில் உள்ள கொல்லத்

---

9. சேதுபதி மன்னர் செப்பேடுகள்.
10. Madurai District Records vol 4676/20-6-1828 p. 155
11. சொக்கு சுப்பிரமணியம் - சிந்துபாடும் சேதுநாடு – திருச்சிராப்பள்ளி. (வானொலி வடிவம்) 1985

திற்கு கொண்டு செல்லப்பட்டு, கடல்வழி வெளிநாடுகளுக்கு அனுப்பப்பட்டதாக சீனப்பயணியின் குறிப்புகள் தெரிவிக்கின்றன.[12] கீழக்கரையில் இருந்த இத்தகைய முத்துப்பேட்டை ஒன்றில் விற்பனை செய்யப்பட்ட முத்துக்களின் விற்பனையில் நூற்றுக்கு அரைப்பணம் மகமையாக அந்த ஊர் பிள்ளையார் கோயில் திருப்பணிக்கு வழங்க அங்கு நாலுப்பட்டணத்து பதிணெண் விஷயத்தார்'' (வணிகக்குழு) உடன்பாடு கண்டதாக அங்குள்ள கி.பி. 1531ம் ஆண்டு கல்வெட்டு தெரிவிக்கிறது.[13]

மற்றும் இசுலாமியப் பெண்டிர், முத்துக்களைக் கொண்ட பொன்னாலான வடங்கள், மாலைகள், தொங்கட்டான், நெற்றிச்சூடி, பாடகம், தோள்வளை, பீலி, மோதிரங்கள் ஆகிய அணிகளை அணிந்து வந்தனர். இசுலாமிய ஆடவர்களும் தங்களது இயற்பெயர்களுடன் ''முத்தை''யும் இணைத்து வழங்கும் வழக்கமும் ஏற்பட்டது. முத்து இபுராகீம், முத்துமுகம்மது, முத்துநயினார், முத்து ஹுசேன், என்ற பெயர்கள் சில எடுத்துக் காட்டுகளாகும். இன்னும் நன்கு விளைந்த ஆனி முத்துக்களைப் போன்று, வயதிலும், வாழ்விலும் முதிர்ந்த பாட்டன்மார்களை'' இசுலாமியர். ''முத்து வாப்பா'' எனச் செல்லமாக அழைக்கும் வழக்கம் ஏற்பட்டது. மேலும் தங்களது காணிகளுக்கு ''முத்து வயல்'' என்றும், குடியிருப்பு ஊர்களுக்கு முத்துப்பட்டணம் என்னும் இவ்வல்லங்களுக்கு ''முத்துமகால்'' என்றும் பெயர் சூட்டினர். இவைகளில் இருந்து தென்பாண்டிக்கடல் முத்துக்கள், தமிழக இசுலாமியரது வாழ்வில் பதினாறு, பதினேழு, பதினெட்டாவது நூற்றாண்டுகளில் எத்தகைய தாக்கத்தை ஏற்படுத்தி இருந்தது என்பதைப் புரிந்து கொள்வதற்கு இந்த வரலாற்றுச் செய்திகள் உதவுகின்றன. இதற்கிடையில் போர்ச்சுகல் நாட்டு கடல் சொள்ளைக்காரனாக தல்மேதா, மாலத்தீவில் தங்கரமிட்டு நின்ற இசுலாமியரது வணிக கப்பல்களை கொள்ளையிட லூர்சி என்பவனை அனுப்பி வைத்தான் திரும்பும் வழியில் அவனது கப்பல் திசைமாறி இலங்கையின் தென்பகுதியில் உள்ள காலியையும் பின்னர் கொழும்புனையும்

---

12. Appadorai Dr. Economic Conditions of S. India (1000AD-1500AD)
13. A.R. 396/1907.

அடைந்தது.[14] இசுலாமியர். அங்கும் அரசியல் செல்வாக்குடன் வளமார்த்த நிலையில் இருந்ததை அவன் கண்டான் அப்பொழுது அங்கு நிலவிய அரசியல் குழப்பங்களில் தலையிட்டு, அவைகளை அவனுக்குச் சாதகமாகப் பயன்படுத்தி, இசுலாமியரது வாணிபச் செல்வாக்கை வலுவிழக்குமாறு செய்தான். அவனைத் தொடர்ந்து பல போர்ச்சுகல் கப்பல்கள் போர் வீரர்களுடன் கொழும்பு வந்தன. இத்தகைய பின்னணியில், தளபதி ஜோ புரோலன் தலைமையில் (கி.பி.1523) கப்பல் அணி காயல் துறையை அடைந்தது. அவர்களது ஆதிக்கத்தை கிழக்கு கடற்கரையில் நிறுவ பரங்கிகள் மேற்கொண்ட திட்டவட்டமான முயற்சியை இந்தக் கப்பல் அணி வருகை உணர்த்தியது. காலம் காலமாக இசுலாமியர்களது கட்டுப்பாட்டில் இருந்த பரவர்களை தனிமைப்படுத்தும் முயற்சியில் போர்ச்சுக்கல் பரங்கிகள் ஈடுபட்டனர். இரண்டு நூற்றாண்டுகளுக்கு மேலாக இசுலாமியரது, எடுபிடியாக, அவர்களையே நம்பி வாழ்ந்தவர்களின் இதயங்களில் வெறுப்பைக் கொட்டிக் கிளறினர். அப்பொழுது அங்கு நடைபெற்ற முத்துச்சலாபத்தின் பொழுது ஒரு முஸ்லீமிற்கும் பரவ இனத்தொழிலாளிக்கும் இடையில் ஏற்பட்ட தகராறு பெரிதுபடுத்தப்பட்டு பெரிய இனக் கலவரமாக உருவெடுக்க உதவினர். எவ்வித ஆயத்தமும் இல்லாத இசுலாமியர் பெரிதும் பாதிக்கப்பட்டனர்.பலர்கொலை செய்யப்பட்டனர். இந்த நிகழ்ச்சி தூத்துக்குடியில் கி.பி 1532ல் நடைபெற்றது. ஆத்திரமடைந்த இசுலாமியர், பரவர்களைப் பழி வாங்கினர். கடலிலும், நிலத்திலும் கொலைக்கு கொலை, கொள்ளை தொடர்ந்தது. அவர்களது குடிசைகள் கொடூரமான முறையில் தீக்கிரையாயின. பரவர் படகுகளையும் உடமைகளையும் போட்டுவிட்டு உயிர்தப்பி ஓடினர்.[15]

மீண்டும் இசுலாமியர் அவர்களைத் தாக்கினால் ......... இந்த பயத்திற்கு பரிகாரம் செய்வதாக போர்ச்சுக்கீசியர் அவர்களுக்கு சொல்லினர்: பாதுகாப்பு கொடுப்பதாக உறுதியளித்தனர். ஆனால் ஒருநிபந்தனை, அவர்கள் அனைவரும் கிறித்துவமதத்தை

14. Fr. Pereira. History of Ceylon p. p. 10-11
15. Krishnasamy - Dr. A. - Tamil Country under Vijaya Nagar (1964) P.P. 235 - 236

தழுவுதல் வேண்டும். மருந்து கசப்பானதுதான். ஆனால் அப்பொழுது அவர்களுக்கு அந்த வைத்தியம் தேவைப்பட்டது. பகைமையும் பயமும் அலைக்கழித்தவர்களாக தலைகளை ஆட்டி ஒப்புதல் அளித்தனர். கொச்சியில் இருந்து போர்ச்சுக்கீசியரின் சிறிய படையணி ஒன்று அவர்களது கடற்கரை குடியிருப்பிற்கு காவலாக நின்றது. அந்த அணியின் செலவிற்காக ஆண்டுதோறும் 1500 குரஸோடா பணம் கொடுக்க பரவ ஜாதித்தலைவர் ஒப்புக் கொண்டார்.[16] அதன்பின்னர், நிபந்தனையின்படி பரவரது "பட்டங்கட்டிகள்" சிலர் கொச்சிக்கு சென்று போர்ச்சுகல் நாட்டு மத குருக்களை சந்தித்து ஆயுத உதவி பெற்றதுடன், ஒரே நாளில் 20,000 பரவர்கள் கத்தோலிக்க கிறித்துவ மதத்தை தழுவ ஏற்பாடு செய்தனர்.[17] சிறிய இடைவெளியில் மீண்டும் பரவர்கள் இசுலாமியரைத் தாக்கினர். பெரும் சேதத்தை விளைவித்தனர் சில நூறு முஸ்லீம் குடும்பங்கள் தூத்துக்குடி கடற்கரைப்பகுதியில் இருந்து இன்னும் வடக்கே, – இராமநாதபுரத்தில் – கிழக்கு கடற்கரையில் குடியேறினர். கீழக்கரையும், வேதாளையும் அவர்களது புதிய தாயகமாகின.

இந்த அவல நிகழ்ச்சிகளினால், பல நூற்றாண்டுகளாக தெற்கு கடற்கரையில் அமைதியுடனும், செல்வாக்குடனும் வாழ்ந்து வந்த இசுலாமியரது இயல்பான வாழ்க்கை, வாணிபம், சமுதாய சிறப்பு ஆகிய நிலைகளில் பெரும் பாதிப்பு ஏற்பட்டது. இத்தகைய இழப்பை பிந்தைய ஆண்டுகளில் கூட ஈடு செய்ய இயலவில்லை என்பதை வரலாறு சுட்டுகிறது. இத்தகைய சமூக சீர்குலைவிற்கு அன்று தமிழக அரசு எனப் பெயரளவில் இருந்த வடுகரது ஆட்சிதான் காரணம் என்பதையும் வரலாறு துலக்குகிறது. பொய்மைப் பிரச்சாரத்தினால், தமிழக மக்களை ஏமாற்றி, மதுரை சுல்தான்களது ஆட்சியைக் கைப்பற்றிய வடுகர்கள், தமிழக மக்களை, குறிப்பாக கடற்கரையோர குடிகளை பரங்கிகளது குறுக்கீடுகளில் இருந்து காப்பாற்ற முடியவில்லை. அரசின் இயலாத்தன்மை காரண

---

16. Arunachalam - History cf Pearl fishery of Tamil Coas (1952) p. 19.
17. Arunachalam - History of pearl Fishery of Tamil coas (1952)

மாக போர்ச்சுகல் நாட்டாரது நடமாட்டம் தெற்கு கடற்கரையில் அதிகமாகிறது. அவர்களது ஆயுதபலமும், கொடூரமான நடவடிக்கைகளும் மக்களுக்கு அச்சத்தை ஊட்டியது. ஆனால் கேரள கடற்கரை முஸ்லீம்கள், இந்த மனிதப் பிசாசுகளுக்கு பயப்படாமல், அவர்களுடன் பொருதி போராடி வந்தனர். அந்த மாவீரர்களது போராட்டக் களமாக கிழக்கு கடலின் மன்னார் வளைகுடாவும் விளங்கியது.

அப்பொழுது இலங்கையில் இருந்த மூன்று அரசுகளில்' கோட்டை என வழங்கப்பட்டதும், கொழும்பை தலைநகராகக் கொண்டிருந்ததுமான அரசுக்கு இரண்டு சகோதரர்சுள்போட்டியிட்டனர். அவர்களில் புவனேகபாகு என்ற மூத்தசகோதரருக்கு போர்ச்சுகீசியர் ஆதரவு கொடுத்து வந்தனர். இன்னொரு இளவரசரான மாயதுன்ன பண்டாராவிற்கு கோழிக்கோடு அரசர் ஸாமரின் ஆயுத உதவி வழங்கி வந்தார்.[18] கி.பி. 1534ல் இலங்கை சென்ற கப்பல் அணிக்கு தலைமை தாங்கிய ஸாமரின் மன்னரது தளபதி குஞ்சாலி மரக்காயர், பல இடங்களில் பரங்கிகளை எதிர்த்து அழித்தார். மூன்று ஆண்டுகள் கழித்து மீண்டும் கோழிக்கோட்டில் இருந்து புறப்பட்ட பெரும் கப்பல் படையை குஞ்சாலி மரைக்காயர், அவரது தம்பி அலி இபுராகில் மரைக்காயர் அவரது மைத்துனர் அகமது மரைக்காயர் ஆகியவர்கள் நடத்திச் சென்றவர். அந்த அணி, ஐம்பத்து ஒரு கப்பல்களும் இரண்டாயிரம் வீரர்களும் ஐநூறு பீரங்கிகளும் அடங்கியதாக மதிப்பிடப்படுகிறது. கன்னியாகுமரிக் கருகில் பரங்கிகளை வெற்றி கொண்ட அவர்கள், கொழும்பிலிருந்து தகவலை எதிர்பார்த்து வேதாளைக்கருகில் காத்து இருந்தனர். இதனை அறிந்த மார்ட்டின் அல்போன்ஸா என்ற போர்ச்சுகல் தளபதி அறுநூறு கப்பல் படை வீரர்களுடன் விரைந்து சென்று அவர்களைத் தைரியமாகத் தாக்கினான். இராமேசுவரத்திற்கும் வேதாளைக்கும் இடையில் கடலில் 28–2–1538ல் நிகழ்ந்த இந்த உக்கிரமான போர் இந்திய கடற்போர் வரலாற்றில் ஒரு சிறந்த ஏடாக விளங்கியது.[19] கடற்போரில் வல்லவர்களான போர்ச்சுகன் பரங்கிகளிடம் கடல் வணிகரான இசுலாமியரது வீரம் எடுபடவில்லை.

---

18. Fr. Pereira History of Ceylon – p.p. 23.24
19. Whiteway - Rise of Portughece Power in India (1899) – 252

பெரும்பாலான கப்பல்கள் போர்ச்சுகீசியரின் பீரங்கித் தாக்குதலினால் தீப்பற்றி அழிந்தன. உயிரிழப்பும் மிகுதியாக இருந்தது. வேதாளை கிராமத்து வடக்குப்பள்ளிவாசல் மைய வாடியில் உள்ள ஏராளமான மீஸான்கள், அந்தப் போரில் வீரமரணம் எய்திய இசுலாமியரது தியாகத்தை மட்டுமல்லாமல் தமிழக கடல் வாணிப வளத்தை நிரந்தரமாக இழந்துவிட்ட இசுலாமியரது சோக வரலாற்றையும் நினைவுபடுத்துவதாக உள்ளன. எட்டாம் நூற்றாண்டில் சீனக் கடலில் இருந்து செங்கடல் வரை பச்சைப் பிறைக் கொடிகளையும், பளபளக்கும் பதாகைகளையும் தாங்கி பவனி வந்த இசுலாமியரது வாணிபக் கப்பல்கள், வழிதவறிய ஒட்டகங்கள் போல, எங்கோ சென்று மறைந்தன. உலக நியதிக்கு ஒப்ப, கிழக்கில் இருந்து மேற்கு நோக்கிப் பரவும் கதிரவனது ஒளிக் கதிருக்கு மாறாக, மேற்கே இருந்து கிழக்கே பாய்ந்து பரவியதினால் இசுலாம் என்ற ஒளி வெள்ளத்தை தங்களது இதயங்களில் தேக்கியவாறு அந்தக்கப்பல்களில் சென்று, கீழை நாடுகளில் எங்கும் சமயப்பிரச்சாரம் செய்த வலிமார்கள், பக்கீர்கள், முஹாஜிரீன்கள்–ஆகிய தொண்டர் திருக்கூட்டத்தின் நடமாட்டமும் முடமாக்கப்பட்டது.

அந்த நிகழ்ச்சிக்கு பின்னர், ஒரு நூற்றாண்டு வரை போர்ச்சுகல் பரங்கிகள் இலங்கை அரசியல் ஆதிக்கத்திற்கு போராடியதால் தமிழ்நாட்டின் கடற்கரைப்பகுதிகளில் குறிப்பிடத்தக்க அத்துமீறல்களில் அவர்கள் ஈடுபடவில்லை. மாறாக, மலேஷியாவிலும் இலங்கையிலும் கிடைக்கும் இலவங்கப்பட்டை, மிளகு, ஏலக்காய் ஆகிய வாசனைப் பொருட்களை மிகுதியாகவும் விரைவாகவும் ஐரோப்பாவிற்கு எடுத்துச் செல்வதில் மிகுந்த அக்கரை காட்டினர். பத்தாண்டுகளுக்கு ஒருமுறை கிடைக்கும் மன்னார் முத்துக்களைவிட, அந்த வியாபாரம் அவர்களுக்குப் பெருத்த ஆதாயம் அளிப்பதாக இருந்தது. என்றாலும், அவர்கள், தமிழக கடற்கரையில் சமயத்தைப் பரப்புவதிலும் "அஞ்ஞானிகளை" மதம் மாற்றுவதிலும் தீவிரமாக ஈடுபட்டு இருந்தனர். ஸேவியர், ஹென்றிகஸ் ஆகிய கத்தோலிக்க கிறித்தவ பாதிரியார்களது வாழ்க்கை குறிப்புகள் இதனை விவரிக்கின்றன.[20] நாளடைவில்

20. Dorsey – Portughese Discoveries, Missions in Asia and Africa p. 147

கிழக்காசிய வாணிபத்தில் டச்சுக்காரர்கள், போர்ச்சுகீசியருக்கு போட்டியாக வந்ததுடன் இலங்கையில், அவர்களது அரசியல் ஆதிக்கம், ஏகபோக வாணிபம்–ஆகிய நிலைகளை அழித்தனர்.

டச்சுக்காரர்கள் மதுரை நாயக்க மன்னர்களுடனும் இராமநாதபுரம் சேதுபதி மன்னர்களுடனும் நட்பு நிலையில் மன்னார்வளைகுடா முத்துக்குளித்தளிலும் உள்நாட்டில் தானிய வியாபாரத்திலும் ஈடுபட்டு வந்தனர். தூத்துக்குடி துறைமுகம் அவர்களது பிடியில் இருந்தாலும் போர்ட்டோ நோவா என்ற இடத்தில் தஞ்சாவூர் நாயக்க மன்னரிடம் கிரையத்திற்கு வாங்கிய இடத்தில் கோட்டையும் பண்டகசாலையும் அமைத்து, இலங்கை, சுமத்திரா (தற்பொழுதைய இந்தோனிஷியா) ஆகிய நாடுகளுடன் வியாபாரத் தொடர்புகள் வைத்து இருந்தனர். இவர்கள் உலாந்தாக்காரர் என அழைக்கப்பட்டனர். சோழ நாட்டிலும், பாண்டிய நாட்டிலும் கைத்தறித் துணிகளை வாங்கி மேனாட்டிற்கு ஏற்றி அனுப்பும் பணியில், ஆங்காங்கு இருந்த மரக்காயர்கள் அவர்களுக்கு உதவி வந்தனர் என்பது மட்டும் தெரிய வருகிறது. ஆனால் இந்த கால கட்டத்தில் தமிழக இசுலாமியரைப் பற்றி குறிப்பிடத்தக்க செய்திகள் வரலாற்றில் காணப்படவில்லை.

இந்த நிகழ்ச்சிக்கு பதினைந்து ஆண்டுகள் கழித்து போர்ச்சுகீஸிய கடல் நாய்களை அழிப்பதற்கு இன்னொரு முயற்சியும் மேற்கொள்ளப்பட்டது. இந்த முறை கோழிக்கோட்டு ஸாமரின் மன்னருடன் விஜயநகரப் பேரரசரது உறவினரும் ஆளுநருமான வித்தலாவும் அந்த முயற்சியில் இணைந்து கொண்டார். முத்துக்குளித்தலில் போர்ச்சுகீஸியர் விஜயநகர பேரரசரது பங்கினை அளிக்கத் தவறியது. தெற்கு கடற்கரையில் உள்ள மணப்பாடு, புன்னைக்காயல், தூத்துக்குடி, வேம்பாறு ஆகிய ஊர்களில் அவர்களது நிலையினை பலப்படுத்திக் கொண்டது. கன்னியாகுமரியில் இருந்து இராமேசுவரம் வரையிலான கடற்பகுதியில் வாழும் பரவர்களும் அவர்களது நாட்டு அரசியல் சட்டதிட்டங்களை அமுல் நடத்தி வந்தது.[21] இராமேசுவரம் செல்லும் பயணிகளிடம் வேதாளையில் கட்டாயமாகத் தலைவரி

21. Sathianathaiar—History of Madura Nayaks (1924)(appendix)

வசூலித்தது ஆகிய அக்கிரமச் செயல்களுக்காக அவர்களை அழித்து ஒழிப்பது என்பது வித்தலராயரின் முடிவு. ஆதலால் ஸாமரின் மன்னரது கடல்படை, மன்னார் வளைகுடாவில் கடலில் மோதும்பொழுதும் வித்திலராயரது வடுகர்படை கடற்கரைப்பகுதிகளில் உள்ள போர்ச்சுகீஸியரையும் அவர்களது கோட்டையான காவலைத் தாக்கி அழிப்பது என்பது திட்டம்.

மே 1553ல் கோழிக்கோடில் இருந்து இராப் அலி தலைமையில் வந்த நாற்பது கப்பல்கள் தூத்துக்குடிக்கு அருகில் உள்ள முசல்தீவைத்தாக்கி அங்கிருந்த ஏராளமான பரவர்களையும் இருபது மீன்பிடி வள்ளங்களையும் கைப்பற்றினர். பின்னர், இராப் அலி அணியில் உள்ள ஐநூறு இசுலாமிய வீரர்கள் புன்னைக்காயல் கோட்டையை தாக்கிப்பிடித்தனர். தப்பி ஓடிய போர்ச்சுக்கீசிய தளபதியையும் வீரர்களையும் எதிர்ப்புறத்தில் தாக்கிய வடுகர் படை கைப்பற்றியது. இந்த சோகச் செய்தியை கேள்வியுற்ற போர்ச்சுகீசியத் தலைமை கொச்சியில் இருந்த கப்பல்படை ஒன்றை அனுப்பி வைத்தது. புன்னைக்காயலுக்கு வந்து சேர்ந்த அந்த அணி அப்பொழுது வடக்கே, கீழக்கரை அருகில் நிலை கொண்டு இருந்த இராப் அலி அணியுடன் கடுமையான கடல்போரில் மோதியது. போர்சசுக்கீசியர், இராப் அலியின் உக்கிரமான தாக்குதலைச் சமாளிக்க இயலாமல் சற்று தொலைவில் உள்ள தீவுகளுக்குள ஓடி ஒழிந்தனர். அந்நிய ஆக்கிரமிப்பாளருக்கு தோல்வி. ஆனால் வெற்றியைக் கண்ட மாவீரன் இராப் அலி, போரில் தழுவிய பயங்கர காயங்களினால் உயிர் துறந்தார்.[22] தியாகி குஞ்சாலி மரக்காயரது நீண்டகால ஆசையை நிறைவேற்றிய மன நிறைவுடன் போர்ச்சுக்கீசிய பரங்கிகளது அக்கிரம ஆதிக்கம் அழியத்துவங்கியதின் அறிகுறிதான் அந்தப்போர். ஒருநூற்றாண்டுகாலம், மன்னார் வளைகுடாபகுதியைத் தங்களது சொந்த சொத்தாக பாவித்து வந்த போர்த்துகேஸியர் கி.பி. 1658ல் புயல் காற்றில் எழுந்த புழுதியைப் போல அந்தப் பகுதியில் இருந்து மறைந்தனர்.

---

22. Krishnasamy Dr. A.—Tamil Country under Vijayanagar Rule (1964) p. p. 240 : 241

# 16

## மீண்டும் வாணிபத்தில்

போர்ச்சுக்கீஸிய பரங்கிகளது மிருகத்தனமான நடவடிக்கைகளாக பாதிக்கப்பட்டிருந்த மலாக்கா முதல் ஏடன் வரையிலான நீண்ட வாணிப வழியில் இசுலாமியரது மரக்கலங்கள் மீண்டும் மெதுவாக செல்லத் தொடங்கின. அவை அனைத்தும் கீழக்கரை வள்ளல் சீதக்காதி என்ற ஷெய்கு அப்துல் காதிறு மரைக்காயருடையவை, ''தரணி புகழ் பெரிய தம்பி வரத்தால் உதித்த'' இந்த வணிகப் பெருமகனுக்கு பதினேழாவது நூற்றாண்டில் இந்திய துணைக்கண்டத்தில் எவருக்கும் வாய்த்து இராத செல்வ வளம் இருந்தது. அதற்கு மேலாக, மக்கட்கு அள்ளி அள்ளி வழங்கும் அன்பு உள்ளமும் அமைந்து இருந்தது. ''திரைகண்டு எழுங்கடல் மீதே தன் வங்கத்தை செல்லவிட்டு கரைகண்டவர்'' என வள்ளலது கடல் வாணிபத்துக்கு புலவர் ஒருவர் கரை கண்டுள்ளார்.[1] அவரது கப்பல்கள் சீனத்து நவமணிகளையும, அச்சைனில் (கம்போடிய) இருந்து அழகிய குதிரைகளையும், மலாக்காவில் இருந்து கஸ்தூரி, அம்பர், முதலிய வாசனைப் பொருட்களையும், ஈழத்தில் இருந்து வேழங்களையும் இன்னும் பல தேசத்து பொன்னையும், மலைகள் போல கொண்டு வந்து குவித்தாக அவரது வாணிப வன்மையை இன்னொரு பாடல் அளவிடுகிறது.[2]

''செய்யி தப்துல்காதிறு மரைக்காயர் திருமணவாழ்த்து. 'சீதக்காதி நொண்டிநாடகம்'' என்ற இருசிற்றிலக்கியங்களுக்கும்

---

1. தனிப்பாடல் — நமச்சிவாயப்புலவர்

2. உமறுப்புலவர் — சீதக்காதி திருமண வாழ்த்து கண்ணிகள் 75–83–1952

இன்னும், படிக்காசுப்புலவர் நமச்சிவாயப்புலவர் ஆகிய புலவர் பெருமக்களது தனிப்பாடல்களுக்கும், பாட்டுடைத் தலைவராக விளங்கும்இந்த வள்ளலைப் பற்றிய போதியவரலாற்று ஆவணங் கள் கிடைக்காதது தமிழக முஸ்லீம்களது துரதிர்ஷ்டம் என்றே குறிக்க வேண்டியுள்ளது. ஈதலறத்திற்கு இலக்கணமாக, இஸ் லாமிய நெறிகளுக்கு எடுத்துக்காட்டாக விளங்கிய இந்த இசு லாமிய தமிழ்த்தலைவனை முழுமையாகத் தெரிந்து கொள்ளும் வாய்ப்பை இழந்து விட்டோம். ஆனால் கி.பி. 1682க்கும் கி.பி. 1698க்கும் இடைப்பட்ட காலத்தில் இலங்கைக்கும் இந்தியாவிற்குமான மிளகு, கைத்தறித்துணிகள் முத்து, சங்கு, ஆகிய வணிகத்தில் நேரடியாக போட்டியிட்ட டச்சுக்கிழக்கு இந்தியக் கும்பெனியாரது ஆவணங்களில் இருந்து அவரது வாணிப வளத்தை ஓரளவு தெரிந்து கொள்ளத்தக்கதாக இருக்கிறது. அவரது வாணிபக் கலங்கள் நமதுநாட்டுக் கடலோர வணிகத்தில் ஈடுபட்டது மல்லாமல்–வங்காளம்–மலாக் கா, அச்சைன் ஆகிய தூர கிழக்கு நாடுகளுக்கு சென்று வந்த விவரமும் தெரிகிறது. மற்றும், சென்னை கோட்டைகுறிப்புகளில் இருந்து வள்ளல்அவர்கள் ஆங்கில கிழக்கிந்திய கும்பெனியாரு டன் கி.பி. 1685–87ல் மிளகு, அரிசி, வாணிபம் சம்பந்தமாக கொண்டிருந்ததொடர்புகள் தெரியவருகின்றன[3]. மேலும்யாழ்ப் பாணத்தில் இருந்த டச்சு தளபதி படேனியாவில் உள்ள டச்சு கவர்னருக்கு அனுப்பிய குறிப்புகளில் இருந்து கி.பி. 1695ல் வள் ளல் சீதக்காதி டச்சுக்காரர்களுடன் வாணிபத் தொடர்புகள் கொண்டு இருந்ததையும்: மன்னருக்கும் கல்பிட்டியாவிற்கு இடைப்பட்ட கடல் பகுதியில் சங்கு குளிப்பதற்கான அனுமதி கோரிய விவரமும் தெரியவருகிறது.[4] அன்றைய காலகட்டத்தில் மன்னார்வளைகுடாவிலும், சோழமண்டலக்கரையிலும் எடுக்கப் பட்ட சங்குகள் பெரும் பாலும் வங்காளத்திற்கு ஏற்றுமதி செய் யப்பட்டு வந்தன. நமது நாட்டில் ஏனைய பகுதிகளைவிட வங் காளத்து இந்துக்கள் சங்கை சிறந்த மங்கலப் பொருளாக புனித முடன் போற்றி வந்தனர். வங்க நாட்டுப் பெண்கள் சங்கினால் செய்யப்பட்ட வளையல்களை சங்க காலத்து தமிழ் மகளிரைப் போல் அணிந்து வந்தனர்.

---

3. அமீர் அலி - என், சீதக்காதி சமயமும் வாழ்வும் (1993)
4. Memoir of Hendrick Zwaardecroom (1911) p. 9.

தமிழகத்துச் சங்குகள் வங்காளம் சென்ற விவரங்களை அரபி பயணி அபூசெய்து (கி.பி.851) இத்தாலிய பயணி பார் போஸா (கி.பி.1565) பொக்காரோ (கி.பி.1644) கத்தோலிக்க பாதிரியார் மார்ட்டின் (கி.பி.1700) ஆகியோரது பயணக் குறிப்பு கள் தெரிவிக்கின்றன[5]. பிரஞ்சு வணிகர் தாவர்ணியரது (கி.பி. (1644/89) குறிப்புகள் அந்தச் சங்குகள் வங்காளத்தில் இருந்து இன்னும் வடக்கே பூட்டானுக்கும் திபெத்திற்கும் அனுப்பப்பட் டதை தெரிவிக்கின்றன[6].

மன்னர் வளைகுடாவில் கிடைக்கும் சங்குகளில், இலங்கை கடல்பகுதி சங்குகளைவிட தமிழக கடல் பகுதி சங்குகள் அள விலும் பருமனிலும் பெரியதாக இருந்ததால், அவைகளுக்கு நல்ல சந்தை மதிப்பு இருந்தது. இந்தச் சங்குகள், தூத்துக்குடிக்கும் தொண்டிக்கும் இடைப்பட்ட கடல் பகுதியிலும் கடலூருக்கு அரு கிலும் மிகுதியாகக் கிடைத்தன. இந்தச் சங்குகளை கடலில் குளித்து எடுக்கும் தொழிலில் அப்பொழுது இசுலாமியர்கள் ஈடுபட்டு இருந்தனர். ஏற்கெனவே முத்துக்குளித்தலில் தேர்ந்த அவர்கள் இந்த தொழிலில் ஈடுபட்டது பொருத்தமானதொன்று இவர்களில் பெரும்பாலானவர்கள் பெரியபட்டினம் கீழக்கரை ஆகிய ஊர்களைச் சேர்ந்தவர்கள்[7]. இலங்கையும் ஆங்கிலேயர் ஆட்சியில் அமைந்து இருந்த சென்ற நூற்றாண்டில் கூட, இலங் கைக்கடலில் சங்கு குளிப்பதற்கு பெரிய பட்டினத்து சங்குகுளித் தொழிலாளர்கள் அனுப்பப்பட்ட விவரம்தெரிய வருகிறது[8]. இன் னும் பெரியபட்டினத்தில் சங்குகுளிகாரத்தெரு என்ற வீதியும் சங்குகுளிக்கும் தொழிலில் அனுபவமும் உள்ள ஏராளமான இசு லாமியரும் உள்ளனர்.

மேலும் தமிழக இசுலாமியரது மரக்கலங்களில் இந்தச் சங்குகள் ஏற்றப்பட்டு வங்காளத்திற்கு கொண்டு செல்லப் பட்டன. அந்த மரக்கலங்களை இயக்கிய தண்டல்களும் இசு

5. Arunachalam–History of pearl Fishery of Tamil Coast (1952)
6. Ibid
7. கமால் - எஸ். எம். – இராமநாதபுரம் மாவட்ட வரலாற்றுக் குறிப்புகள் (1984) பக். 75
8. Madura Dist. Records - vol. 4673. 15-8-1825.

லாமியரே. கி.பி. 1794ல் இராமநாதபுரம் சேதுபதி மன்னருக்குச் சொந்தமான 11,20,000 சங்குகள் தேவிபட்டினம் துறையில் இருந்து கீழக்கரை எல்லே தண்டல் என்பவரது ''களிமண்பார்'' என்ற சரக்கு கப்பலில் ஏற்றப்பட்டு வங்காளத்திற்கு அனுப்பப்பட்டது. மீரா நயினா என்ற பிரமுகர், மன்னரது வியாபாரப் பிரதிநிதியாக கல்கத்தாவில் பணிபுரிந்தார். இந்தக்கப்பல் தேவி பட்டினம் துறைமுகத்திலிருந்து நாகூர், கட்டிக்கூர், பிம்லிபட்டினம், பச்சைமரி, ஹூக்லி துறைமுகங்களைத் தொட்டு கல்கத்தா சென்று அடைந்ததாக அரசு ஆவணம் ஒன்றில் குறிப்பிடப்பட்டுள்ளது.[9] வங்காளத்திற்கும் தமிழகத்திற்கும் இடையிலான கடல் பயணம் நீண்ட நெடுங்காலமாக இந்த ஊர்களின் வழிதான் சென்றது என்பதை இளையான்குடி மதாறுப்புலவர் பாடிய சேதுபதி ஏலப்பாட்டு என்ற சிற்றிலக்கியமும் உறுதி செய்கிறது.[10] வங்காளத்தில் இருந்து திரும்பும் தோணிகளில் அந்த நாட்டு, அரிசி, சீனப்பட்டு, கண்ணாடிச்சாமான், லஸ்தர் விளக்குகள் போன்ற புதுமைப் பொருட்கள் தமிழ்நாட்டிற்கு ஏற்றி வரப்பட்டன. வாணிபம் மீண்டும் உச்சநிலையையடைந்தாலும் தொடர்ந்து அந்த நிலைமை உறுதிபடுத்தக்கூடிய வரலாற்று, இலக்கியச்சான்றுகள் இல்லை. அப்பொழுது தமிழக வாணிபத்தில் ஈடுபட்ட டச்சுக்காரர், ஆங்கிலேயர், பிரஞ்சுக்காரர் பங்கும், போட்டியும் மிகுந்து இருந்தன. என்றாலும், கரையோர வாணிபத்தில் ஆங்காங்குள்ள மரக்காயர்கள் ஈடுபட்டு இருந்ததாக டச்சு ஆவணங்கள் குறிப்பிடுகின்றன. தமிழ்நாட்டிற்கும் வங்கத்துக்கும், தமிழ்நாட்டிற்கும் இலங்கைக்கும், இசுலாமியரது மரக்கலங்கள், கைத்தறித்துணிகள், சங்கு, உப்பு, நெல், கருவாட்டு சிப்பங்கள் தென்னங்கீற்றுகள், ஆகிய பொருட்க்ளை எடுத்துச் சென்றன. தூத்துக்குடி கீழக்கரை, வேதாளைபாம்பன், தேவிபட்டினம், தொண்டி, பாசிப் பட்டினம் அதிவீரராமபட்டினம், கடலூர், நாகப்பட்டினம், போர்டோ நோவோ, பாண்டிச்சேரி ஆகிய துறைகள் இத்தகைய சரக்குகளைக் கொண்ட தோணிகள், தண்டல்களுடன் காட்சியளித்தன.

---

9. Tamilnadu Archives - Military Consultations vol. 105 A p. 2622.
10. அமீர்அலி N. கேப்டன் – இசுலாமிய தமிழ் ஆராய்ச்சி மாநாட்டு மலர் (1973) பக். 41, 42.

பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதியில், உள்நாட்டு வாணிபத்தில் கீழக்கரை சையிது அப்துல் காதிர் மரைக்காயர் என்பவர் சிறப்புடன் இருந்ததை ஆங்கில கிழக்கிந்தியக் கம்பெனியாரின் ஆவணங்கள் குறிப்பிடுகின்றன. இந்த வணிகப் பெருமகனைப் பற்றிய செய்திகள் கி.பி.1789 முதல் கிடைக்கின்றன. இராமநாதபுரத்திலும், கீழக்கரையிலும் இவருக்கு பண்டக சாலைகள் இருந்தன. இரும்பு, ஓடு, மரம், தானியங்கள், தலைப்பாகைத்துணி, துப்பட்டா, கம்பளங்கள் ஆகிய வியாபாரங்களில் ஈடுபட்டு இருந்தார்.[11] அப்பொழுது இராமநாதபுரம் மன்னராக இருந்த விஜயரகுநாத முத்துராமலிங்க சேதுபதி (கி.பி.1762–1795)யின் உற்ற நண்பனாகவும் இருந்தார் எனத் தெரிகிறது.[12]

வள்ளல் சீதக்காதி காலந்தொட்டு, கீழக்கரை இசுலாமிய தன வணிகர்களுக்கும் இராமநாதபுரம் சேதுபதி மன்னர்களுக்குமிடையே நிலவிய நேச மனப்பான்மை காரணமாகவும், இராமநாதபுரம் சீமையெங்கும் வியாபாரத்தை ஊக்குவிக்கும் வகையிலும், அப்துல் காதிர் மரைக்காயரது பொருட்களுக்கு மாமூலான சுங்க வரி விதிப்பில், இருபத்து ஐந்து விழுக்காடு சலுகை அளிக்கப்பட்டு வந்தது.[13] சேதுபதி மன்னரைச் சிறையில் அடைத்து, ஆற்காட்டு நவாப்பின் பிரதிநிதிகளாக, அந்த நாட்டை ஆண்ட ஆங்கில கிழக்கிந்திய கம்பெனியார் காலத்திலும் இந்தச் சலுகை தொடர்ந்தது. அத்துடன் கடல் துறைகளிலும் கடற்கரைப்பட்டினங்களிலும் புதிதாக வணிக நிறுவனங்களை துவக்கி வணிகத்தை வளர்ப்பதற்கும் ஆற்காட்டு நவாப் முகம்மது அலி வாலாஜா'' மரைக்காயருக்கு ''பர்வானா'' (அனுமதி உத்தரவு) வழங்கி இருந்தார்.[14] அதன் காரணமாக அப்துல் காதிர் மரைக்காயர் திருநெல்வேலிச்சீமையிலும் அவரது வாணிபத்தை விரிவுபடுத்தினார். காயல்பட்டினம், குலசேகரப்பட்டினம், வேம்பாறு ஆகிய ஊர்களிலும், வேறு பல

11. Revenue Consultations — Vol. 62.A.p.p. 1796-9.
12. Madurai Collectorate. Records - Vol. 1140 - 18-10-1802 p.141
13. Ibid
14. Madurai Collectorate Records. Vol. 1178 p. 4 to 71.

இடங்களிலும் பண்டகசாலைகளைத் நிறுவி இருந்தார்.[15] அத்துடன், இராமநாதபுரம் சீமையில் கும்பெனியார், குடிமக்களிடமிருந்து கிஸ்தி (தீர்வை)யாகப் பெற்ற ஏராளமான நெல்லை, அப்துல் காதிறு மரைக்காயரிடம் விற்று வந்தனர். இந்த நெல் விற்பனையில்'' ''ஏகபோக உரிமை''யால் பாதிக்கப்பட்ட மெய்ஜியர் என்ற டச்சு நாட்டு தானிய வியாபாரி, கும்பெனி தலைமைக்கு வரைந்துள்ள புகாரிலிருந்தும்[16] இன்னும் இராமநாதபுரம் கலைக்டராக இருந்த காலின்ஸ் ஜாக்ஸனது துபாஷான ரங்கபிள்ளை மீது எழுப்பபட்ட ஊழல் புகார் பற்றிய ஆவணங்களில் இருந்தும், இந்த விவரங்கள் தெரியவருகின்றன.[17]

இந்தக்கால கட்டத்தில், கீழக்கரை மாமுனா லெப்பையும், காயல்பட்டினம் சேகனா லெப்பை என்பவரும் நவமணி வியாபாரத்தில் ஈடுபட்டு இருந்த செய்திகளும் உள்ளன. இராமநாதபுரம் சேதுபதி மன்னர் இந்த தனவணிகர்களிடமிருந்து நவரத்தினங்கள் வாங்கிய விவரத்தை கும்பெனியாரது ஆவணமொன்று குறிப்பிடுகின்றது.[18] சேகனா லெப்பை என்பவர் அறிஞர் பெருமக்களால் ''புலவர் நாயகம்'' என போற்றப்பட்ட ஷெய்கு அப்துல் காதிர் நயினார் லெப்பை (சேகனாப்புலவர்) ஆலிமாக இருக்கலாம் என நம்பப்படுகிறது. ஏனெனில் அவர், இசுலாமிய காப்பியங்களின் படைப்பாளியாக மாறுவதற்கு முன்னர்,அவரது தந்தை ஹபீபு முகம்மது லெப்பை மரைக்காயரைப் போல, முதலில் நவரத்தின வணிகராகவே வாழ்வைத் தொடங்கினார். இவர்களைத் தொடர்ந்து கீழக்கரையில் சேகு ஸதக்கத்துல்லா, முகம்மது காசீம் மரைக்காயர், ஹபீபு மரைக்காயர் போன்ற சில வணிகர்கள் பத்தொன்பதாவது நூற்றாண்டின் துவக்கத்தில் வாணிபத்தில் சிறந்து விளங்கினர் எனத் தெரிகிறது. அவர்களது பெரிய பண்டகசாலை கீழக்கரையில், கீழப்பண்டகசாலை

---

15. Revenue Consultations vol. 91A. 15-12-1797 p. 45, 64
16. Revenue consultations vol. 91A. p. 45, 61
17. கமால் Dr. எஸ்.எம்-விடுதலைப் போரில் சேதுபதி மன்னர் (1987) பக், 156-157
18. Tamilnadu Archives-Revenue Consultations. vol. 62A p. p. 17, 96, 97

என்ற பெயருடன் வழங்கப்பட்டது. அந்தப்பகுதி இன்றும் பண்டகசாலைத்தெரு என குறிப்பிடப்படுகிறது. அப்பொழுது, இராமநாதபுரம் சீமையில் வடக்கே கலியநகரியில் இருந்து தெற்கே வேம்பாறு வரை பல உப்பளங்கள் இருந்த பொழுதும், கிழக்கரைக்கு அருகே உள்ள வாளைத்தீவு, ஆனைப்பார் தீவுகளில் இயற்கையாக விளைந்த உப்பினை அவர்கள் எடுத்து வந்து விற்ற செய்தியை கும்பெனியாரது ஆவணமொன்று தெரிவிக்கிறது.[19] இவர்கள் பலமுறை "பாக் நீர் வழியில்" முத்துக்குளித்தல் மேற்கொண்டதை இன்னொரு ஆவணம் தெரிவிக்கிறது.[20] இன்னும் இந்த நூற்றாண்டில், கடலூர், சிதம்பரம், பகுதியில் செல்வாக்குடன் இருந்த மக்தூம் நெயினா, அப்துல் லெப்பை, அலீ என்ற இஸ்லாமியப் பெருமக்கள் ஆங்கில கிழக்கிந்தியா கும்பெனியாரது வணிகத்தில் அவர்களுக்கு உதவிகரமாக இருந்தனர் எனத்தெரிகிறது. அப்பொழுது ஆற்காட்டு நவாப் தாவுது கானிடம், மக்தூம் நெய்னா பலமுறை பேட்டி கண்டு, ஆங்கிலேயருக்கு பல சலுகைகளைப் பெற்றுத்தந்தாராம். பொதுவாக இந்தக் காலக்கட்டத்தில்தமிழக இசுலாமியர் வாணிப உலகில் குறிப்பிடத்தக்க சாதனைகளை நிகழ்த்திய வரலாற்றுச் சான்றுகள் இல்லை.

---

19. Madurai Collectonate Reconds vol. 4681, B. 26-2-183[illegible] p.p. 33-34
20. Ibid 17-1-1833 p.p. 20-25
Tamilnadu Archives-Public Consultations vols XIII, X XXVII XXX.

# 17

## விந்தை மனிதர்

தமிழ்ச் சமுதாயத்தில் தாழ்வு இல்லாத குடிமக்களாக தமிழக இசுலாமியர் வணிகத்தை வளர்த்தனர். அந்த வளர்ச்சியில் விளைந்த வாழ்வின் சிறந்த பண்புகளைப் பற்றி ஒழுகிய இசுலாமிய சமயநெறிச் சான்றோர்கள் உயர்ந்து வாழ்ந்தனர். அதன் காரணமாக அரசியல் முதன்மையும் பெற்றனர். பாண்டிய நாட்டின் அமைச்சராகவும் அரசியல் தூதுவர்களாகவும் பணியாற்றி தமிழகத்திற்கு பேரும் புகழும் குவித்தனர். ஆனால் குடி தழிஇ கோல் ஒச்சும் கொற்றவர்களாகும் வாய்ப்பு அவர்களுக்கு ஏற்படவில்லை. ஆனால் தமிழக இசுலாமியரது நீண்ட வரலாற்றில் ஒரே ஒருவருக்கு மட்டும, மிகச்சொற்ப இடைவெளியில், பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் அந்த பேறு கிடைத்தது.

மதுரை நாயக்கப் பேரரசின் இருநூற்றுப்பத்து ஆண்டு வரலாறு ராணி மீனாட்சியின் இறப்புடன் கி. பி. 1736ல் முடிவுற்றது.[1] அது வரை தொடர்ந்து வந்த பாரம்பரிய ஆட்சி முறை முற்றுப் புள்ளி பெற்றது. நாயக்க மன்னர்களுக்கும் குடி மக்களுக்கும் இடையில் தரகராக இருந்து வந்த எழுபத்து இரண்டு பாளையக்காரர்கள், தடியெடுத்த தண்டல்காரர்களாகினர். இந்த நிலையில், ஆற்காட்டு நவாப் பதவிக்கு போட்டியிட்ட வாலாஜா முகம்மது அலி, சந்தாசாகிபுவை, கும்பெனியாரது ஆயுதப்படை உதவியுடன் போரிட்டு ஒழித்து, திருவாங்கூர் உள்ளிட்ட தென்னகத்தில் அரசுரிமையை நிலைநாட்டினார். ஆனால் தெற்குச்சீமை பாளையக்காரர்களில் பெரும்பான்மை

---

1. Sathyanathaier - History of Madura Nayaks (1924) p. 224.

யோர் ஆற்காட்டு நவாப்பின் அரசியல் ஆதிக்கத்தை ஏற்று அவருக்கு ஆண்டு தோறும் அளிக்க வேண்டிய பேஷ்குஷ் (தோப்பா) பணத்தைச் செலுத்த மறுத்தனர். இருபது ஆண்டுகளுக்கு மேலாக யாருக்கும் கப்பத்தை செலுத்தாது தன்னாட்சி மன்னர்களைப் போல இருந்து வந்தவர்கள் ஆயிற்றே. நெல்லைச்சீமையில் நெற்கட்டுஞ்செவ்வல் பாளையக்காரர் பூலித்தேவர் தலைமையில் சில பாளையக்காரர்கள் நவாப்பின் படைகளோடு மோதுவதற்கும் ஆயத்தமாகினர். நவாப்பின் சகோதரர் மாபூஸ்கான் தலைமையிலும் கும்பெனித் தளபதி ஹெரான் தலைமையிலும் திருநெல்வேலி சென்ற நவாப். கும்பெனி படைகள் பாளையக்காரர்களை எளிதாக வழிக்கு கொண்டு வர இயலவில்லை.[2]

இந்நிலையில் நவாப்பின் படைகளுக்கு உதவியாக கும்பெனியாரது சுதேசி சிப்பாய்கள் அணி சென்னையில் இருந்து சென்றது. அதனை தலைமை தாங்கி நடத்தியவர் மாவீரன் முகம்மது யூசுப் கான் என்பவர். அவரை கம்மந்தான் கான் சாயபு என மக்கள் பிற்காலத்தில் மரியாதையுடன் அழைத்தனர். கமான்டன்ட் என்ற ஆங்கிலச் சொல்லின் திரிபுதான் கம்மந்தான் என்பது. அத்துடன் சாமந்தர் என்ற தமிழ்ச் சொல்லுக்கு நேரடியான பொருள் தரக்கூடியதாகும். அவர் இராமநாதபுரம் சீமையில் உள்ள பனையூரில் பிறந்தார். இளம் வயதில் வீட்டை விட்டு வெளியேறி தஞ்சாவூர், பாண்டிச்சேரி ஆகிய ஊர்களில் இருந்த பரங்கியரது பராமரிப்பிலும் வளர்ந்து பயிற்சிபெற்று சிறந்த போர் வீரரானார். உடல் வலிவும் உள்ள உரமும் கொண்ட அவர் வெகு விரைவில் பரங்கிகள் விரும்பி ஏற்றுக்கொள்ளும் தளபதியாக விளங்கினார். நமது போர் முறைகளுடன் துப்பாக்கிசுடுதல், பீரங்கி வெடித்தல் ஆகிய மேனாட்டு போரில் ஒப்பாரும் மிக்காருமின்றி திகழ்ந்தார். தன்னை வளர்த்து ஆளாக்கிய பரங்கிகளுக்கு செஞ்சோற்றுக் கடனாக பல போர்களில் வெற்றியை ஈட்டித் தந்தார். கி.பி. 1752ல் திருச்சி முற்றுகைப் போரில் வாலாஜா நவாப் முகம்மதலிக்காகப் போராடிய ராபர்ட் கிளைவின் வலது கரமாக விளங்கி சந்தாசாகிபையும் பிரஞ்சுப்படைகளையும் படுதோல்விக்கு ஆளாக்கினார். அதே போன்று பிரஞ்சுக்காரர்

2. Rajayyan Dr. K.-History of Madurai. (1972)

கள் கி.பி. 1758ல் சென்னைக் கோட்டையைத் தாக்கிய பொழுதும் கம்மந்தான் கான்சாயபு காட்டிய வீர சாகசங்களினால் வெள்ளையர் தப்பிபிழைத்தார்கள். ஆதலால் இத்தகைய, சிறந்த தளபதியிடம் நெல்லைப் பாளையக் காரர்கனை அடக்கியொடுக்கும் பொறுப்பு கொடுக்கப்பட்டதில் ஆச்சரியமில்லை.

நவாப்பிற்கு எதிரான நெல்லைச்சீமை பாளையக்காரர்கள் அணியைப்பிளந்து தூள்தூளாக்கினர். அந்த அணிக்கு தலைமை தாங்கிய பூலித்தேவர் வாசுதேவர் நல்லூர் கோட்டைப் போரில் நடுநடுங்கும்படியாக அவரது பீரங்கிகள் முழங்கின. சரமாரியாக பாய்ந்து வந்து சர்வநாசம் செய்த பீரங்கிகள் குண்டுகளினுள் பூலித் தேவரது மறப்படை புறமுதுவிட்டு ஓடியது. அன்றைய கால கட்டத்தில் தமிழகத்தில் மிகச்சிறந்த வீரராக மதிக்கப்பட்ட பூலித்தேவர் கம்மந்தான் கான்சாயபுவிடம் 16. 5. 1861ம் ஆண்டு, தோல்வியுற்று இராமநாதபுரம் சீமையில் உள்ள கடலாடிக்கு தப்பி ஓடினார்.[3] பூலித் தேவருக்கு ஆயுதமும் ஆதரவும் அளித்து வந்த மைசூர் மன்னர் ஹைதர்அலியை திண்டுக்கல்போரிலும்,[4] டச்சுக்காரர்களை ஆழ்வார் திருநகரி, மனப்பாடிலும் தோற்கடித்தார்.[5] எஞ்சிய கிளர்ச்சிக்கார பாளையக் காரர்களை ஓட்டப்பிடார போரில் அழித்து ஒழித்தார்.[6] ஏறத்தாழ இரண்டரை ஆண்டுகளாக இடைவிடாத முயற்சியுடன், மதுரை, திருநெல்வேலி பகுதிகளில் நவாப்பிற்காக கிளர்ச்சியிலும் போராட்டத்திலும் ஈடுபட்டு தமிழகத்தில் அரசியல் உறுதி தன்மைக்கும் அமைதி வாழ்விற்கும் ஊறு செய்து வந்த எதிர்ப்பு சக்திகள் அனைத்துடனும் பேராடி வெற்றி பெற்றார். ஐந்து ஆண்டுகள் மதுரையில் ஆளுனராக இருந்த தமது சகோதரர் மாபூஸ் கானால் கூட அடக்க முடியாத பாளையக்காரர்களைப் பல போர் முனைகளில் வென்று நாட்டில் நிரந்தரமான அமைதியை நாட்டியதற்காக

---

3. M. C. C. VOL. 9. 25. 5. 1761 p : 58
4. M. C. C. VOL. 8. 11. 2. 1760 p.p. 293 : 296
5. Ibid 5. 7. 1760 p. 218.
6. Ibid 4. 7. 1760 p. 213
M. C. C. VOL. 9. 26. 6. 1761. p : 78

நவாப் வாலாஜா மும்மது அலி, கம்மந்தான் கான்சாகிபிற்கு பொன்னால் ஆன தட்டு ஒன்றையும் அற்புதமாக வடிவு அமைக்கப்பட்ட வாள் ஒன்றையும் பரிசாக அளித்து அவரது சேவையைப் பாராட்டினார்.

மதுரையின் ஆளுநர் என்ற முறையில் மிகக்குறுகிய காலத்தில் அரிய பல சாதனைகளைச் செய்தார். குறிப்பாக, மதுரை நகரையும் அதனையடுத்த வடக்கு, வடக்கு கிழக்குப் பகுதியிலும் ங்களது பாரம்பரிய தொழிலான, திருடு, கொள்ளை போன்ற கொடுஞ்செயல்களினால் மக்கள் சமுதாயத்தை அலைக்கழித்து லலத்துக்குள்ளாக்கி வந்த கள்ளர்களை ஈவு இரக்கமில்லாமல் ழித்தார். மேலூர், வெள்ளாளப்பட்டி ஆகிய ஊர்களில் காட்டைகளை அமைத்து மக்களை கள்ளர் பயத்தினின்றும் ாத்தார். மேலும், கள்ளர்கள் இயல்பான வாழ்க்கையில் ஈடு ட்டு உழைக்கும் வகையில், பல உதவிகளை அவர்களுக்கு சய்தார். அவர்களது கொடுஞ்செயல்களுக்கு படுகளமாக ளங்கிய காடுகளை அழித்து கழனிகளை அமைத்து விவசாயத் தப் பெருக்கினார். அதற்கான கண்மாய்களையும் கால்களை ம் செம்மைப்படுத்தினார. உள்நாட்டு வணிகம், சிறப்பாக டைபெறுவதற்கு வணிகர்களுக்கு பாதுகாப்பு வழங்கியதுடன் ங்காங்கு வணிகர்கள் தங்குவதற்கு விடுதிகள் அமைத்துக் காடுத்தார். நெசவாளர்களுக்கு முன்பணம் கொடுத்து அவர் ளது தொழிலை விரிவுபடுத்த ஊக்குவித்தார். சாதாரண குடி களும் மேநாட்டு ஆயுதங்களான துப்பாக்கி, பீரங்கிகளை வடிக்கும் முறைகளையும் அவைகளுக்கான வெடிமருந்து பாரிப்புகளையும் தெரிந்து கொள்ளுமாறு செய்தார். மாதம் வறாது திருவிழாக்கள் நடந்த மதுரை மாநகர் கோயில்களுக்கு ழங்கப்பட்ட "மான்யங்களை" கோயில் பணிகளுக்கு பயன் டுத்தாமல் சொந்தத்திற்கு பயன்படுத்திக்கொண்டதால் புறக் ணிக்கபபட்ட கோயில் நடைமுறைகளை, திருவிழாக்களை, மற்கொள்ளுவதற்கு ஏதுவாக மதுரை மீனாட்சி ஆலயம் பான்ற திருக்கோயில்களுக்கு அரசுமான்யம் வழங்கி, அவை பாலிவும் அழகும் பெறுமாறு செய்தார்.[7]

சுருங்கச்சொன்னால் கம்மந்தான் ஆட்சியில் நீதியும் நாயமும் நிலைத்து தழைத்தது. கொடுமைகள் குற்றங்களும் றைந்து அமைதி நிலவியது. மக்கள் மகிழ்ச்சியாக வாழ்ந்தனர்.

---

- Rajayyan Dr K. - History of Madurai (19724) P.P. 210 : 211

அரசுக்கு சேரவேண்டிய நிலத்தீர்வையினால் அரசுக் கருவூலங்கள் நிறைந்தன. ஆற்காட்டு நவாப்பிற்கு, மதுரை திருநெல்வேலி சீமையில் இருந்து சேரவேண்டிய ஆண்டுக் குத்தகைப் பணம் ஐந்து லட்சமும் தவறாது போய்ச் சேர்ந்து கொண்டு இருந்தது. நவாப்பிற்கு ஒரே மகிழ்ச்சி. ஆனால் .... . ஆனால் ஒரு சந்தேகம்கூட. குடிமக்களது ஒத்துழைப்புடன் மிகவும் செல்வாக்காக விளங்கும் கான்சாயபு, தன்னாட்சி மன்னனாக மாறிவிட்டால்? கும்பெனியாரும் கான்சாகிபை சந்தேகக் கண்களுடன் கவனித்து வந்தனர். அதை உறுதிப்படுத்தும் சூழ்நிலை ஒன்றும் எழுந்தது.

கி.பி. 1762ம் ஆண்டு நவம்பர் மாதம் திருவாங்கூர் மன்னன் தர்மராஜா பாஞ்சாலங்குறிச்சி, எட்டையாபுரம் பாளையக்காரருடன். திருநெல்வேலிச் சீமையின் தெற்குப் பகுதியில் ஏர்வாடி, திருக்குறுங்குடி ஆகிய ஊர்களைக் கைப்பற்றினார். மேலும் அவரது ஆக்கிரமிப்பை ஆதரிக்கும் வகையில் வடகரை' சிவகிரி பாளையக்காரர்கள் செங்கோட்டையை கைப்பற்றினார். கொதித்து எழுந்த கம்மந்தான் சான்சாகிபு, திருநெல்வேலிக்கு விரைந்து சென்றார். அங்குள்ள மறவர்களைத் திரட்டி திருவாங்கூர் மன்னனது ஆக்கிரமிப்பு படைகளுடன் மோதினார். அவரே முன்னின்று நடத்திய போரில் செங்கோட்டையைக் கைப்பற்றிய ஆக்கிரமிப்பாளர்கள் புறமுதுகிட்டு ஓடினர். இன்னொரு பகுதியில், திருவாங்கூர் படை வலிமையுடன் போராடியது. தொடர்ந்து பத்துப் போர்களில் திருவாங்கூர் படைகளுடன் பொருதி பயங்கரமான இரத்தக்களரியை ஏற்படுத்தியும் கம்மந்தானுக்கு முழு வெற்றி கிட்டவில்லை. இரண்டு மாதங்களுக்குப் பிறகு, எஞ்சிய அனைத்து ஆதரவுகளையும் எதிர்ப்பு சக்திகளையும் திரட்டி இறுதிப்போரைத் துவக்கினார். கம்மந்தானது கடுமையான தாக்குதலைத் தாங்கஇயலாத ஆக்கிரமிப்பாளர்களும் கைக்கூலிகளும் நாஞ்சில் நாட்டுத் தென்கோடியில் உள்ள ஆரல்வாய்மொழி வழியாக திருவாங்கூர் நோக்கி ஓடினர். அவர்களைத் துரத்திச்சென்ற கான்சாயபு திருவாங்கூர் எல்லைக்குள் நுழைந்து நெய்யாத்திங் கரையைப் பிடித்ததுடன் தென்திருவாங்கூர் கிராமங்களைச் சூறையாடி தீயிட்

8. M.C.C. Vol. 10 14-11-1762 p. 314

டார். திருவாங்கூர் மன்னன் திகைத்துப்போய் கம்மந்தானிடம் சமாதானம் கோரி ஓடிவந்தான். அதே நேரத்தில் தம்மையும் தமது நாட்டையும் கம்மந்தான் ஆக்கிரமித்து அட்டுழியங் செய்வதாக ஆற்காட்டு நவாப்பிற்கு புகாரும் செய்தான்.[9] அத்துடன் கான்சாயபுவை ஒழித்துக்கட்ட அனைத்து உதவிகளை யும் ஆற்காட்டு நவாப்பிற்கு நல்குவதாகவும் உறுதியளித்தான்.[10] ஏற்கனவே கும்பெனி கவர்னர் உத்திரவிற்கு முரணாக, பேஷ்குஷ் தொகையை ஆற்காட்டு நவாப்பிற்கு அனுப்பி வைக்காத கான் சாயபு இப்பொழுது கும்பெனியாரையோ நவாப்பையோ கலந்து கொள்ளாமல் திருவாங்கூர் மன்னர் மீது உடனடியாகப் போர்தொடுத்தது அவர்களுக்கு மிகுந்த அச்சத்தை அளித்தது. நவாப்பின் சந்தேகத்தை உறுதிப்படுத்தியது. அவரது கற்பனை யில் கம்மந்தான் கான்சாயபு, ஆற்காட்டு நவாப்பிற்கும் கும்பெனி யாருக்கும் கட்டுப்படாத தன்னாட்சி மன்னராக காட்சியளித் தார். நவாப்பினது அரசியல் சலுகைகளை முழுமையாக நம்பி இருந்த கும்பெனித்தலைமை, நவாப்பிற்காக பரிந்து செயல் பட்டது. அவரை உடனே சென்னைக்கு அழைத்தது. அதுவரை கும்பெனியாரால் ஆதரிக்கப்பட்டு கும்பெனியரது அலுவலராக இருந்து வந்த நிலையில், புதிய எஜமானரான நவாப்பிற்கு கட்டுப்பட்டு அடிமைச்சேவகம் செய்ய அவர் தயாராக இல்லை. தம்மைப்புரிந்து கொள்ளாத கும்பெனி கவர்னரது ஆணையை ஏற்று சென்னை செல்லவும் அவர் விரும்பவில்லை. இந்த நிலையில் கும்பெனியார் மதுரை மீது படையெடுக்க துணிந்தனர் பனங்காட்டு நரி சலசலப்பிற்கு அஞ்சுவதில்லை அல்லவா?

களம் பல கண்ட கான்சாயபு கும்பெனியாரது முடிவிற்கு பயப் படவில்லை, கும்பெனியாருடன் பொருதுவதற்கான அனைத்து ஆயத்தங்களிலும் முனைந்தார். மைசூர் மன்னர் ஹைதர் அலியுடனும் பாண்டிச்சேரியில் உள்ள பிரஞ்சுக்காரர்களுடனும் தொடர்பு கொண்டார். மதுரைக் கோட்டைக்கு நுழைவாயி லாக உள்ள நத்தம் கணவாய் வழியைப் பலப்படுத்தினார். ஆனால், கும்பெனி படைகள் தொண்டமான் சீமை வழியாக மதுரைச்சீமைக்குள் நுழைந்து திருவாதவூர் திருமோகூர் ஆகிய

9. M. C. C. VOL 12 – 4. 2. 1763. p.p. 356:397
10. Military Despatches — VOL 3 p.p. 84.85

ஊர்களைபபிடித்து மதுரைக் கோட்டையை நெருங்கினர். திரு நெல்வேலி, தொண்டி, திருச்சி ஆகிய வழிகளில் மதுரைக்கு உதவி செய்யாமல் தடுத்தனர். மதுரைக் கோட்டையையும் முற்றுகையிட்டனர். தாக்கினர். கும்பெனியாருக்கு உதவிப்படைகள் விரைந்து வந்தன. தளபதிகள் மான்சன், பிரஸ்டன் ஆகியோர் எட்டு மாதங்கள் இடைவிடாது கான்சாயபுவின் மதுரை கோட்டையைத் தாக்கினர். மதுரைக் கோட்டைக்குள் நுழைவதற்கு படாத பாடு பட்டனர். முடியவில்லை.

கும்பெனித் தலைமை தளபதிகளை மாற்றியது. போருக்கான புதிய உத்திகளை வரைந்தது. மதுரை மீதான தாக்குதலை கடுமையாக்கியது. கான்சாகிபும் சிறிதும் களைப்படையாமல் பரங்கிகளை உக்கிரமாகத் தாக்கினார். பெருத்த உயிர்ச்சேதம் ஏற்பட்டது. பரங்கிகளுக்கு ஆனால் கான்சாகிபின் சீற்றம் தணியவில்லை. ஆற்காட்டுநவாப் வாலா ஜாமுகம்மது அலியும் பெரிய தளபதி வாரன்ஸ் களத்தில் இருந்து போர் நடவடிக்கைகளை முடுக்கிவிட்டனர். என்றாலும் மதுரைக் கோட்டையில் ஒருபிடி மண்ணைக்கூட அவர்களால் அள்ளிக் கொள்ள இயலவில்லை. தமிழக வரலாற்றில் பதினைந்து மாத முற்றுகைக்கு ஆளான கோட்டையும் கிடையாது. ஒரு கோட்டையைப் பிடிக்க இவ்வளவு நீண்ட நாட்கள் போராடி தோல்விகண்டதும் கும்பெனியாரின் வரலாற்றிலும் இல்லை. ஆனால் அவர்களது துரோகச் செயல்கள் என்றும் தோல்வி கண்டது கிடையாது. போர் நீடித்துக் கொண்டு இருந்ததால் பொறுமை இழந்த கான்சாயபுவின் சில தளபதிகளை மறைமுகமாகச் சந்தித்து ஆசை வார்த்தை கூறி அன்பளிப்புகள் கொடுத்தனர்.

1764ம் ஆண்டு அக்டோபர் மாதம் பதின்மூன்றாம் தேதி மாலை நேரத் தொழுகையில் ஈடுபட்டு இருந்தார் கான்சாகிபு. அவருடைய திவான் சீனிவாசராவும், தளபதி மார்சன்ட் என்ற பிரஞ்சுக்காரனும் சில கைக்கூலிகள் உதவியுடன் திடீரென கம்மந்தான் மீது விழுந்து அமுக்கிப் பிடித்து கயிற்றினால் பிணைத்தனர்,[11] "அரண்மனைப் பெண்கள் பயன்படுத்தும் மூடுபல்லக்

11. Caldwell Dr. – Political and General History of Trinelveli Dist. (1881) P.130.

கில் அவரை கடத்தி கோட்டைக்கு வெளியே எடுத்துச் செல்ல முயன்றனர். அப்பொழுது கம்மந்தானுடைய மெய்க்காவலராக இருந்த ''முதலி'' ஒருவர் இந்தச் சதிகாரர்களை தனது வாளால் சாடினார் அவரை துப்பாக்கியினால் ஒருவன் சுட்டுத் தள்ளினான். இன்னொருவன் அவரைவாளால் வெட்டிப்பிளந்தான். தமிழகத்தின் மிகச்சிறந்த வரலாற்று நாயகனைக் காப்பதற்கு முயன்ற அந்த வீரன், தியாகியானான்.[12] துரோகிகளது திட்டத்திற்கு வேறு எதிர்ப்பு இல்லை. கயிற்றால் பிணைக்கப்பட்டு கிடந்த கான்சாயபுவை வைகை ஆற்றின் வடகரையில் பாசறை அமைத்து இருந்த கும்பெனியாரிடம் ஒப்படைத்தனர், அந்தக் கழிசடைகள். மகத்தான வீரத்தை மனிதாபிமானமற்ற துரோகம் வென்றது. பதினைந்து மாத போரினால் பிடிக்க முடியாத ''அந்த எதிரி''யைக் கண்ட பரங்கிகளுக்கு ஒருபுறம் ஆச்சரியம். இன்னொருபுறம் ஆனந்தம். அந்த துரோக கும்பலிடம் அவர் எதுவும் பேசவில்லை. அவர்கள் வழங்கிய உணவையும் தொடவில்லை. கூண்டில் அடைக்கப்பட்ட வரிப்புலிபோல வெஞ்சினத்தால் அவர் துடித்துக் கொண்டு இருந்தார்.

போர்க் கைதியாகிவிட்டதற்காக அவரது உள்ளம் பொருமியது. வாழ்க்கையின் பெரும் பகுதியை விசுவாசமில்லாத பரங்கிகளது பணியில் கழித்துவிட்டதற்காக அவரது உள்ளம் நைந்தது. அவர்களைப் பழிவாங்க வாய்ப்பு இத்தகைய வேதனை விரவிய இரண்டு நாட்கள் கழித்த பிறகு, நவாப்பும் கும்பெனியாரும் ஒரு முடிவிற்கு வந்தனர். கான்சாகிபு உயிரோடு இருக்கும் வரை அவர்களுக்கு நிம்மதி இருக்காது என்பது தான். ஆதலால் அவரை மதுரைக்கோட்டையின் மேற்கு வாசலுக்கு அண்மையில் தூக்கிலிட்டுக் கொன்றனர். தமிழக வரலாற்றின் சிறப்புமிக்க வரலாற்றுப் பகுதி இவ்விதம் விரைவான முடிவிற்கு கொண்டு வரப்பட்டது.

தமிழக இசுலாமியரது தன்னேரில்லாத நாட்டுப்பற்று, மான உணர்வு, போர் ஆற்றல், மனித நேய நடவடிக்கைகள் இவைகள் அனைத்தும் பொதிந்து வீரவடிவாக விளங்குகிறது. கம்மந்தானின் தியாக வரலாறு, அவரது போர்ப் பண்புகளை

---

12. Hill. S. C. - Yousceffkhan, Rebell Commendent p. 2.20 (1940)

அவரது நாட்டுப்பணி ஆட்சியின் மாட்சியை அனைத்து வரலாற்று ஆசிரியர்களும் பாராட்டி உள்ளனர். ஜேம்ஸ்மில் கர்னல் புல்லாட்டன், கலெக்டர் லூஷிங்க்டன், டாக்டர் கால்டு வெல், டாக்டர் ராஜையன் ஆகியோர் கான்சாயபுவிற்கு சூட்டியுள்ள புகழாரங்கள் வரலாற்றில் பொன்னேடாக பொலிவுடன் விளங்கி கொண்டு இருக்கின்றன. அனாதையாக வளர்ந்து, மாவீரனாக உயர்ந்து, மனிதனாக வாழ்ந்து, தியாகியாக மடிந்த அவரது அற்புத வாழ்க்கை நயவஞ்சகர்களை எதிர்க்க வேண்டும், நாட்டிற்கு உழைக்கவேண்டும், நல்ல இசுலாமியராக வாழ வேண்டும், என்ற நியதிகளை நமக்கு என்றென்றும் நினைவுறுத்திக்கொண்டு இருக்கிறது.

தமிழகத்தில் மான உணர்வும், மறப்பண்புகளும் விடுதலை வேட்கையும், அலைகடல் போல என்றென்றும் ஆர்ப்பரித்துக் கொண்டிருக்கும் வரை, முகம்மது யூசுப்கானின் புனித நினைவும் பூவைப் பிணைத்த மணம் போல நமது சிந்தனையில் வட்டமிட்டுக்கொண்டே இருக்கும்.!

---

13. Ibid p. 225

# 18

## தமிழகம் வந்த அரபி பயணிகள்

தமிழகத்திற்கும் அரபு நாடுகளுக்கும் இடையில் கடந்த இருபது நூற்றாண்டுகளுக்கு மேலாக வணிகத் தொடர்புகள் இருந்து வந்தன. ஆதலால் வணிகர்களைத் தொடர்ந்து, இஸ்லாம் தோன்றிய ஏழாம் நூற்றாண்டு முதல் இசுலாமிய சமயச் சான்றோர்களும் தொண்டர்களும் தமிழகம் வந்தனர். அத்துடன் உலகியலை உணரவேண்டும் என்ற எண்ணத்தால் உந்தப்பட்ட பயணிகளும் வந்தனர். ஆங்காங்கு அவர்கள் சென்று, கண்டு கேட்டு வரைந்து, வைத்த பயணிக்குறிப்புகள், வரலாற்றின் சிறப்பு மிக்க ஏடுகளாக விளங்குகின்றன. தமிழ கத்து அரசுகள், ஊர்கள், வாணிப்ப் பொருட்கள், மக்களது மரபு கள், பண்பாடுகள் ஆகியவற்றைத் தெரிந்து கொள்ள அவை உதவுகின்றன.

இந்த ஆவணங்களை வரைந்துள்ளவர்களில் நால்வர் பாரசீகர்கள். நால்வர், பாக்தாதைச் சேர்ந்தவர்கள். இன்னும் நால்வர் ஸ்பெயின் நாட்டைச் சேர்ந்தவர்கள். அவர்களில் இபுனு குர்த்தாபே (கி.பி.844–48) இபுனு குஸ்தா (கி.பி.903) இபுனு பக்சி (கி.பி.902) அபூசெய்து (கி.பி.950) மசூதி (கி.பி.943–55) யாக்கத் (கி.பி.1179) வஸ்ஸாப், ரஷிமுத்தீன், திமிஸ்கி (கி.பி.1325) இபுனு பத்தூதா (கி.பி.1355) ஆகியோரது குறிப்புகளில் தமிழ்நாட்டைப் பற்றிய செய்திகள் ஓரளவு காணப்படுகின்றன. கடைசியாகக் குறிப்பிடப்பட்டுள்ள நான்கு பயணிகளது குறிப்புகள் தமிழகத் தைப் பற்றிக் கூடுதலான செய்திகளை வழங்குகின்றன.[1]

---

1. Mohamed Hussain Nainar. Dr -Arab Geogrephers Knowledge of S. India (1942) P. 19, 20

இபுனுருஸ்தா, பாண்டிய மன்னனை அபிதி, அல்–காய
என்றும் சேரமன்னனை அரிதி, பரிதி என்றும், இபுனு
குர்த்தாபே சோழனை செயில்மான் என்றும் குறித்துள்ளனர்.
அவரது குறிப்புகளில் இருந்து மதுரைப்பாண்டியன் அப்பொழு
மிகுந்த வலிமையுடன் விளங்கியதாகத் தெரிகிறது. அவனிட
எழுபதினாயிரம் போர்மறவர்கள் இருந்தனர். ஆனால் பொது
வாக பாண்டியனைவிட சோழன் போர்த்திறன் படைத்தவனா
மதிக்கப்பட்டான்.[3] மேலும், பாண்டியனிடத்தில் யானைக
இல்லாததால் ஐந்து குயூபிக் அடி உயரத்திற்கு அதிகமான
யானைகளை ஆயிரம் தினாரா வீதம் விலை கொடுத்து வாங்கி
தாகவும் அவர் குறிப்பிட்டுள்ளார்.[4] அப்பொழுது தமிழ்நாட்
மக்கள் மந்திரசாலங்களில் நம்பிக்கை வைத்து இருந்தன
என்றும் மனோவசிய சக்தியினால் மற்றவர்களைக் கட்டுப்படு
தும்ஆற்றலுடன், மழை, குளிர் ஆகிய இயற்கை நிகழ்வுகளையு
தடைபடுத்த இயலும் என அவர்கள் எண்ணியதாக குர்த்தாபே
வரைந்துள்ளார்.[5]

மற்றொரு பயணியான மசூதிபாண்டிய மன்னனை அல்-
காய்தி எனக் குறிப்பிட்டு இருப்பதுடன், அவனது கோநரான
மதுரையை மந்தர்பின் எனவும் குறிப்பிட்டுள்ளார்.[6] மதுரைக்
கும் கொல்லத்திற்கும் இடையில் சூடன் மரங்கள் மிகுந்து காணப்
படுவதாகவும் வரைந்துள்ளார்.[7] இவர் கன்னியாகுமரியைப்
பற்றித் தெளிவான குறிப்புக்களைக் கொடுத்துள்ளார். அந்தப்
பகுதி, இலங்கைக்கு (செரந்தீவு) எதிர்க்கரையில் அமைந்து இருப்
பதாகவும், ஆதி பிதாவான ஆதம் (அலைஹிவசல்லம்) அவர்
களுடைய மகன் காய்ன் வழிவந்த மக்கள் அந்தப்பகுதியில்
உள்ளவர்கள் என்றும், பற்களைத் துலக்க அவர்கள் மரக்குச்சி

---

2. Ibid p. 144, 153
3. Ibid p. 168
4. Md. Hussain Nainar–Arab Geogrephers Knowledge of S. India (1942
5. Ibid - p. 121, 134
6. Ibid – p. 173
7. Ibid - p. 173

களைப் பயன்படுத்தியதாகவும் வரைந்துள்ளார். பெரும்பாலும் மலைகள் நிறைந்து இருப்பதால் மக்கள் கால்நடையாகவே சென்றனர் என்ற குறிப்பும் காணப்படுகிறது.[8] பாண்டியனது பட்டத்து யானையைப் பற்றி அவர் குறிப்பிடும்பொழுது அந்த யானை மிகப் பெரியதாகவும் வெள்ளை நிறமாகவும் இடை இடையே கறுப்பு புள்ளிகளுடனும் காணப்பட்டதாகவும் அதன் பெயர் "நம்ரான்" எனவும் வரைந்துள்ளார்.[9] நம்பிரான் என்ற பெயர் அந்த யானைக்கு சூட்டப்பட்டு இருக்கலாம்.

இன்னொரு பயணியான இபுனுல் பக்கி, கன்னியாகுமரி ஆலயத்தில் விக்கிரக வழிபாடு நடைபெற்று வந்ததையும் வரைந்து இருக்கிறார்.[10] அவரை அடுத்து, கன்னியாகுமரி பகுதிக்கு வருகை தந்த இபுனுருஸ்தா என்பவர், அங்கிருந்த அரசன், மிகவும் நேர்மையானவன் என்றும், குடி விபச்சாரம் போன்ற பழிச் செயல்களுக்கு மரண தண்டனை வழங்கி வந்தான் என்றும், குற்றங்களை ஆய்வு செய்து தண்டனை வழங்க எண்பது நீதிவான்கள் அவனது பணியில் இருந்தனர். என்றும் குற்றம் சாட்டப்பட்டவர் மன்னரது மகனாக இருந்தாலும் நீதிவான்கள் முன்னர் குற்றவாளிக் கூண்டில் நின்று பதில் சொல்ல வேண்டிய முறை இருந்தது என்றும் அவரது குறிப்புகள் தெரிவிக்கின்றன.[11] மேலும், பாண்டிய மன்னனுக்கு யானைகளை வாங்கும் பொழுது, காடுகளில் பெருந்தீயினூடே அச்சமின்றி ஓடும் யானைகள் தான் போர்களுக்குப் பொருத்தமானது என தேர்வு செய்யப்பட்டனவென்றும் வரைந்துள்ளார்.[12]

இவரையடுத்து, தமிழகம் வந்த அல்பரூனி இந்தியாவின் பல பகுதிகளையும் குறிப்பிட்டு வரையும்பொழுது இராமேசுவரம் சேது அணை, சிரந்தீவுக்கு (இலங்கை) எதிர்க்கரையில் இருப்பதாக வரைந்துள்ளார்.[13] இவர்கள் அனைவரையும் விட

---

8. Ibid - p. 176
9. Ibid p. 159
10. Ibid p. 17S
11. Ibid p. 109
12. Ibid p. 169
13. Nilakanta Sastri - Foreign Notices of S. India (1972) p. 132.

திமிஸ்கி என்ற பயணிதான் அப்பொழுது அரபி பயணிகள் பயன்படுத்தி வந்த மேற்குக்கரையின் கொல்லத்தில் இருந்து, கிழக்குக்கரையில் உள்ள முத்துப்பள்ளி(ஆந்திர நாட்டுக் கரையில் உள்ளது) வரையான கடற்கரை பட்டினங்கள் பற்றிய விவரங் களைத் தெளிவாகத் வரைந்துள்ளார். அவரது குறிப்புகளில் அதிரை (அதிராம்பட்டினம்) அபத்து எனக் குறிப்பிடப்பட் டுள்ளது. அதிவீரராம பாண்டியன் (கி.பி. 1502–97) என்ற பிற் கால பாண்டியன் நினைவாக எழுந்த ஊர் இது என தஞ்சாவூர் கெஜட்டியர் குறிப்பிடுகிறது. ஆனால் இந்த பாண்டியனுக்கு இருநூறு ஆண்டுகளுக்கு முன்னர் இந்த கடல்துறை இருந்து வந்தது திமிஸ்கியின் குறிப்புகளில் இருந்து தெரிகிறது. மேலும், அவர், திண்டா (தொண்டி) தக்தான் (தேவிபட்டினம்) பத்தன் (பெரியபட்டினம்) காயின் (கானப்பேர்) என்ற காளையார் கோவில் ஆகிய ஊர்கள் மாபாரின் சிறந்த பட்டணங்கள் என குறித்துள்ளார். இன்னும் அவர் குறிப்பிட்டுள்ள பல ஊர்களை, இன்று இனங்கண்டு கொள்ள முடியவில்லை.

அடுத்து, உலகப்பயணியான இபுன் பதூதா, இலங்கையில் இருந்து மாலத்தீவுகளுக்கு பயணம் செல்லும் வழியில் கடல் கொந்தளிப்பினால் அவரது கப்பல் கிழக்கு கரையில் ஒதுக்கப் பட்டு கி.பி. 1355ல் கரையேறினார். பாண்டியநாட்டை நேரிற் காணும் வாய்ப்பு அவருக்கு இவ்விதம் தற்செயலாக ஏற்பட்டது. அப்பொழுது, மதுரையில் ஆட்சி செய்த சுல்தான் கியாஸுதீன் தமகானி, தகவல் அறிந்து இபுனு பதூதாவை அரசு மரியாதை யுடன் மதுரைக்கு அழைத்துக் கொண்டார். கப்பல் வசதி பெற்று அவர் பயணத்தை தொடர்வதற்கு பருவக்காற்று சாதக மாக இல்லாததால் இடைப்பட்ட மூன்று மாத காலத்தில் அவர் மதுரையிலும், பத்தனிலும்(பெரியபட்டினத்தில்)தங்கினார். அப் பொழுது அவர் வரைந்துள்ள விவரமான குறிப்புகள் தமிழக வரலாற்றிற்கு பயனூட்டுவதாக உள்ளன. அவைகளில் ஒரு பகுதி கீழே கொடுக்கப்பட்டுள்ளது.[14]

பத்தனுக்குச் சென்றதைப் பற்றி அவர் வரைந்திருப்பது...... ''அந்த முகாமை விட்டு பத்தன் நகருக்குப் போய்ச் சேர்ந்தேன்'

---

14. Neelakanta Sastri Foreign Notices of S, India (1972) p. 278

அது கடற்கரையில் உள்ள பெரிய அழகிய நகரம். சிறப்பாக குறிப்பிடத்தக்க கப்பல் துறையும் அங்கு இருந்தது. உறுதியான தூண்களைக் கொண்டு மரத்தாலான பெரிய தளம் ஒன்று அங்கு அமைக்கப்பட்டு இருந்தது. அதனை அடைவதற்கான வழியும். மூடுபாதையும் முழுவதும் மரத்தினால் அமைக்கப்பட்டுஇருந்தது. எதிரிகளது தாக்குதல் ஏற்பட்டால் துறைமுகத்தில் உள்ள கப்பல் கள் அனைத்தும் இந்தத் தளத்துடன் பிணைக்கப்பட்டுவிடும். வீரர்களும் வில்லாளிகளும் இந்தத் தளத்திற்கு சென்று விடுவார் கள். இதனால் எதிரிகள் இவர்களைத் தாக்கி காயங்கள் ஏற்படுத் தக்கூடிய வாய்ப்பு இல்லாமல் போய்விடும் .... ... .... இந்த நகரில் ஒரு அழகிய தொழுகைப் பள்ளி இருக்கிறது. கல்லினால் அமைக் கப்பட்டது. கொடிமுந்திரியும் மாதுளையும் ஏராளமான அளவில் கிடைக்கின்றன. இறைநேசர் ஷேக் முகம்மது அல் கிபுறியை அங்கே சந்தித்தேன். தோளில் சரிந்து படியும் அளவு நீண்ட தலைமுடியினையுடைய பக்கீர் ஒருவரும் அவருடன் இருந்தார். அவர் வெளியுணர்வு இல்லாத தியான நிலையில் இருந்தார் சிங்கம் ஒன்றை வளர்த்து பழக்கப்படுத்தி வைத்து இருந்தார். அதுவும் பக்கீருடன் அமர்ந்து உண்டது. முப்பதுக்கும் அதிகமான பக்கீர்கள் அந்தஇறைநேசருடன் இருந்தனர். அவ்ர்களில் ஒருவர் புள்ளிமான் ஒன்றை வைத்து இருந்தார். அதுவும் அங்கேயே இருந்தது. அந்தச் சிங்கத்தின் குருளையினால் புள்ளிமானுக்கு எந்த தொந்தரவும் இல்லை. நானும் அந்தப் பட்டணத்தில் தங்கினேன்.

''இதற்கிடையில் யோகி ஒருவர், சுல்தானது வீரியத்தை அதிகரிக்க மாத்திரைகள் தயாரித்தார். அதில் இரும்பு தாதுக் கள் அதிகமாகச் சேர்க்கப் பட்டிருந்ததாகச் சொல்லப்பட்டது. சுல்தான் கூடுதல் அளவில் அவைகளை உட்கொண்டதால் அவ ருக்கு உடல் நலிவு ஏற்பட்டது. அந்த நிலையில் அவர் பட்டி னத்தை அடைந்தார். நான் அவரைச் சந்தித்தேன். அவருக்கு எனது அன்பளிப்பையும் கொடுத்தேன். அங்கு தங்கி இருந்த பொழுது, அவர் கடற்படை தளபதி குவாஜா கருணை வர வழைத்து ''மாலத்தீவு பயணத்திற்கான கப்பல்களை ஆயத்தப் படுத்துங்கள், கூடுதலாக ஒன்றும் வேண்டாம்'' என உத்திரவிட் டார். நான் வழங்கிய அன்பளிப்பிற்கான பெறுமானத்தை வேறு அன்பளிப்பாகக் கொடுக்க முனைந்தார், நான் மறுத்துவிட்டேன் ... ... .... சுல்தான் பட்டினத்தில் பதினைந்து நாட்கள் தங்கி

இருந்தார். பிறகு தலைநகருக்குப் புறப்பட்டார். ''அவர் புறப்பட்டுச் சென்ற பிறகு பதினைந்து நாட்கள் நான் பட்டினத்தில் தங்கி விட்டு விசாலமான வீதிகளையுடைய பெரிய நகரமான மதுரைக்குப் புறப்பட்டேன்'' அந்த நகரை தனது கோ நகராகச் செய்தவர் எனது மாமனார்–சுல்தான் ஷரிபு ஜலாலுத்தீன் அஸன்ஷா, தில்லியைப் போன்று தோற்றம் தரும்படி அதனை அக்கறையுடன் அவர் நிர்மாணித்தார். ''தான் மதுரையை அடைந்தபொழுது, அங்கு ஒரு கொள்ளை நோய் பரவி இருந்ததைப் பார்த்தேன். பாதிக்கப்பட்ட மக்கள் விரைவாக மடிந்தனர். அந்த நோயினால் தாக்கப்பட்டவர் இரண்டு அல்லது மூன்றாவது நாளில் இறப்பு எய்தினர். எங்கும் நோயாளிகளையும் இறந்தவர்களையும் கண்டேன். இளைய அடிமைப் பெண்ணொருத்தியை விலைக்கு வாங்கினேன். உடல் நலிவு இல்லாதவள் என எனக்கு உறுதி கூறப்பட்டது. ஆனால் அடுத்த நாளில் அவள் இறந்து விட்டாள். சுல்தான் அஸன்ஷா விடம் அமைச்சராகப் பணியாற்றிய நடுவரின்மனைவி என்னைச் சந்திக்க ஒரு நாள் வந்தாள். அவளுடன் எட்டு வயது நிரம்பிய சிறுவன் ஒருவனும் வந்திருந்தான், அறிவும் ஆற்றலும் மிக்கவனாக இருந்தான். தனது வறுமை நிலையைப்பற்றிச் அவள் சொன்னாள். அவருக்கும் அந்தச் சிறுவனுக்கும் கொஞ்சம் பணம் கொடுத்து அனுப்பிவைத்தேன் அவர்கள் இருவரும் உடல் நலம் மிக்கவர்களாக காணப் பட்டனர். ஆனால் அடுத்த நாள், அந்த தாய் என்னிடம் வந்தாள். தனது மகள் திடீரென இறந்து விட்டதாகவும், அவனது அடக்கத்திற்குரிய துணிவேண்டும் (கபன்) எனக்கோரினாள். .... சுல்தான் மரணமடையும் பொழுது அவரது அத்தானி மண்டபத்திற்குச் சென்று இருந்தேன். நூற்றுக்கணக்கான பெண் பணியாளர்கள் நெல் குத்துவதற்காகவும் சமையல் பணிக்கெனவும் அழைத்து வரப்பட்டனர். அவர்களும் கொள்ளை நோயினால் பாதிக்கப்பட்டு ஆங்காங்கு தரையில் வீழ்ந்து மடிந்தனர்.

''சுல்தான் கியாஸுத்தீன் மதுரைக்கு திரும்பியபொழுது, அவரது தாய், மனைவி, மகள் ஆகியோர் நோயினால் பாதிக்கப்பட்டிருந்தனர். அங்கு அவர் மூன்று நாட்கள் தங்கி இருந்தார். பிறகு அவர் ஒரு மைல் தொலைவில் உள்ள ஆற்றுக்குச்

சென்றார். ஆற்றங்கரையில் கோயில் ஒன்று இருந்தது. அவரை வியாழக்கிழமையன்று சந்தித்தேன். அரசாங்க காஜியாருடன் என்னை அங்கு தங்கி இருக்குமாறு செய்தார். கூடாரங்கள் அமைக்கப்பட்ட பொழுது மக்கள் விழுந்தடித்து நெருக்கி ஓடி வந்ததைப் பார்த்தேன். அவர்களில் ஒருவன் சுல்தான் இறந்து விட்டார் என்று சொன்னான். இன்னொருவன் அவரது மகன் இறந்துவிட்டார் என உறுதி கூறினான். விசாரணையின் பொழுது சுல்தானின் இளவல் இறந்தது தெரியவந்தது. சுல்தானுக்கு வேறு மகன் இல்லை. அவருடைய நோயை இந்த இழப்பு மிகுதிப்படுத்தியது. அடுத்த வியாழக்கிழமை அவரது தாயார் இறந்தார். மூன்றாவது வியாழக்கிழமை சுல்தானும் இறந்து விட்டார். .... .... ...[15]

அடுத்து, பட்டமேறிய சுல்தான் நசிருத்தீன் பற்றி, இபுன் பதூதா,[16]

"... .... .... நாஸிருத்தீன், இறந்து போன சுல்தானின் ஒன்று விட்ட சகோதரர். தில்லியில் அலுவலராக இருந்தவர். கியாசுதீன், சுல்தான் ஆனவுடன் நாஸிருத்தீன் பயந்து பிச்சைக்கார வேடத்தில் ஓடிப்போனார். ஆனால் அவரது ஒன்றுவிட்ட சகோதரருக்கு பின்னர், அவர் ஆட்சியை மேற்கொள்ள வேண்டும் என்பது விதியின் விளையாட்டு. நாஸிருத்தீன் அரியணையேறியவுடன் அவர்கள் விசுவாசப் பிரமாணம் செய்தனர். கவிகள் புகழ் மாலைகளைச் சூட்டினர். அவர்களுக்கு சிறந்த பரிசில்களை அவர் வழங்கினார். முதலில் எழுந்து அவருக்கு வாழ்த்துக் கூறியவர் காஜிஸத்ருஸ்ஜமான். அவருக்கு வாழ்த்துக்கு ஐநூறு பொற்காசுகளையும், சீருடைகளையும் சுல்தான் வழங்கினார். அடுத்து வந்தவர், நீதவான் வஜீர்-அல்-காஜி, அவருக்கு சுல்தான் இரண்டாயிரம் வெள்ளிக்காசுகளை வழங்கினார். எனக்கு முன்னூறு பொற்காசுகளையும், சீருடையையும் கொடுத்தார். பக்கிரிகளுக்கும் ஏழைகளுக்கும் தானம் வழங்கினார். முதன்முறையாக, போதகர் ஒருவர் புதிய ஆட்சியாளரின் பெயரை இணைத்து முதல் பிரசங்கம் செய்தவுடன், பொன், வெள்ளி தட்டில்களிலி

---

15. Ibid p. 252
16. Ibid p. 282, 283

ருந்து தினாரையும், திரம்மாவையும் அவர்மீது சொரிந்தனர். சுல்தான் கியாஸ்தீனது நல்லடக்கம் ஆடம்பரமாக நடத்தப் பட்டது. அவரது புதை குழியருகே நாள்தோறும் திருமறை ஓதப்பட்டது. திருமறையின் பத்தாவது பகுதியை ஓதி முடித்த பின்னர், குழுவில் இருந்த அனைவருக்கும் உணவு வழங்கப்பட் டது. மக்கள் வயிறார உண்டனர். வந்து இருந்தவர்கள் தகுதிக்கு தக்கவாறு வெண் பொற்காசுகள் அன்பளிப்பாக வழங்கப்பட் டன. நாற்பது நாட்கள் இவ்விதம் தொடர்ந்து நடைபெற்றன. இனி ஒவ்வோர் ஆண்டும் இதே மாதிரியான தருமம் மேற் கொள்ளப்படும்.... ... ...''

மற்றுமொரு பயணியான வஸ்ஸாப், தமிழ்நாட்டு வணிகம் பற்றிய குறிப்புகளில்.[17] '' ............... ஹிஜ்ரி ஆண்டு 692ல் மாபா ரின் மன்னர் தேவர் இறந்து போனார். ஏராளமான செல்வங் களையும் அவர் விட்டுச் சென்று இருந்தார். ஏழாயிரம் பொதி மாடுகளில் ஏற்றபட்ட நவமணிகள், பொன், வெள்ளி ஆகியவை அவரையடுத்து பட்டமேறிய அவரது சகோதரர் பங்கிற்கு ஒதுக்கப்பட்டது. மாலிக் ஆஜம் தக்கியுத்தீன் முதன் மந்திரி யாக தொடர்ந்து பணியாற்றினார். இன்னும் சொல்லப் போனால் ஆட்சியாளரான அவரது பெயரும் புகழும் ஆயிரம் மடங்கு உயர்ந்தன.

''வணிகம் மூலமாக ஏற்கனவே பெற்றிருந்த செல்வ வள துடன், சீனத்தில்இருந்தும் இந்தியாவில் இதரப்பகுதிகளில்இருந் தும் மாபாருக்குள் எத்தகைய சாமான்கள், பொருட்கள், இறக் குமதி செய்யப்படவேண்டும் என்பதற்கு அவர் கட்டளையிட் டார். அவரது முகவர்களும் பணியாளர்களும் முதன் முதலில் தேர்வு செய்யும் வரை ஏனையவர்கள் அந்தப் பொருட்களை வாங்குவதற்கு அனுமதிக்கப்படமாட்டார்கள்.அவருக்குத்தேவை யான பொருட்கள் தேர்வு செய்யப்பட்டவுடன், அவைகளை அவருடைய கப்பல்களில் அல்லது மற்ற வியாபாரிகள் கப்பல்க ளில் அவரது சொந்தத் தீவிற்கு அனுப்பப்பட்டன. மாலிக் குல் இஸ்லாமின் தேவைப்பொருட்கள் தேர்வு செய்யப்பட்டு பெற்றுக் கொள்ளப்படும் வரை. ஏனைய வணிகர்கள் பேரம் செய்வதற்கு அனுமதிக்கப்படுவதில்லை. எஞ்சியவை கீழை,

---

17. Ibid p. 165

மேலை நாடுகளுக்கு அனுப்பப்பட்டன. இத்தகைய விற்பனை மூலம் கிடைக்கும் பணத்தின் மூலம் உள்நாட்டு சந்தைக்குரிய பொருட்கள் வாங்கப்பட்டன. கீழைக்கோடியில் உள்ள சீன நாட்டில் உற்பத்தியான பொருள், மேலை நாட்டில் பரவத்தக்க வகையில் வியாபாரம் நடைபெற்றது. இதற்கு முன்னர் இந்த உலகம் இத்தகைய வியாபாரத்தைக் கண்டதில்லை..... மாலிக் இ–ஆஜம் தக்கியுத்தீன். மாலிக்குல் இசுலாம் ஜமாலுத்தீன் ஆகிய இரு நிபுணர்களது உயர்வும், சிறுப்பும் மாபாரைவிட இந்தியாவின் இதரபகுதிகளில், பெரும்அளவில் மதிக்கப்பட்டது. தொலை தூரத்து மன்னர்கள் அவர்களுடன் தொடர்பு கொண்டு தோழமையுடன் பழகி வந்தனர். அவர்களது எதிர்பார்ப்புகளையும்ஆசைகளையும் வெளியிட்டு, அடிக்கடி மடல்கள் அனுப்பி வந்தனர்.''

இவ்விதம் அரபுப்பயணிகள், கண்டதையும் கேட்டதையும் அவர்களது பயணக் குறிப்புகளில் பதிவு செய்து வைத்துள்ளனர். மேலும் கிராமங்களில், உண்மையை பெறுவதற்கு காய்ச்சிய எண்ணையில் கையை நனைக்கச் செய்தல், காய்ச்சிய இரும்புக்கம்பியை கையில் தூக்கிக் கொண்டு நடத்தல் ஆகிய மூட நம்பிக்கைகள் முந்தைச் சமுதாயத்திலும் இருந்ததை சுலைமான், இபுனுபதூதா ஆகியோரின் குறிப்புகள் தெரிவிக்கின்றன.[18] தாடி, மீசை வைத்துக் கொள்ளுதல், காதுகளைத் துளையிட்டு கடுக்கன் அணிந்து கொள்ளுதல், பொன்னாலான கம்பிகளை, வளையல்களை அணிதல், போன்ற பழக்க வழக்கங்களை இபுனு பதூதா குறிப்பிட்டுள்ளார். அன்றைய தமிழகத்தில் பேணப்பட்டு வந்த இந்தப் பழக்க வழக்கங்கள், மரபுகள் ஆகியவைகளைத் தெரிந்து கொள்வதற்கும், இஸ்லாம் என்ற புத்தொளி தமிழ்ச் சமுதாயத்தில் புகுந்து ஊடுருவிய நிலைகளைப் புரிந்து கொள்வதற்கும் அரபு நாட்டு பயணக் குறிப்புகள் பயன்படுகின்றன.

---

18. Ibid

# 19

## சமுதாயப் பிரதிபலிப்புகள்

தமிழகத்தின் வாணிபச் சிறப்பிற்கு உதவிய அராபிய இஸ்லாமியர்களது செல்வாக்கு, தமிழகத்தின் அரசியல் சமுதாய நிலைகளில் பிரகாசித்தன. நல்லவிதமான வாணிபத்திற்கு நானயத்துடன் நாணயமும் தேவை. கடைச் சங்க இலக்கியங் களில், நாணயங்களைப் பற்றிய குறிப்புகள் இல்லை. பண்ட மாற்று முறை அப்பொழுது இருந்ததை "பகர் விரவு நெல்லின் பலவரி யன்ன ... ...." என்ற மலைபடுகடாம் தொடர் சான்று பகருகிறது. அன்றைய பாணர்களுக்கு, வேந்தர்களும் வள்ளல் களும் அன்பளிப்பாக பூவுடன் பொன்னும் பொற்றாமரையும் வழங்கி மகிழ்ந்த செய்திகளை பதிற்றுப் பத்தும் புறநானூறும் பொலிவுடன் முழங்குகின்றன. காலப் போக்கில் யவனர்களது தொடர்பு ஏற்பட்டவுடன், பண்டமாற்றுப் பொருளாக அவர் கள் வழங்கிய பொன், வெள்ளி, நாணயங்கள் தமிழ்நாட்டில் செலாவணியாக பயன்படுத்தப்பட்டன. கிரேக்க, லத்தீன் மொழிகளில் தங்க நாணயம் "தினேரியஸ்" எனவும், வெள்ளி நாணயம் "திரம்மா" எனவும் பெயர் பெறும். இந்த நாணயங்களில் தங்க நாணயம் நான்கு கிராம் எடையுடைது பத்து திரம்மா, ஒரு தினேரியஸுக்கு சமமானது. அதனைப் போன்று திரஹம் பிரஞ்சு நாட்டு ஒரு பிராங் அல்லது அமெரிக்க நாட்டு பத்தொன்பது "சென்டி"ற்கு சமமான மதிப்பு டையதாக இருந்தது. தமிழகத்து நாணயச் செலாவணிக்கு பயன்படுத்தப் பட்ட முதல் நாணயங்கள் அவைகளே. கிறித்து விற்குப்பின்னர் மூன்றாவது நூற்றாண்டு வரை அவைகள் தமிழக நாணயங்களாகப் பயன்படுத்தப் பட்டன என்பதும் அதுவரை தமிழகத்தில் நாணயங்கள் அச்சிடப் படவில்லை

அல்லது உலோக வார்ப்புகளாக உருப்பெறவில்லை என்பதும், தெளிவு. பிற்காலத்தில்தான் பல்லவர்களும் பாண்டியர்களும், சோழர்களும் தங்களது ஆட்சிக் காலங்களில் பலவிதமான நாணயங்களை வெளியிட்டனர்.

அவையனைத்தும் காசு என்றே வரிசைப்படுத்தப்பட்டன. பொன்னாலான காசு, மாடை, பணம், கட்டி என வழங்கப்பட்டது. "வாசி, தீரவே காசு தாரீர்" என்பது ஏழாம் நூற்றாண்டு சம்பந்தரது தேவாரம். அவைகளை அடுத்து வெளியிடப்பட்ட செப்பு பணமும் காசு என்றே வழங்கப்பட்டது. இந்தச் சொல் பிற்காலத்தில் கயிக்சா (caisa) என போர்த்துகேசிய மொழியிலும் காசு (cashit) இணைத்துக் கொண்டதும் ஆகும்.

கி.பி.பதினான்காம் நூற்றாண்டு தொடக்கம் வரை, தமிழ் நாட்டுச் செலாவணியாக அரபிகளது தங்க நாணயமான தினாரு வெள்ளி நாணயமான திர்கமும், தமிழ் மக்கள் கைகளில் தவழ்ந்ததை பல கல்வெட்டுகளில் இருந்து தெரிய வருகிறது. மதுரை, தஞ்சை, திருப்பத்தூர், அருப்புக்கோட்டை திருத்துறைப்பூண்டி குடுமியான்மலை. திருப்பராய்த்துறை, திருவடந்தை ஆகியஊர்க் கோயில் கல்வெட்டுக்களில் தினார், திஞரா எனவும், திர்கம் திரம்ம எனவும், பொறிக்கப்பட்டுள்ளன. இங்ஙனம் ராஜராஜன் விக்கிரம சோழன், குலோத்துங்க சோழன் ஆட்சியிலும், பராந்தகன் நெடுஞ்சடையன் ஸ்ரீவல்லபன், வீரபாண்டியன், மாறவர்மன் சடையவர்மன், சுந்தரபாண்டியன் ஆட்சிக்காலங்களிலும் அரபிகள் தமிழ் முஸ்லீம்களாக இருந்தது போன்று அவர்களது நாணயங்களான திஞரும் திர்கமும், தமிழக நாணயங்களாக செலாவணியில் இருந்து வந்துள்ளன.

திருரா என்பது பொற்காசு, எழுபத்து ஒன்றரை பார்லி தானிய மணிகளுக்குரிய நிறை உடையதென்றும், கோதுமை தானிய மணிகள் அறுபத்து எட்டுக்குச் சமமானது என்றும், மித்கல் என்றும் அரபி மொழி நிறுத்தல் அளவையாக குறிக்கப்பெற்றுள்ளது. ஏழாம் நூற்றாண்டில், கிரேக்க நாட்டில் இந்த நிறைக்கு அறுபது மணிகள் சமமாகக் கொள்ளப்பட்டது. திரம்மா என்பது வெள்ளிக்காசு, அதற்கான நிறை பலவிதமாகக் குறிக்கப்பட்டுள்ளது. ஆனால் இமாம் உமறு (அலி) அவர்கள் ஆட்சிக்காலத்தில் இந்த நாணயம் பதினான்கு காராட் நிறை

யுடையதாக அமைக்கப்பட்டது. இந்த இரண்டு நாணயங்களும் திருக்குர் ஆனில் சூரா 12:20ல் சொல்லப்பட்டுள்ளது.[3] பின்னர் காஷ் (CASH) என ஆங்கிலத்திலும் பிற்காலத்தில் உருப்பெற்றுள்ளன.[1] தமிழகத்திற்கு அரபிகளது வாணிபத் தொடர்பு ஏற்பட்டவுடன் அந்தநாட்டு தினார், திர்ஹம், நாணயங்கள் தமிழ்நாட்டில் தமிழக நாணயங்களாக பதினான்காவது நூற்றாண்டு வரை பயன்படுத்தப்பட்டு வந்துள்ளன. அரபு நாடுகளுடன் வாணிபம் செய்த அரபிகளுடன் தமிழக மக்கள் கொண்டிருந்த நெருக்கமான நட்புச் சூழ்நிலையும் இத்தகைய பொருளாதார நாணயப் புழக்கத்திற்கு ஏற்ற காரணமாதல் வேண்டும்.

இந்த நாணயங்கள் ஏழாம் நூற்றாண்டு முதல் ஒன்பதாம் நூற்றாண்டு வரை கொங்கணத்திலிருந்து ஆந்திர கடற்கரை வரை வியாபித்திருந்த மேலைச் சாளுக்கிய அரசின் செலாவணியில் இருந்தன. அந்த காலக்கட்டத்தில், அங்கு அராபியர்கள் மிகுந்த அன்புடனும், மதிப்புடனும், நடத்தப்பட்டதை அப்பொழுது அங்கு பயணம் மேற்கொண்டிருந்த சுலைமான் போன்ற வரலாற்று ஆசிரியர்களது குறிப்புகள் சான்று வழங்குகின்றன.[2] தமிழகத்தின் வடக்கு எல்லையில் சாளுக்கிய அரசு அமைந்து இருந்ததின் காரணமாக அந்தநாட்டு அரசியல் செயல்பாடுகளின் செல்வாக்கினை பிரதிபலிப்பாக அரபு நாட்டு நாணயங்கள் தமிழ்நாட்டு செலாவணியில் ஈடுபடுத்தபட்டிருக்க வேண்டும். இந்த இரு காசுகளும் முந்தைய தமிழகத்தின் பழங்காசுடன் செலாவணியில் ஒருசேர வழங்கப்பட்ட செய்திகளும் உண்டு. ஒரு சில கல்வெட்டுகளில் இருந்து அரபு நாட்டு திரமத் (திர்கம்) திற்கு தமிழகத்தின் பழங்காசிற்கும் உள்ள மதிப்பினைத் தெரிந்து கொள்ளும் வாய்ப்பு உள்ளது. ''பழங்காசு முக்காலே மாகாணிக்கு, திரமம் ஒன்றே காலாகவும், அரைப்பழங்காசுக்கு திரமம் முக்காலும்'' என ஒரு கால கட்டத்திலும், பழங்காசு அரைக்கு திரமம் ஒன்றரை யாக ஒரு சமயம் இருந்ததாகவும் செய்யாறு, கும்பகோணம், கல்வெட்டுகளில் காணப்படுகின்றன

1. Appadorai Dr. A. Economic Condituions of S. India (130( AD - 1500AD) v.II
2. Md: Hussain Nainar–Arab Geographers Knowledge of S. indi; (1944)p.p. 162, 163

ஆனால் தினரா (தினார்) வுக்கு என்ன மதிப்பு இருந்தது என் பதை சுட்டுகின்ற ஆவணங்கள் கிடைக்கவில்லை. எட்டாம் நூற்றாண்டிலிருந்து பதினான்காம் நூற்றாண்டுவரை தமிழகச் செலாவணியில் இருந்த இந்த நாணயங்களது பெயர்களுக்கான மூலம் கிரேக்க மொழியில் உள்ளது. தினேரியஸ் என்ற சொல் ''தினார்'' எனவும், திரக்மா என்ற சொல்'' திர்கம்'' எனவும் அரபு மொழியில் உருப்பெற்றது. நபிகள் நாயகம் (ஸல்) அவர் கள் காலத்திற்கு முன்பே கிரேக்க நாட்டிற்கும், அரபு மக்களுக் கும் இடையில், சமூக, கலாச்சார தொடர்புகள் இருந்தன. உமை யாக்கள் ஆட்சியின் பொழுது அவை பல நிலைகளிலும் முன் னேற்றம் கண்டன. ஆதலால், அரபிகள் தங்களது பொன், வெள்ளி நாணயங்களை கிரேக்க பாணியிலும் பெயரிலும் தயா ரித்து வெளியிட்டனர். இந்த நாணயங்களில் அரபு நாட்டிற் கொப்ப வடிவமைப்பில் மாற்றங்களை கலீபா உமர் அவர்கள் ஏற்படுத்தினார். குறிப்பாக செவ்வக வடிவில் இருந்த திர்கம் நாணயத்தை, வட்ட வடிவில் அமைத்து அதில் ''அல்லாஹு'' ''பரக்கத்'' என்ற சொற்களைப் பொறிக்குமாறு செய்தார்.[3] அவரைத் தொடர்ந்த இஸ்லாமிய ஆட்சியாளர்களான உமை யாக்கள், அப்பாஸியாக்கள் ஆட்சியின் பொழுது இந்த நாண யங்களின் அச்சிலும் நிறையிலும் பலமாற்றங்கள் ஏற்பட்டதை வரலாறு கூறுகிறது. என்றாலும் அபத்அல் மாலிக் என்ற உமையா கலிபாதான் முதன் முதலாக அரபிய தினாரை தமாஸ் கஸ் நகரில் இருந்து கி.பி. 695 வெளியிட்டார். இராக்கில் இருந்த அவரது ஆளுநர் அல்ஹஜ்ஜாஸ் வெள்ளியிலான முதல் அரபி திர்கம் நாணயத்தை கூபா நகரில் கி.பி. 696ல் தயாரித்து வெளி யிட்டார்.[4]

திர்கம் என்பது மற்றொரு வகையான வெள்ளி நாணய மாகும். இதனுடைய நிறை, 5, 6, 9, 10 மிஷ்கள் என ஒரு சிலரும் 10, 12, 20 காரட் என்று வேறு சிலரும் கருத்து தெரிவித்துள்ள னர்.[5] தமிழகத்தின் இந்த நாணயம் ''திரம்மா'' என வழங்கப் பட்டது.

---

3. Tabari - vol. 2. p. 939
4. Philip K. Hitty History-of the Arabs
5. Thomas Patrick Hujhes - Dictionary of Islam (1929) p.84

இந்த வகையான அரபு நாட்டு நாணயங்கள், தமிழகத்தில் செலாவணியில் இருந்ததை சான்று பகரும் பழமையான கல் வெட்டுக்கள் பல உள்ளன. இராமநாதபுரம் மாவட்டம் திருப்புத் தூர் திருத்தளியாண்ட நாயனார் திருக்கோயிலில் உள்ள கல்வெட் டில் பாண்டிய மன்னர் மாறன் சடையனது (கி.பி.792-835) பத்தா வது ஆட்சியாண்டில், அந்தணப் பெண்மணியொருத்தி அந்தக் கோயிலில் சந்தி விளக்கெரிக்க பத்து "தினார்களை" வழங்கிய செய்தி உள்ளது.[6] இதனைப் போன்று திர்கமும், "திரம்மா" என சோழர்களது பழங்காசுடன் இணைத்து வழங்கப்பட்டது. கி.பி. 985ம் ஆண்டு உத்தம சோழனது ஆட்சியில் திருக்கொம்பியூர் கல்வெட்டில் "அஞ்சு வண்ணத்தால் வந்த ஈழக்காசு" என்ற தொடர் காணப்படுகிறது "பொலியூட்டாகக் கொண்ட பழங் காசு முக்காலே மாகாணியால் பொலியும் திரமம் நன்னே காணும். "... .... .... ... .... ... .... .... கடனுக்கு திங்கள் காசு திரமம் பலிசை பொலிவதாக ... ... .... ...." "இரவு சந்தி விளக்கெரிய வைக்க திரமம் நாலும் ... ... ...." என்பன ராஜராஜ தேவனது தஞ்சைப்பெருவுடையார் கோவில் கல்வெட்டுக்களில் காணப்படு பவையாகும்.[7] திருவிடந்தை, திருப்பராய்த்துறை ஆகிய ஊர் களில் படியெடுக்கப்பட்ட விக்கிரம சோழ தேவரது கல்வெட்டுக் கள் கி.பி. 1122, 1131 ல் சோழ நாட்டில் திர்கம் (திரம்மம்) புழக் கத்தில் இருந்ததை நினைவூட்டுகின்றன. கி.பி. 1246ம் ஆண்டைச் சேர்ந்த திருத்துறைப்பூண்டி கல்வெட்டும் இந்த உண்மையைத் தெரிவிக்கின்றன.[8] குலோத்துங்க சோழ தேவரது 36வது ஆட்சி யாண்டு குடுமியாமலைக் கல்வெட்டு, ".... .... அடைக்காய முதிற்கு இலையமுது, இட, திருமெய்ப்பூச்சிற்கு 48வது முதல் திங்கள் அஞ்சு திரமமாக ஆட்டறுபது திரமமும் இறுக்கக்கட வார்களாகவும்" என முடிகிறது. இன்னும், பாண்டிய நாட்டில் திர்கம் நாணயம் செலாவணி பற்றி பேராசிரியர் நீலகண்ட சாஸ் திரி அவர்கள், தமது ஆங்கில நூலான "பாண்டியப் பேரரசில்" வரைந்துள்ளார்.[9] மற்றும் பாண்டிய மன்னர்கள் சடையவர்மன்,

---

6. A. R. 136/1908 - திருப்புத்தூர்.
7. நாகசாமி ஆர். தஞ்சைப்பெருவுடையார் கோவில் கல்வெட் டுகள் (1968)
8. தமிழ்நாடு தொல்பொருள் துறைகல்வெட்டுஎண் 1976/105-78
9. Nilakanta Sastri K.A – Pandia kingdom (1929) p. p. 98, 193, 196, 118, 123, 143, 217

வல்லப தேவர், வீரபாண்டிய தேவர், சுந்தரபாண்டிய தேவர், மாறவர்மன் சுந்தர பாண்டிய தேவர், சடையவர்மன் குலசேகரன் ஆகியவர்களது கல்வெட்டுக்களும் இந்த உண்மையை உணர்த்துகின்றன.[10] இன்னும், தென் பாண்டிச் சீமையைச் சேர்ந்த அருப்புக்கோட்டை, சுத்தமல்லி, ஆகிய ஊர்களில் உள்ள பதின்மூன்றாவது நூற்றாண்டைச் சேர்ந்த பாண்டியர் கல்வெட்டுக்கள் திர்கத்தைக் குறிப்பிடுகின்றன. அருப்புக்கோட்டை ஆலயமொன்றின் அறங்காவலர்கள் நிலக்கிரையத்தை நெல்லாகவும் திரமமாகவும் பெற்றதாகச் செய்தி உள்ளது.[11] சுத்தமல்லி என்ற ஊருக்கு அண்மையில் உள்ள குலசேகரப் பேரேரியை ஆழப்படுத்தி செம்மை செய்ய கி பி. 1204ல் பாண்டியன் சடையவர்மன் குலசேகர பாண்டியன் 100 திரம்மாக்கள் வழங்கியதை அந்த ஊர் கல்வெட்டு சுட்டுகிறது.[12] மேலும், மாறவர்மன் விக்கிரம பாண்டியன், திருபுவனச் சக்கரவர்த்தி சுந்தரபாண்டியன், ஆகியோர் ஆட்சியின் அரசிறையாக செலுத்த வேண்டிய தொகை இவ்வளவு திரமம் என நிர்ணயிக்கப்பட்டிருந்தது. பதினாறு மாநிலத்தில் விளைவிக்கப்பட்டுள்ள வரகு, தினை, ஆகிய பயிர்களுக்கு ஒரு திரம்மமும் இதர புஞ்சை பயிர்களுக்கு அரை திரம்மமும் வரியாகச் செலுத்தப்படவேண்டும். என நிகுதி செய்யப் பட்டிருந்தது.[13] மற்றும், மாறவர்மன் சுந்தரபாண்டியனது ஆட்சிக்காலத்தில் "எள், வரகு, தினை, புளிங்கு விளைந்த நிலத்தின்'' மாத்தால் திரமம் ஒன்றேகால் இறுப்பதாக அந்தராயம் வசூலிக்கும் ஆணையை மேலக்கொடுமலூர் கல்வெட்டில் பொறிக்கப்பட்டுள்ளது.[14] அந்த அரசரது ஆட்சியின் (கி.பி. 1215ல்) அஞுசு மேனி திரம்மம் என்ற பிறிதொரு அரபு நாணயமும் தமிழ் மக்களிடையில் செலாவணியில் இருந்தது தெரியவருகிறது.[15] பாண்டிய நாட்டில் அரபிகளது குடி

---

10. Pudukottai state inscriptions No. 260, 262, 292, 265, 269, 305, 306, 307, 308, 328.
11. AR 412/1914 - Aruppukottai
12. AR 459/1914 - Aruppukottai
13. AR 399/1907 - Suddhamalli
14. AR 399/1907 - Melakodumaloor
15. Appadurai Dr. A– Econamic Contions of S. India (From 1000 HD – 1500 AD) vol II.

யேற்றமான அஞ்சுவண்ணத்தார் வழங்கிய நாணயம் தான் வழக்கில் அஞ்சுமேனி திரமம் ஆகிவிட்டது. இந்த அரபுகளது திரமம் அப்பொழுது தமிழகத்தில் புழக்கத்தில் இருந்த பழங்காசுகளுடன் ஒருசேர'' செல்லும் நாணயமாக விளங்கியது. ஒன்பதாவது நூற்றாண்டில் மூன்று திரமம் இரண்டு பழங்காசுகளுக்குச் சமமாக மதிப்பிடப்பட்டது. பதினொன்றாம் நூற்றாண்டில் காஞ்சிபுரத்தில் ஆறு திரமம் ஒரு பழங்காசிற்கும் இராமநாதபுரத்தில் ஏழு திரமம் ஒரு பழங்காசிற்கும் சமமாக கருதப்பெற்றது. பன்னிரண்டாம் நூற்றாண்டில், ஏழு திரமம் ஆங்கில நாட்டு அஞ்சு ஷில்லிங் எட்டே கால் பென்ஸ் அளவிற்கு சமமாக இருந்ததாக கல்வெட்டு ஒன்று சொல்கிறது[16]. இத்தகைய நாணயப் புழக்கம் மிகுதி காரணமாக, அவைகளை தமிழ்நாட்டிலேயே தயாரிக்க அரபிகளால் தமிழ்நாட்டில் நாணய தயாரிப்பு நிலையங்கள் அமைக்கப்பட்டன. கொற்கையிலும், தொண்டியிலும் அத்தகைய நாணய முத்திரை சாலைகள் இருந்தன. அந்த இடங்கள் கொற்கை மாறமங்கலத்தில் ''அஃக சாலைத் தெரு'' என்றும் தொண்டியில் ''அன்ன சாலைத் தெரு'' என்றும், இன்றும் குறிப்பிடப்படுவதிலிருந்து அந்த முத்திரை சாலைகள் அமைக்கப்பட்டிருந்த பகுதிகளை அறிய முடிகிறது. அரபுகளது இந்த நாணயச் செலாவணி ஆந்திர நாட்டில் பதினாறாவது நூற்றாண்டு வரை நீடித்தாலும், பாண்டிய நாட்டில் பதினான்காவது நூற்றாண்டு வரை புழக்கத்தில் இருந்தது. மதுரையில் சுல்த்தான்கள் ஆட்சி ஏற்பட்டதும், அவர்கள் தில்லி சுல்தானைப் பின்பற்றி, வெளியிட்ட வெள்ளி, செம்பு நாணயங்கள் மக்களிடையே செலாவணிக்கு வந்தபிறகு, அரபிகளது தினாரும். திர்கமும், செலாவணியிலிருந்து நீக்கப்பட்டுவிட்டன. என்றாலும் விஜய நகர மன்னர்கள் ஆட்சியில் அவைகள் மக்களிடையே புழக்கத்தில் தொடர்ந்து இருந்ததை கொண்டவீடு கல்வெட்டு குறிப்பிடுகிறது.[17] இந்த நவீன காலத்திலும், அரபுநாடுகள் சிலவற்றில் தினாரும் திர்கமும் செலாவணியில் இருந்து வருகின்றன. குவைத், பஹ்ரைன் நாடுகளில் தினாரும், சௌதி அரேபியாவில் திர்கமும் சர்வதேச செலாவணியுடைய நாணயங்களாக இருந்து வருகின்றன. இவைகளுக்கு எல்லாம் மேலாக ஐரோப்பிய நாடான யூகோஸ்லாவி

---

16. ARE 284 / 1923
17. AR 242 / 1892 கொண்டவீடு

யாவில் நாணயச் செலாவணியும் தினாரில் இருந்து வருவது குறிப்பிடத்தக்கது.

பல நூற்றாண்டுகளாக தமிழ்ச் சமுதாயத்தின் புறக் கணிக்க முடியாத குடிமக்களாகிய தமிழக இஸ்லாமியரைப் பற்றிய ஆழமான சிந்தனையும் அக்கரையும் கொள்ளாத வரலாற்று ஆசிரியர்கள், முஸ்லீம்களது வரலாற்றினை மறைத்தது போல அவர்கள் தமிழக நாணயச் செலாவணிக்கு வழங்கிய இஸ்லாமிய நாணயங்கள் பற்றியும் வரலாற்றில் எவ்வித விவரங்களும் அளிக்க வில்லை. இதற்கு, அவர்களுக்கு அரபி மொழியில் உள்ள இஸ்லாமிய வரலாற்று ஆவணங்களில் பயிற்சி இல்லாதது அடிப் படை காரணமாக இருக்கலாம்.

# 20

## இணைப்பும் பிணைப்பும்

அரபு நாடுகளுடனான தமிழரது வாணிகம், இந்த வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் வழங்கியது. வணிகர்களாக தமிழகம் வந்த அரேபிய இஸ்லாமியர் நாளடைவில் தமிழக இஸ்லாமியராக மாறியது, தமிழ்ச் சமுதாயத்தில் தலைமுறை தலைமுறையாக பேணப்பட்டு வந்த பண்பாடு, நாகரீகம் ஆகிய நிலைகளில் புதிய கலப்புகளும் வார்ப்புகளும் நிகழ்வதற்கு நெம்புகோலாக உதவின. தமிழக, கலை, இலக்கியம், வாழ்க்கை இயல், சமய ஒழுகலாறுகளில் அவை காலூன்றி பரிணமித்து பிரதிபலித்து நின்றன.

சோழர் ஆட்சிக் காலத்தில் நாகையில் புத்த விகார மொன்று நிறுவ அனுமதி அளிக்கப்பட்டதை ஆனைமங்கலச் செப்பேடு விவரிக்கிறது. காலப்போக்கில். எத்துணையோ விதமான மதக் கோட்பாடுகள் மக்களால் ஏற்றுக் கொள்ளப் பட்டு மன்னர்களால் மதிக்கப்பட்டாலும், இஸ்லாம் மதத்திற்கு ஏற்பட்ட சூழ்நிலையும் ஆதரவும், வேறு எந்த மதத்திற்கும் ஏற்படவில்லை என்று அறுதியிட்டுச் சொல்லலாம். இதயபூர்வ மாக இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டவர்கள் சிலரானாலும், இஸ்லாமிய சிந்தனைகளில் ஈடுபாடு கொண்டு எதிர்ப்பு அணியில் சேராதவர் பலர். இஸ்லாத்திற்கு ஆதரவு திரட்ட அனல்வாதம், புனல்வாதம் போன்ற நேரிடையான கொள்கை விளக்கங்களுக்கு அவசியம் ஏற்படவில்லை. இதன் காரணமாக, தமிழ் மண்ணில் ஆழமாக வேரோடிய இந்த புதிய வித்திற்கு தமிழ்ச் சமுதாயம் அனுகூலமான விளைநிலமாகவே விளங்கியது,

தங்கள் வாழ்க்கை நெறியை. வல்லவன் வகுத்தருளிய திருமறையின்படி வகுத்துக் கொண்டாலும், தாங்கள் வாழும்

சூழ்நிலை, சமூக அமைப்பு காரணமாக தங்களுக்கு இல்லாத பழக்க வழக்கங்களை வெறுத்து ஏற்றுக் கொள்ளாவிட்டாலும், அவைகளை அவர்கள் பொறுத்துக் கொள்ளவேண்டியது இயல்பாகிவிட்டது. வரலாற்று நிகழ்ச்சிகள் சில இதனை வலியுறுத்துகின்றன. பாண்டியன் சடையவர்மன் வீரபாண்டியன் (கி.பி. 1262) ஆட்சிக்காலத்தில் இராமநாதபுரம் மாவட்டம் கிழக்கு கடற்கரையில் உள்ள தீர்த்தாண்ட தானத்துக் கல்வெட்டில் "... ... ... .... இவ்வூரில் இருக்கிற அஞ்சு வண்ணமும் மணிக்கிராமத்தாரும். ஆரியரில் சாமந்த பண்டசாலையும் பட்டாரியரும் தோயா வத்திரச் செட்டிகளும் தென்னிலங்கை வலஞ்சியரும் கைக்கோளரும் தூசுவரும். வாணியரும், நீண்ட கரையாருங்கூடி .... ... கோயில் திருமுன்னிலே நிறைவுறக் கூடியிருந்து .... ...." அந்த ஊர் திருக்கோவிலில் திருப்பணி பற்றிக் கலந்து முடிவு எடுத்தனர்.[1] இந்த கலந்துரையாடலுக்கும் ஒருமித்த முடிவிற்கும் இஸ்லாமியர்களான அஞ்சு வண்ணத்தவரும் கட்டுப்பட்டதாகத் தெரிகிறது. இது பதின்மூன்றாம் நூற்றாண்டில் மட்டுமல்ல. தொடர்ந்து பிந்தைய நூற்றாண்டுகளிலும் தமிழக இஸ்லாமியர் தாங்கள் வாழும் சமுதாயத்தை சேர்ந்த இந்து சகோதரர்களின் மத உணர்வுகளை மதித்தவர்களாக சமயப் பொறையுடன் வாழ்ந்தனர், என்பதற்கு இன்னும் இரண்டு கல்வெட்டுச் செய்திகள் இங்கு குறிப்பிடப்படுகின்றன.

முதலாவது, மதுரையில் விஜயரங்க சொக்கநாத நாயக்கர் ஆட்சி நடைபெற்றபொழுது கி.பி. 1719 ல் நிகழ்ந்த சம்பவம். மதுரை மாவட்டம் வெற்றிலைக்குண்டு கிராமத்தில் ஆலயமொன்றைப் பராமரிப்பது சம்பந்தமாக அந்த ஊரின் குடிகளான கோமுட்டி, கவண்டன், கைக்கோளன், நாடார், வாணியர், செட்டி, நத்தமடை, **இஸ்லாமியர்** ஆகிய எட்டு சமூகங்களின் பிரதிநிதிகளும் கூடிய கூட்டத்தில் தங்களது வியாபாரத்தில் கிடைக்கும் லாபத்தில் ஒரு ஈவுத் தொகையை அந்த தர்மத்திற்கு அளிக்க ஒவ்வொரு சமூகத்தினரும் உடன்பட்டதாலும், அந்த எட்டு சமூகப் பிரதிநிதிகளில் இஸ்லாமியரது பிரதிநிதி

---

1. AR 598/1926 *தீர்த்தாண்டதானம்*

யாக லெவை ராவுத்தன் என்பவரும் கலந்து கொண்டு இணக்கம் தெரிவித்திருப்பது தெரியவருகிறது.[2]

இன்னொரு நிகழ்ச்சி, திருநெல்வேலி மாவட்டம் தென் காசியை சேர்ந்த அகமதுபேட்டை முஸ்லீம்களைப் பற்றிய தாகும். அவர்கள் தாங்கள் வாணிகம் செய்யும் ஊர்களில், குற்றால நாதர் நித்திய பூசைக்கட்டளை வகையறாவுக்கு மகமைப் பணம் கொடுக்க கி.பி. 1788ல் இணங்கி எழுதிய பட்டய மாகும்.[3] இதோ அந்தப் பட்டய வாசகம்.

''சாலிவாகன சகாப்தம் 1710 ம் வருடம் செல்லா நின்ற கொல்லம் 964 ஆண்டு கீலக வருடம் கார்த்திகை மாதம் 25 ம் தேதி குற்றாலநாத சுவாமி கட்டளைக்கு அசரது வாவா சாயபு அகமது பேட்டை மணியம் இஸ்மாயில் ராவுத்தன் முதலான பலரும் எழுதிக் கொடுத்தபடி பட்டயமாவது. சுவாமிக்கு நித்திய விழா பூஜையில் கட்டளை வைத்துவரும்படி படித்தரப் படிக்கி, நடத்திவரும் வகைக்கு, நாங்கள் எல்லோரும் வகை வைத்துக் கொடுத்து ஏறு காற்று, இறங்கு காற்று வாகைச்சை ஒன்றுக்கு, மருவுருட் சட்டை ஒன்றுக்கு, கால் மாகாணிப் பணம் வீதமும் நடையொற்றுக்கு மாகாணிப் பணம் வீதமும் இன் னொன்றுக்கு அரை மாகாணி வீதமும் இந்தப்படிக்கு திருநெல் வேலி காந்திமதியம்மன் சிறுகால மகிமை காந்திமதி மகிமைப் படிக்கு தென்காசி ஆமது பேட்டையில் உள்ள வனிதசேகர செங்கோட்டை, புலியறை, பண்புளி, கடையநல்லூர், சிவராமப் பேட்டை, சுரண்டைச் சந்தை, முதலான துறையிலும் மகமை வைத்துக் கொடுத்தபடியினாலே மாசம் மாசம் உள்ள பணத்தை வாணிபம் கணக்குப் பார்த்து வாங்கிக் கொண்டு சுவாமிக்கு கட்டளை என்றென்றைக்கும் நடத்தி வருவோமாகவும் ... ...'' என முடிவு பெறுகிறது அகமது பேட்டை இஸ்லாமியர் இணக் கம் தெரிவித்துள்ள அந்தப்பட்டயம்.[4]

இத்தகைய சமயப் பொறை சம்பந்தப்பட்ட நிகழ்ச்சிகள் காரணமாகவும் பிற அரசியல் ஊக்குவிப்புகள் காரணமாகவும்

---

2. List of Copper Plates No 65 A of Mr. A. Sewell
3. AR 43/1946 (C.P).
4. AR 43 / 1946 (C. P)

அன்றைய தமிழகத்தில் வாழ்ந்திருந்த இஸ்லாமியர்களுக்கு அரசியலார் பலவித சலுகைகளை அளித்தனர். அவைகளில் சில செப்பேடுகளிலும் கல்வெட்டுக்களிலும் காணப்படுகின்றன. மதுரையில் இரண்டாவது பாண்டியப் பேரரசின் கர்த்தாவாக விளங்கிய சடையவர்மன் சுந்தரபாண்டியன் தனது எட்டாவது ஆட்சியாண்டில் மதுரைக்கு கிழக்கே உள்ள கீட்செம்பி நாட்டின் பௌத்திர மாணிக்கப் பட்டினத்து கீழ்பால் உள்ள சோனக சாமந்தப்பள்ளிக்கு ஆம்புத்தூர் முதலான ஊர்களை இறையிலியாக ஆணையிட்டு உதவினான்[5] அடுத்து, மதுரையில் அரியணை ஏறிய சுந்தரபாண்டியன் மதுரை மாநகர இஸ்லாமியப் பிரதிநிதியான ஹாஜி தாஜுத்தீன் அவர்களை காஜியாக அங்கீகரித்ததுடன் அவர்களது குடியேற்றப் பகுதியில் (இன்றைய மதுரை காஜிமார் தெரு)அந்த சிறு பான்மை மக்களது வழிபாட்டிற்கு தொழுகைப்பள்ளி யொன்றையும் நிர்மாணிக்க உதவினான். மேலும் அந்தப் பள்ளியின் பராமரிப்புச் செலவிற்காக. விரகனூர், புளியங்குளம், கிராமத்தையும் முற்றூட்டாக வழங்கி உத்திரவிட்டான்.[6] இந்தப் பாண்டியரைப் போன்று சேர மன்னனான உதயமார்த்தாண்டனும், தமிழக இஸ்லாமியர்களுக்கு உதவிய செய்தியும், உள்ளது. அவர் காயல் பட்டினத்திற்கு வருகை தந்தான். அப்பொழுது காயல்துறை சேரநாட்டின் ஆட்சி வரம்பிற்குள் அமைந்திருந்தது. அந்த ஊரின் அண்மையில் உள்ள காட்டு மக்தூம் பள்ளிக்கும் வருகை தந்த விபரம் அங்குள்ள கல்வெட்டில் காணப்படுகிறது. அதன் வாசகப்படி, அந்தப்பள்ளி அன்று முதல் உதயமார்த்தாண்ட பெரும்பள்ளி என அழைக்கப்பட்டதுடன், அந்த பள்ளியின்காதியரான அபுபக்கரும் உதயமார்த்தாண்ட காதியார் என அழைக்கப்பட்டார். அந்தபள்ளியின் பராமரிப்பிற்காக சோனாடு கொண்டான் பட்டினம் என வழங்கப்பட்ட அந்த காயல்துறையில் ஏற்றுமதி, இறக்குமதி கொள்ளும் பொருளுக்கு, நான்கு பணத்திற்கு கால் பணம் வரியாக வசூலிக்கும்படி சேரமன்னது ஆணையும் பிறப்பிக்கப்பட்டது.[7] இது நிகழ்ந்தது, கி.பி. 1387ல்

5. AR 116 / 1903 – திருப்புல்லாணி
6. Hussaini Dr. S.A.R - History of Pandia Country p. 55
7. AR 311/1964 காயல்பட்டினம்

பதினேழு, பதினெட்டாம் நூற்றாண்டுகளில் செம்பி நாட்டையாண்ட சேதுபதிகள் தமிழக இஸ்லாமியர்களது தொழுகைப்பள்ளி, தர்ஹா, ஆகியவைகளுக்கு பல நிலக்கொடைகளை வழங்கினர். அந்த அறக்கொடைகள் தொடர்ந்து தற்பொழுதும் பயன்பட்டு வருகின்றன. அதன் விபரங்களை சேதுபதிகளின் செப்பேடுகளும் கல்வெட்டுகளும் விளக்குகின்றன. மறவர் சீமையின் மாண்பை உயர்த்திய சேதுமன்னர்களில் சிறப்புற்று விளங்கிய திருமலை சேதுபதி, தமது நாட்டில் குணங்குடி கிராமத்தில் (இராம. மாவட்டம் திருவாடானை வட்டம்) அமைந்துள்ள ஸையது முகம்மது புஹாரி (வலி) அவர்களது தர்ஹா (அடக்கவிடம்) பராமரிப்பிற்காக கி.பி. 1675இல் நிலகொடை வழங்கினார்.[8] அவரை அடுத்து அரியணையேறிய கிழவன் ரகுநாத சேதுபதி காரேந்தல் (காமராசர் மாவட்டம்-திருச்சுழியல் வட்டம்) மீராசாகிப் பள்ளிக்கு விளைநிலங்களை விட்டுக் கொடுத்தார். மற்றொரு சேதுமன்னரான முத்துக்குமார விஜயரகுநாத சேதுபதி கி.பி. 1744ல் குணங்குடி பள்ளிவாசலுக்கு மேலும் பல நிலங்களை வழங்கினார். இதே சேதுமன்னர் தமது சீமையில் உள்ள ஏனைய இஸ்லாமியரது புனித இடங்களான இராமேஸ்வரம் ஆபில் காபில் தர்ஹா, இராமநாதபுரம் ஈசா சாகிபு தர்ஹா, ஏறுபதி சுல்தான் சையது இபுராகிம் (வலி) தர்ஹா ஆகிய நிறுவனங்களுக்கு முறையே பக்கிரி புதுக்குளம், (இராம. வட்டம்) கிழவனேரி, ஏறுபதி, மாயாகுளம் ஆகிய கிராமங்களை (முதுகுளத்தூர் வட்டம்) முற்றூட்டாக வழங்கியுள்ள செய்திகள், அவரது தான சாசனங்களில் வரையப்பட்டுள்ளன.[10] மேலும், இவர் கமுதி வட்டம் பூலாங்கால் பள்ளிவாசலுக்கும், இராமநாதபுரம் வட்டம் நாரணமங்கலம் சுல்தான் பள்ளி வாசலுக்கும், பல ஏக்கர் விளைநிலங்களை வழங்கி பள்ளிவாசல் தர்மத்திற்கு உதவி இருக்கிறார்.[11] இவரை அடியொற்றி இவரது வழியினரான முத்து விஜயரகுநாத சேதுபதியும் பூலாங்கால் பள்ளிவாசலுக்கு நிலக்கொடைகளை வழங்கி உள்ளார்[12].

---

8. Sewell - List of Copper plates.
9. Antiquities vol I. p. 298.
10. சேதுபதி மன்னர் செப்பேடுகள்.
11. இராமநாதபுரம் சமஸ்தான நிலமான்யகணக்கு.
12. ஷை

இவர்களைப்போன்று, தமிழக இஸ்லாமியரிடம் பரிவும் பாசமுங்கொண்ட நாயக்கமன்னர்களும் அவர்களது மத உணர்வுகளை மதித்து அறக்கொடைகள் வழங்கினார்கள். கி.பி. 1585ல் தஞ்சையை ஆண்ட செவப்ப நாயக்கர் அந்த நகரில் அடக்கம் பெற்றுள்ள இறைநேசரது தர்ஹாவிற்கு வருகை தருகிற இஸ்லாமிய துறவிகளது பராமரிப்பிற்காக பத்து ஏக்கர் பரப்பு காணியை அன்பளிப்பாக வழங்கினார்.[13] திருநெல்வேலி நகரில் உள்ள பள்ளியை பராமரிக்க கி.பி. 1692ல் மதுரை நாயக்க ம்ன்னன் விஜயரங்க சொக்கநாதன் நிலைக்கொடை அளித்தான்.[14] இந்த மன்னரது வழி வந்த நாயக்க அரசிகளான ராணி மங்கம்மாளும், ராணி மீனாட்சியும் கி.பி.1701லும் கி.பி.1733லும் மகான் நத்ஹர் (வலி) பாபாவின் திருச்சி தர்ஹா பராமரிப்பிற்கு சில கிராமங்களை இறையிலியாக வழங்கினார்கள்.[15] திருச்சியையடுத்த அம்மாபட்டி ஜமீன்தார், தமது ஜமீனில் இஸ்லாமியர்கள் தங்கி வாழ்வதற்கென ஒரு கிராமத்தை 17வது நூற்றாண்டில் தானமாக வழங்கினார். அந்த ஊர், இன்று ஜமீன் ஆத்தூர் என இப்பொழுது சிறந்து விளங்குகிறது.[16]

இவர்களது முன்னுதாரணத்தைப் பின்பற்றி, தென்பாண்டிச் சீமையில் உள்ள ஜமீன்தார்களும், சிறு பாளையக்காரர்களும், இஸ்லாமியர், ஆங்காங்கு, மனநிறைவுடனும் மகிழ்ச்சியுடனும் தொடர்ந்து வாழ்ந்து வரவும் இவர்களது, உழைப்பு, தோழமை, தொண்டு, ஆன்மீக வழிகாட்டுதல்கள், தமிழ் மக்களுக்குப் பயன்படும் வகையிலும், தங்களது அன்பளிப்புகளை நிலக்கொடைகளாக வழங்கினர். குறிப்பாக கி.பி. 1739 இல் மதுரை வட்டத்தில் காமாட்சி நாயக்கர் என்பவரும்[17] கி.பி. 1776ல் ஊத்துமலை சின்ன நயினாத்தேவர் என்ற மருதப்பத்தேவரும்[18]

---

13. Sewell - Copper plates No. 53.
14. Ibid
15. MER / 911 p. p. 89.90.
16. அப்துல்ரஹீம் M.R.M. இசுலாமிய கலைக்களஞ்சியம் (1970) தொகுதி I பக் : 628.
17. Sewell – Copper plate No. 43
18. Ibid

கி.பி. 1784ல் சிவகங்கை முத்தவடுக நாததேவரும்[19] இஸ்லாமியரது பள்ளிகளுக்கும், தர்ஹாக்களுக்கும் பல நிலக்கொடைகள் வழங்கிய செய்திகள் உள இவை அனைத்திலும் சிறப்பான செய்தி, தமிழகத்தில் சமய ஒருமைப்பாட்டில் ஒரு சிறந்த சின்னமாக விளங்கும் நாகூர் ஆண்டகையின் தர்ஹாவில் கி.பி. 1753 ல் தஞ்சை மன்னன் துல்ஜாஜி, பல திருப்பணிகள் செய்ததுடன் அந்த தர்ஹாவின் பராமரிப்பிற்காக பதினைந்து கிராமங்களை வழங்கி இருப்பதாகும்.[20] கமுதி பள்ளிவாசலை நிருமாணிக்க 200 ஆண்டுகளுக்கு முன்னர் நல்லுத்தேவர் என்பவர் 7½ஏக்கர் நிலக்கொடை வழங்கினார். இவை போன்று தமிழ்ச் சமுதாயத்தில், தமிழக இஸ்லாமியர்களுக்கும்: மற்றவர்களுக்கும் இடையில் நிலவிய சமூக ஒற்றுமை, சௌஜன்யம், தொடர்ந்ததற்கான பல சான்றுகள் காலத்தால் அழிக்கப்பட்டு விட்டதால் அவை நமக்கு கிடைக்கவில்லை.

இங்ஙனம், தமிழ்ச் சமுதாயத்தில் இஸ்லாமியர்களது ஆத்மீக தேவைகளை மதித்து உதவிய இந்து சகோதரர்களுக்கு, தங்களால் இயன்ற வகையில் இஸ்லாமியர்களும் ஒத்துழைப்பும் உதவியும், நல்கிய செய்திகளை ஒரு சில ஆவணங்கள் அறிவிக்கின்றன. காஞ்சி சங்கராச்சாரிய சுவாமிகளையும் அவரது காஞ்சி மடத்தைப் பற்றியும் அறியாதார் இருக்க முடியாது. பதின்மூன்றாம் நூற்றாண்டில் நிறுவப்பட்ட இம்மடத்தில் பூசையும், அன்னதானமும் நடைபெறுவதற்காக தில்லி பேரரசர் பகதுர்ஷா 115 வராகன் தானம் வழங்கி கி.பி. 1710ல் ஆணையொன்று பிறப்பித்தார். செங்கை மாவட்டம் மேல்பாக்கம் கிராம வருவாயிலிருந்து பெற்றுக்கொள்ளுமாறு பாரசீக தெலுங்கு சமஸ்கிருத வாசகங்களுடைய அந்த செப்பேடு உள்ளது.[21] அவைகளில் இன்னொன்று சேலம் மாவட்டம் மின்னக்கல் கிராமத்தில் நிர்மாணிக்கப்பட்ட ருக்மிணி சமேத கோபால கிருஷ்ணன் ஆலயத்திற்கு, தமிழ் நாட்டின் வடமேற்குப் பகுதியை சில ஆண்டுகள் தமது ஆட்சிக்குள் வைத்திருந்த மைசூர் மன்னர் திப்புசுல்தான், ஆண்டுதோறும் 575 வராகன் மான்யம்

---

19. A. S. S. I. Vol 4
20. Rangacharya - List of inscriptions – vol. – 2 (1919) p. 13. 46
21. GOPINATH RAO — Copper Plate Inscriptions – (1916) pp. 113-20

வழங்க ஏற்பாடு செய்ததாகும்.[21] அத்துடன் கோயம்புத்தூருக்கு அருகில் உள்ள குறிச்சி என்ற ஊரில் உள்ள செல்லாண்டி அம்மன்கோயிலுக்கும் அவர் பல மானியங்களை வழங்கி உள்ளார்.[22] மேலும், அவர் ஸ்ரீரங்கப்பட்டினம், பெருமாள்கோயில், சிருங்கேரி சாரதா பீட மடம், குருவாயூர் கிருஷ்ணன் கோயில், ஆகிய சமய சார்புடைய நிறுவனங்களுக்கு அளித்துள்ள தானங்களை இங்கு குறிப்பிடுதல் பொருத்தமுடையதாகவும்.[23] அவையனைத்தையும் ஒன்று சேர இணைத்துச் சிந்தித்தால், திப்பு சுல்தானைப் பற்றி தமிழ்நாட்டில் உலவுகின்ற ஒரு சில கட்டுக் கதைகளை சுட்டெரித்துவிடும் சரித்திரச் சான்றுகள் இவையென்பதை உணரமுடியும். அத்துடன் சிறந்த பேரரறிஞரும் விடுதலை வீரருமான அந்த மன்னனை, மக்கள் மத்தியில் இழிவு படுத்துவதற்காக அவரது பரம வைரிகளான வெள்ளைப் பரங்கிகள் திரித்துவிட்ட பொய்மைச் சரடுகள் அவை என்பதும் புலப்படும்.

தில்லிப் பேரரசரது பிரதிநிதியாக தமிழ்நாட்டை ஆட்சி செய்த ஆற்காடு நவாப்களில் ஒருவரான அன்வர்திகான், திருநெல்வேலி காந்திமதி அம்மன் ஆலயத்தில் சுவாமி திருமேனி ஒன்றைச் செய்வித்து உதவினார். இன்னும் அந்த திருமேனி ஆற்காட்டு நவாப்பை நினைவூட்டும் வகையில் "அனவரநாதன்" என வழங்கப்பட்டு வருகிறது.[24] இதனைப் போன்ற திருவுத்திரகோசமங்கை திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள தென்னாடுடைய சிவனுக்கு, திருவாட்சி இல்லாத குறையை நீக்கி, மதுரை முகம்மது இசுமாயில் என்ற இஸ்லாமிய குடிமகன் எட்டு அடி உயர வெங்கல திருவாட்சியை தயாரித்து வழங்கி இருக்கிறார்.[25] அந்த ஆலயத்தில் பழமையான சிறப்புப் பொருட்களில் ஒன்றாக அந்த திருவாட்சி இன்றும் காட்சி அளித்துக் கொண்டு விளங்குகிறது. இத்தகைய சமய பேதங்கள் நீங்கிய நட்புச் சூழ்நிலையில் தமிழக இஸ்லாமியர்கள், வாழ்ந்த வாழ்க்கை நிகழ்ச்சி சிலவற்றை வரலாறு நமக்கு நினைவுறுத்திக் கொண்டிருக்கிறது.

---

22. Rangacharya - List of inscriptions vol. II.
23. Bowring – Haider and Tippu.
24. ஆயிசாபேகம் –தமிழ்நாட்டு வரலாற்றுக் கருத்தரங்கு (1979) பக் : 295
25. மதுரை செய்யது இசுமாயில் சாயபு – சகம் 1706ல் (1784). திருவாட்சியை. வழங்கியது அதில் பொறிக்கப்பட்டுள்ளது.

கி.பி. 1311ல் தென்னாட்டு அரசியலில் குழப்பம் நிலவியது. பாண்டியப் பேரரசு தளர்ந்து மெலிந்த சிம்மத்தைப் போன்று பெருமூச்சு விட்டுக் கொண்டிருந்தது. தாயாதிச் சண்டைகள் சூடுபிடித்து, தங்களது கட்சிக்கு வெளி உதவியை நாடிக் கொண்டிருந்த நேரம். அப்பொழுது தில்லி பேரரசரின் தளபதி மாலிக் நாயிப் கர்நாடகத்தில் துவார சமுத்திரத்தில் ஹொய்சாள மன்னருடன் போரில் ஈடுபட்டிருந்தான். மதுரை அரசு கட்டிலைப் பெற சுந்தரபாண்டியன் தில்லியில் அலாவுதீன் அவைக்குச் சென்று உதவி கோரினான். சுந்தரபாண்டியனுக்கு உதவ தில்லி தளபதிக்கு கட்டளை அனுப்பப்பட்டது. தில்லிப் படைகள் மதுரை நோக்கிப் புறப்பட்டன. வழியில் கண்ணனூர், கொப்பத்தில் வீரபாண்டியன் படைகளை, தில்லி தளபதி மாலிக் கபூர் போரில் சந்தித்தான். தோல்வியுற்றான். கைது செய்யப்பட்ட வீரபாண்டியனது வீரர்கள், தில்லிதளபதி முன்பு கொண்டு வரப்பட்டனர். அவர்களில் பெரும் அளவில் தமிழக இஸ்லாமியர்களும் இருப்பதை அறிய தளபதிக்கு கோபம் பொங்கி வழிந்தது. தான் ஒரு முஸ்லீம் என்பதை அறிந்தும் தனக்கு உதவாமல், தனக்கு எதிராக, இந்து மன்னனான வீரபாண்டியனுக்காக போரிட்ட ''இனத்துரோகிகள்'' என அவர்களைக்கருதி கொன்று விடும்படி உத்தர விட்டான். அந்த வீரர்களும், தாங்கள் எதிரியின் வாளால் மடியவிருப்பது உறுதி என ஓர்ந்து, எஞ்சிய சில வினாடிகளையும் இறைவனது சிந்தனையில் கழிக்க இஸ்லாமிய தாரக மந்திரத்தை (லா இலாஹ இல்லல்லாஹு) முணு முணுத்தனர். இறைவன் ஒருவன் என்ற அந்த ஏகத்துவ முழக்கம், தளபதியின் உள்ளத்தில் அச்சத்தை ஊட்டியது. இஸ்லாமியன் ஒருவன் பிறிதொரு இஸ்லாமியனை எதிரியாகக் கருதாமல் உடன்பிறந்த சகோதரனாகக் கருதவேண்டும் என்ற சமய உணர்வு மேலிட அவர்கள் அனைவரையும் உடனே விடுதலை செய்து ஆணையிட்டான். இதனை நேரில் கண்ட வரலாற்று ஆசிரியர் ''அமிர்குஸ்ரு'' வீர பாண்டியனுக்காகப் போரிட்ட தமிழக இஸ்லாமியர் தோற்றத்தில் வேறு பட்டவர்களாக இருந்தாலும், இஸ்லாத்தினின்றும் மாறுபட்டவர்களாக இல்லாததாலும் இஸ்லாமிய தாரக மந்திரத்தை முழக்கியதாலும் உயிர் பிழைத்தனர் என குறிப்பிட்டுள்ளார்.[26]

---

26. Elliott—History of India - vol III p. 90.

பதினாறாவது நூற்றாண்டின் துவக்கத்தில் கிழக்கு கடற்கரையில் போர்த்துகேசியரின் செல்வாக்கும் பிடிப்பும் வலுத்திருந்தது. காரணம் அப்பொழுது மதுரையை மையமாகக் கொண்டிருந்த விஜயநகர நாயக்கர் பிரதிநிதிகள் கடல்கரைப் பகுதிகளில் கவனம் செலுத்தவில்லை. கப்பற்படை அவர்களிடம் இல்லாததும் அதற்கு முக்கியமானதொரு காரணமாகும். கிழக்கு இராமநாதபுரம் பகுதியில் தங்கள் சமயப் பிரச்சாரத்தில் ஈடுபட்டிருந்த போர்த்துகேசியர், வேதாளையில் ஒருமண்கோட்டையொன்றைக் கட்டி அங்கு ஒரு படையணியை நிலை கொள்ளுமாறு செய்தனர். அத்துடன் அதற்கு அண்மையில் இராமேஸ்வரம் சாலையில் ஒரு அகழியையும் தோண்டி. இராமேசுவரம் செல்லும் பயணிகளுக்கு இடையூறு ஏற்படுத்தியவுடன் அவர்களிடம் சுங்கம் வசூலித்து வந்தனர். அதனால் பயணிகளுக்குதொந்தரவு மற்றும் இராமேசுவரத்தில் உள்ள குருக்களது வருமானமும் பாதிக்கப்பட்டது.

இதனை நிவர்த்தி செய்ய வந்த நாயக்கர் படையுடன், அங்குள்ள இஸ்லாமியரும் பெரும் அளவில் சேர்ந்து கொண்டு போர்த்துக்கேசியருக்கு எதிராகப் போரிட்டதும், அவர்களை அழித்து வேதாளையை விட்டு அவர்கள் கடல் மார்க்கமாக ஓடுமாறு செய்தனர். இராமேஸ்வரம் யாத்திரை செல்லும் பயணிகள் சிரமம் நீங்கியது. இது நிகழ்ந்தது. கி.பி. 1549ல்.

தமிழகம் போந்த இசுலாமிய மனிதப் புனிதர்களில் முக்கியமானவர் நாகூர் சாகுல் ஹமீது ஆண்டகையார். பதினைந்தாம் நூற்றாண்டில், தமிழகத்தில் அன்பையும், சகோதர உணர்வையும் மக்களிடையே தளிர்க்கச் செய்தவர்கள் அவர்கள். செயற்கரிய செய்வர் பெரியர் என்ற வள்ளுவத்துக்கு எடுத்துக்காட்டாக வாழ்ந்து சமுதாயத்தின் சகல துறைகளிலும் ஏக தெய்வ நம்பிக்கையும், சகிப்புத்தன்மையும், கமழச் செய்த சான்றோர். அவரது இளவலான பாபா பக்ருத்தீனும் மறைவழி நின்று மனித நேயம் காத்து வந்தார். ஒரு சமயம் சேது நாட்டிற்கும் சோழநாட்டிற்கும் இடைப்பட்ட கானாட்டில் அவர் தங்கி இருந்த பொழுது, அந்த வழியில் தஞ்சையில் இருந்து இராமேசுவரம் தலயாத்திரை சென்ற அந்தணப் பெண்மணிகள் எழுவரை ஆறலைக் கள்வர்கள் வழிமறித்தனர். நிராதரவாக நின்று தவித்த அவர்களது நிலை கண்டு நெஞ்சுருகிய

இறைநேசர் அவர்கள், தமது அறிவுரையினால் கள்ளர்களைத் திருத்தி அந்தணப் பெண்களைக் காக்க முற்பட்ட பொழுது, கள்வர்களால் கொலையுண்டு மடிந்தார். தாய்க்குலத்திற்கு ஏற்றம் காண முனைந்து தியாகியான அவரது நினைவு என்றென்றும் போற்றிப் பரவத்தக்க தொன்று. மதத்தை எதிர்த்து அறத்தைக் காக்க முற்பட்ட அவரது நினைவை, "காட்டுபாவா சாகிபு அம்மானை" "காட்டுபாவா சாகிபு காரணீகம்" என்ற சிற்றிலக்கியங்கள் காலமெல்லாம் போற்றிப் பரவி நிற்கின்றன. புதுக்கோட்டைக்கு அண்மையில் அமைந்துள்ள அந்தப் புனிதரது அடக்கவிடத்தில் (காட்டுபாவா சாகிபு பள்ளிவாசல்) நடைபெறும் கந்தூரி விழாவில் கள்ளர் இனத்தவர் மிகுந்த மன நெகிழ்வுடன் இன்றும் ஈடுபடுதல் குறிப்பிடத்தக்கதாகும்.

இந்த நிகழ்ச்சியைப் போன்ற இன்னொரு அவல நிகழ்ச்சி தமிழக வரலாற்றில் பதிவு செய்யப்பட்டுள்ளது. கி.பி. 1614ம் ஆண்டு பட்டயம் ஒன்றிலிருந்து தெரியவருகிறது.[27] இந்தப் பட்டயத்தின்படி பிராமணப் பெண் ஒருத்தி வல்லத்தில் இருந்து தஞ்சாவூருக்கு செல்லும் பொழுது காட்டுப்பாதையில் கள்ளர்கள் அவளை வழிமறித்தனர். அந்தச் சமயம் அந்தப்பாதையில் வந்த இசுலாமிய துறவியிடம் (பக்கீரிடம்) அடைக்கலம் கோரினாள் துறவியும் அந்த பிராமணப் பெண்ணுக்காக கள்ளரிடம் பரிந்து பேசி அவளுக்கு ஊறு இழைக்க வேண்டாமென்று கெஞ்சினாள். ஆனால் அவர்கள், பக்கிர்சாயபுவை குத்திபோட்டார்கள் அவள் நாக்கை பிடிங்கிக் கொண்டு செத்துப்போனாள்...." இந்தப் பெண்ணுக்காக இசுலாமியத்துறவியும், இசுலாமியத் துறவியின் நிமித்தம் இந்துப் பெண்ணும் தங்களது இன்னுயிரைப் பறி கொடுத்த பாங்கினை அந்தப் பட்டயம் சொல்லுகிறது.

தென்னகத்தை கைப்பற்ற அனுப்பப்பட்ட தில்லி பேரரசர் அவுரங்கஜேப்பின் படைக்கு செஞ்சிக்கோட்டையில் பெருத்த ஏமாற்றம் காத்திருந்தது. எத்தனையோ குறுநில மன்னர்களையும் அவர்களது கோட்டைகளையும் எளிதில் முகலாயப் பேரரசில் இணைத்த தில்லி தளபதிகளுக்கு செஞ்சி ஒரு பெரிய வினாக் குறியாக இருந்தது. வீரத்தையும் விவேகத்தையும் ஆதாரமாகக்

---

27. தஞ்சாவூர் மன்னர் செப்பேடு.
தொல்லியல் கருத்தரங்கு – (1983) பக்கம். 3

கொண்டு முகலாயப் படைகளை எதிர்த்தவர்கள் கூட முகலாயப் படை பலத்தின் முன்னே இலவம் பஞ்சைப் போல பறந்தோடி மறைந்தனர். அல்லது இனத் துரோகிகளின் வஞ்சனையால் எளிதில் காட்டிக் கொடுக்கப்பட்டு வீழ்த்தப் பட்டனர். ஆனால், செஞ்சிக் கோட்டை கி.பி. 1714 இல் தில்லி ஏகாதி பத்தியத்தை எதிர்த்து நின்றது. தேசிங் (தேஜ்சிங்) மன்ன னது சுதந்திர ஆர்வம் இறுதிவரை குறையவில்லை. ஆனால் கோட்டைக்குள் இருப்பில் இருந்த எல்லாப் பொருட் களுக்கும் தட்டுப்பாடு ஏற்படும் நிலை. முடிவு முற்றுகையைத் தகர்க்க இறுதிப்போர் தொடுப்பதைத் தவிர வேறு வழி இல்லை என்ற நிலை. எதிரிக்கு அடிபணிந்து வாழ்வதைவிட மாற்றானை எதிர்த்து மோதி மடிந்து விடுவது புனிதமானது என தேசிங்கு மன்னன் முடிவு செய்தான். தனது முடிவை தனது உயிர்த் தோழன் மஹமத்கானுக்குச் சொல்லி அனுப்பினான்.

அப்பொழுது மஹமத்கான் வழுதாவூரில் மணமேடையில் இருந்தான். மங்கல வாத்தியங்கள் முழங்கிய இனிய ஓசையை மறைத்து, போர் முரசின் படபடப்பு கோட்டை மதில்களில் இருந்த போர் முரசுகள் அதிர்ந்தன. தனது வாழ்க்கைத் துணைவியின் கரம் பற்றும் மங்கல விழாக் கற்பனைகளில் ஆழ்ந் திருந்த அவனது சிந்தனையை அந்தப் போர்ப்பரணி கலைத்தது. அவ்வளவுதான் மகமத்கான் வீறு கொண்டு எழுந்தான். வாளை யும் வேலையும் அவனது கரங்கள் விரைந்து ஏந்தின. அவனது மனக்கோலம் இமைப்பொழுதில் போர்க்கோலமாக மாறியது. ஆட்டுக்கிடையிலே புகுந்த அரிமா போல போர்க் களத்தில் புகுந்தான். தனது உயிர்த்தோழனான தேசிங்கிற்கு உறுதுணை யாக நின்று போராடினான். தனது நண்பனைச் சூழ்ந்த முகலாயப் பெரும்படையைச் சின்னா பின்னமாக்கினான். என்றாலும், புற்றீசல் போல புறப்பட்டு வந்த எதிரிகளின் ராக்ஷச தாக்குதலின் முன்னால், ஆற்றலும் பேரார்வமும் மிக்க அந்த இளைஞனது போராட்டம் எடுபடவில்லை. பாரதப் போரில் வீழ்ந்த பிதாமகர் பீஷ்மரைப்போல, செஞ்சிப் போரிலே மகபத்கான் மடிந்து தியாகியானான்.[28] நாட்டுப்பற்று டனும் நட்புணர்வுடனும் போராடி மடிந்த தேசிங்கு ராஜாவின்

---

28. Srinivasachari – History of Gingi Fort,

நல்ல துணைவனாக மகமத்கானது மகத்தான தியாகத்தை மக்கள் மறுக்கவில்லை. தேசிங்கு ராஜன் கதைபாடும் நாடோடிப் பாடகர்கள் இன்னும் உடுக்கை இழந்தவனை போல இடுக்கண் களைந்த அவனது வீரவடிவை, அரிய நட்புணர்வை புகழ்ந்து பாடிக் கொண்டிருக்கின்றனர்.

தமிழ்மண்ணில், மலர்ந்து, மணம் பரப்பி காலவெளியிலே மறைந்துவிட்ட இந்த இனிய மலர்கள், காலமெல்லாம் மக்கள் மனத்தில், வரலாற்றில், மணம்பரப்பும் வாடாமலர்களாக விளங்கி வருகின்றன. நமது தாயகத்தின் சமய ஒற்றுமையையும் மனிதாபிமான உணர்வுகளையும் உந்து சக்தியாகக் கொண்டு ஆன்ம நேய ஒருமைப்பாட்டைக் கட்டிக்காக்க எழுந்த இளம் உள்ளங்கள் அல்லவா அவர்கள்!.

# 21

## சமயமும் விழாக்களும்

தமிழ்ச்சமுதாயத்தை இணைத்தும் பிணைத்தும் பற்றி பிடித்துக்கொண்டுள்ள இஸ்லாம், ஏகத்துவ நெறியை அடிப்படையாகக் கொண்டது. உருவமற்ற ஒரே பரம்பொருளை உள்ளத்தில் இருத்தி வைத்து வழிபடுவது என்பது ஒவ்வொரு இஸ்லாமியரது தவிர்க்க முடியாத ஐந்து கடமைகளில் ஒன்றாகும். தலைமுறை தலைமுறையாக, தமிழகத்தை தாயகமாப் பெற்ற இஸ்லாமியர் தங்கள் சமயத்தின் ஐந்து ஆதார நெறியினைப் பற்றி, பேணி வருகின்றனர். ஆனால் அவர்கள் வாழ்ந்து வருகிற தமிழ் மண்ணில் பல தெய்வ வழிபாடு பல நூற்றாண்டுகளாக பெரும்பாலான மக்களது சமய உணர்வாக நிலைத்து வந்துள்ளது. அதனைப் பிரதிபலிக்கும் பல விழாக்களும் ஆண்டு தவறாமல், பல ஊர்களில். பலவிதமாகக் கொண்டாடப்பட்டு வருகின்றன. குறிப்பாக, திருத்தணியில் திருப்படிவிழா, காஞ்சியில் கருடவிழா, திருவண்ணாமலையில் கார்த்திகைதீபம், கும்பகோணத்தில் குட முழுக்கு, பழனியில் தைப்பூசம், மதுரையில் சித்திரைப்பெரு விழா, இராமநாதபுரத்தில் நவராத்திரி, இராமேசுவரத்தில் மகா சிவராத்திரி, இவை போன்ற ஏராளமான பெரும் விழாக்களையும் சிறு விழாக்களையும். பார்த்து கிளர்ச்சி பெறும் பொழுது தமிழக இஸ்லாமியர்களது உள்ளத்தில் இறை நம்பிக்கை, வழிபாடு ஆகிய நிலைகளில் மாறுபாடோ குறைபாடோ ஏற்படுவது இல்லை. என்றாலும் இந்த விழாக்களின் சில அம்சங்கள் இஸ்லாமியரது விழாக்களிலும் புகுந்து இருப்பது வெளிப்படையான தொன்றாகும்.

குறிப்பாக, நபிகள் நாயகம் அவர்களது பெண் வழிப் பேரர்களான ஹுஸைன் அவர்களும் அவரது சுற்றத்தினரும் ஒரு

சேர, 10.10.668ல் அழிக்கப்பட்ட "கர்பலா[1]" படுகொலையை நினைவூட்டும் முஹர்ரம் மாத நினைவு நாட்கள் பல ஊர்களில் பெருவிழாவாக கொண்டாடப்பட்டன. அண்மைக்காலம் வரை இந்த விழாவில் முதல் பத்து நாட்களின் இறுதி நாளன்று தீ மிதித்தல், நிகழ்ச்சிக்கு பிறகு. அலங்கரிக்கப்பட்ட யானை, குதிரை, ஒட்டகம் ஆகியவற்றின் மீது மறைந்த நபிபேரர்களது நினைவுச் சின்னங்களுடனும் அலங்கார ரதத்துடன் (தாஜியா) ஊர்வலமாகச் செல்லும். இந்த ஊர்வலத்தில் இஸ்லாமியர் தங்கள் உடல் வலிமையையும் திறமையையும் எடுத்துக்காட்டும் வகையில் பல களரிகளில் ஈடுபடுவார்கள். வாள் சண்டை, மற்போர், சிலம்பம், தீப்பந்த விளையாட்டுகளுடன் மாறுவேடம் புனைந்து மகிழ்ச்சி ஊட்டுதலும் உண்டு. ஊரின் கோடியில் உள்ள குளத்தில் அந்த நினைவுச் சின்னங்களை நீரில் நனைத்து நீத்தார் விழாவை முடித்து திரும்புவது வழக்கம்.

மிக்க மனத்துயரத்துடன் அனுஷ்டிக்க வேண்டிய இந்த நினைவு நாளை, ஆரவாரத்துடன் கலகலப்பாக கொண்டாடுவதற்கு காரணம் தமிழக கோயில் விழாக்களின் பின்னணிதான் எனக் குறிப்பிட வேண்டியதில்லை. இங்ஙனம் முகரம் விழா கடந்த சில நூற்றாண்டுகளாக கொண்டாடப்பட்டு வந்துள்ளது. இன்றும், இராமநாதபுரம், இராமேஸ்வரம், காரைக்குடி, புதுக்கோட்டை ஆகிய ஊர்களில் "மகர்நோம்பு (முகர்ரம் நோன்பு) பொட்டல்" இருந்து வருவது இந்த விழாவிற்கான ஒதுக்கிடமாக அமைந்திருந்ததை நினைவூட்டுகிறது. இந்த முகர்ரம் நோன்பு பல நூற்றாண்டுகளாக தமிழில் மானோம்பு என வழங்கி வருகிறது. அதனையொட்டியே :'மானோம்புச் சாவடி" (தஞ்சாவூர்) "மானோம்புக் கிடாய்வரி" (இராமநாதபுரம்)ஆகிய புதிய சொற்கள் தமிழ் வழக்கில் வந்துள்ளன[2]. விழிப்புணர்வு காரணமாக, இந்த விழா பெரும்பாலான இஸ்லாமிய மக்களால் அண்மைக் காலங்களில் புறக்கணிக்கப்படடு விட்டன. சில ஊர்களில் மட்டும் இந்த விழா கொண்டாடப்பட்டு வருகிறது.

---

1, Philips Hitti – History of the ARABS (1970) p.190

2. Rajaram Rao T – Manual of Ramnad Samasthanam (1898) p. . 22

இந்த விழாவைப் போன்று, சில கந்தூரி விழாக்களும் தமிழகத்து இந்து சகோதரர்களின் திருவிழாக்களின் சாயலில் நடைபெற்று வருகின்றன நாகூரில் சாகுல்ஹமீது ஆண்டகை அவர்கள் கந்தூரி, ஏறுபதியில் சுல்தான் சையது இபுராகீம் ஷஹீது (வலி) அவர்கள் கந்தூரி, மதுரையில் முகையதீன் ஆண்டவர்கள் கந்தூரி ஆகியவைகள் பெரிய கப்பல், தேர் போன்ற அலங்காரங்கள் (தாஜியா) ஆரவாரத்துடனும் வான வேடிக்கைகளுடனும் ஊர்வலமாக எடுத்துச் செல்லப்படுகின்றன. பாமர மக்களின் ஈடுபாட்டைக் குறிக்கும் இந்த விழாக்கள், இஸ்லாமிய சமய உணர்வுகளையே அல்லது நெறிமுறைகளையோ, சுட்டிக் காட்டுவதில்லை. என்றாலும், இந்த விழாக்களில் இந்து சகோதரர்களும் ஆர்வத்துடனும், ஆழ்ந்த பற்றுடனும் பங்கு கொண்டு விழாக்களில் புனிதத்தை பெரிதுபடுத்துவது குறிப்பிடத்தக்கது. சென்னைப் பெருநகரில்உள்ள இந்துக்களில் ஒருபிரிவினர் இஸ்லாமியரது முகரம் நாட்களை "அல்லா பண்டிகை" என ஆரவாரத்துடன் கொண்டாடி வருவதும் இங்கு நினைவு கூரத்தக்கது.

இதனைவிட இன்னும் விசேடமான செய்தி என்னவென்றால் தமிழகத்து திருக்கோயில் விழாக்களில் இஸ்லாமியர் சம்பந்தப்பட்ட நிகழ்ச்சிகளை அமைத்து அனுஸ்டித்து வருவதாகும். உதாரணமாக, மதுரையில் ஆண்டுதோறும் நடைபெறும் சித்திரைப் பெருவிழாவை அறியாதவர் யாரும் இருக்க முடியாது. இந்த விழாவில் பிரதான நிகழ்ச்சி. அழகர்மலைக் கோவிலில் இருந்து அழகர் பெருமாள், குதிரை வாகனத்தில் மதுரை மாநகருக்கு ஆரோகணித்து வருவதாகும். தனது தங்கையான மதுரை இறைவி மீனாட்சியின் திருமண நிகழ்ச்சியில் கலந்து கொள்வதற்காக. ஆனால், மதுரையின் வட பகுதியை—வையை ஆற்றங்கரையை—அவர் அடைந்தவுடன், ஏற்கனவே, அவர் தங்கையின் திருமணம் நிறைவேறிவிட்டதாகத் தெரிவிக்கப்படுகிறது. இந்த ஏமாற்றத்தினால் அவர் மதுரை நகருக்குள் நுழையாமல் மதுரைக்கு கிழக்கே வையைக்கரையில் உள்ள வண்டியூருக்கு சென்று விடுகிறார். அங்கு தமது அன்புக் கிழத்தியான "துலுக்கச்சி நாச்சியார்" இல்லத்தில் தங்கிவிட்டு அடுத்த நாள், மீண்டும் அழகர்மலை திரும்புவதான நிகழ்ச்சி, ஒவ்வொரு ஆண்டும் சித்திரை பௌர்ணமியில் அமைக்கப்பட்டு நடைபெறுகிறது.

இந்த நிகழ்ச்சியை சற்று ஆழமாகச் சிந்தித்தால் சில உண்மைகள் தெளிவாகும். மதுரை மீனாட்சியின் திருமணம் என்பது ஹலாஸ்ய புராணத்தில்'' விவரிக்கப்படும் நிகழ்ச்சியாகும். புராண நிகழ்ச்சிகளுக்கு வரலாற்று வரம்பு - எதுவும் கிடையாது. கி.பி 1623க்கு முன்னர் அழகர் மலைக்கோவிலி இருந்து அழகர் பெருமாள் ஒவ்வொரு ஆண்டும் ஆடி மாதத்தில் புறப்பட்டு தேனூர் சென்று வரும் தீர்த்தவாரி வழக்கம் இருந்தது. இந்த நிகழ்ச்சியை மதுரைச் சித்திரைத் திருவிழாவாக மாற்றியமைத்தவர் மன்னர் திருமலை நாயக்கர் ஆவார். மதுரை வட்டாரத்தில் பெரும்பாலான மக்கள் ஆடிமாதத்தில் விவசாயப் பணிகளில் ஈடுபட்டிருப்பதால் விழாவிற்கான மாதமாக வசந்தகால சித்திரையையும், விழா நடக்கும் ஊரான தேனூருக்குப் பதில் தமது கோநகரான மதுரையையும் அவர் தேர்வு செய்து மாற்றியமைத்தார். இத்தகைய அண்மைக்கால நிகழ்ச்சியில், ''துலுக்கச்சி நாச்சியார்'' என்ற பாத்திரத்தை புராணக் கடவுளான அழகர் பெருமாளுடன் இணைத்து இருப்பது தமிழகத்து சமுதாய நிலையில் சமூக ஒற்றுமையைப் பேண வேண்டும் என்ற முன்னவர்களது உயரிய நோக்கம் போலும்! இதனைப் போன்ற இன்னொரு நிகழ்ச்சி, திருவரங்கம் திருக்கோயில் சம்பந்தப்பட்ட தொன்றதாகும். அத்துடன் சித்திரைத் திருவிழாச் சம்பந்தப்பட்ட துலுக்கச்சி நாச்சியார் கதைக்கு உரிய கருவும்கூட. இந்தக் கோவிலின் மூலவர் ரங்கமன்னாரது (அழகிய மணவாளர்) பொன்னாலான திருமேனி கி. பி. 1311ல் நிகழ்ந்த மாலிக்கபூர் படையெடுப்பின் பொழுது ஏனைய அணி மணிகளுடன் கொள்ளைப் பொருளாக தில்லிக்கு எடுத்துச் செல்லப்பட்டதாக அந்தக் கோயிலின் ஒழுகுச் செய்தி அறிவிக்கிறது.[3] ரங்க மன்னாரது திருமேனியை நாள்தோறும் தரிசித்து மகிழ்ந்த சேவிகை ஒருத்தி திருவரங்கம் அண்மையில் உத்தமர் கோயிலில் வாழ்ந்து வந்தாள். ரங்க மன்னார் திருமேனி எடுத்துச் செல்லப்பட்டதை அறிந்து, அதனை மீட்டுவதற்காக தக்க துணையாக அறுபது பேர்களை திரட்டி தில்லி சென்றாள். அங்கே தில்லி பாதுஷாவை தமது ஆடல் பாடல்களாலும், ''ஜக்கினி'' என்ற களியாட்டத்தினாலும் அகமகிழச் செய்து தங்க மன்னார் திருமேனியை பரிசுப் பொருளாக பெற்றுத்

3. Hari Rao. V. - KOIL OLUGU (1961) p. 25

திரும்பினாள்.[4] இந்த சேவிகை "பின் சென்ற வல்லி" என வழங்கப்படுகிறார். இந்த வரலாற்றின் இன்னொரு பகுதி சுவை மிகுந்ததாக இருக்கிறது.

ரங்க மன்னாரது திருமேனி தில்லியில் இருந்த பொழுது அதனைத் தனது விளையாட்டுப் பொருளாகக் கொண்டிருந்த பாதுஷாவின் மகள் நாளடைவில் அந்த திருமேனியின் அழகில் மயங்கி மானசீகக் காதல் வயப்பட்டு இருந்தாள். தனக்கு தெரியாமல், தனது தந்தையார் அந்த திருவுருவச் சிலையை ஐக்கினி ஆட்டக் குழுவினருக்கு பரிசுப் பொருளாக வழங்கி விட்டதை அறிந்து ஆறாத் துயரடைந்தாள். அதே அவல நிலையில் அவளது உயிர் பிரிந்து விடுமோ என அச்சமுற்ற டில்லி பாதுஷா அதனை மீண்டும் தேடிப் பெறுவதற்கு தில்லி யிலிருந்து தெற்கே ஒருபடையணியை இளவரசியின் பொறுப்பில் அனுப்பி வைத்தார். தங்களை இளவரசி தொடர்ந்து வருவதை அறிந்த பின் சென்று வல்லியினது சகாக்கள் ரங்கமன்னாரை திருவரங்கத்திற்கு கொண்டு செல்லாமல் வழியில் திருப்பதி மலை யில் மறைத்து வைத்துவிட்டனர். ஆனால் நேரடியாக திருவரங் கம் சென்ற தனது முயற்சியில் தோல்வியுற்ற இளவரசி, திருவரங்கத்தில் காத்து இருந்து மரணமடைந்ததாக அந்தக் கோயில் ஒழுகு கூறுகிறது.[5] இந்த புதிய "ராதையின்", திருவுருவை திருவரங்ககோயிலில் கருவறைக்கு வெளியே உள்ள மைய மண்ட பத்தின் வடகிழக்குப்பகுதியில் ஓவியமாக அமைத்து நாள்தோறும் உரிய வழிபாடுகள் செய்யப்பட்டு வருகின்றன. இந்த "துலுக்க நாச்சியாருக்கு" கோதுமை ரொட்டியும், இனிப்பு சுண்டலும் பருப்பு பாயாசமும், சிறப்பாக படைக்கப்பட்டு வருகிறது. இத்தகைய வழிபாடு திருப்பதி திருக்கோயிலிலும் நடைபெற்று வருகிறது. இவள் "**சாந்து நாச்சியார்**" "**பீவி நாச்சியார்**" "**துலுக்க நாச்சியார்**" என வைணவர்களால் பேதமில்லாமல் பெருமிதத் துடன் வழங்கப்பட்டு வருகிறார். ரங்க மன்னார் திருமேனி திருவரங்கத்தைவிட்டு அந்நியர் படையெடுப்பின் பொழுது மூன்று முறை வெளியூர்களுக்கு எடுத்துச் செல்லப்பட்டதிலும்,

4. Krishnasamy Ayyangar Dr. S. - History of South India and Mohammedan Invaders (1928) p. 114.
5. Hari Rao V. – Koil Olugu (1961) p. 27

அதனை மீண்டும் கோவிலில் பிரதிஷ்டை செய்ததிலும் முரண்பாடுகளான செய்திகள் இருந்தாலும் இந்த ''துலுக்க நாச்சியார்'' பற்றிய செய்திகளில் வேறுபாடு எதுவும் இல்லை, என்பதை திருவரங்கதோயில் ஒழுகு உறுதிபடுத்துகிறது.[6]

இத்தகைய புராணமும் வரலாறும் கலந்த இன்னொரு நிகழ்ச்சி புதுக்கோட்டை மானுவலில் இடம் பெற்றுள்ளது[7]. புதுக்கோட்டைக்கு அண்மையில் கோவில்பட்டி என்று ஒரு கிராமம் உள்ளது. இதனை யொட்டிய திருவாப்பூரில் உள்ள கன்னி ஒருத்திக்கும் திருச்சிராப்பள்ளியில் இருந்த மலுக்கனுக்கும் (இஸ்லாமிய இளைஞன்)க்கும் இடையில் மாறாத காதல் மலர்ந்தது அந்த இளைஞன் ·ஒவ்வொரு நாள் இரவிலும் திருச்சியிலிருந்து குதிரைச்சவாரி செய்து வந்து தனது காதலியைச் சந்தித்துச் செல்வது வழக்கம். இந்த இளம் உள்ளங்களது காதல் அங்கு காவல் தெய்வமாக விளங்கிய ''மலைக்கறுப்பருக்குப்'' பிடிக்கவில்லையாம். தமது எல்லையில் களவொழுக்கத்தில் திளைத்து வந்த மலுக்கனை ஒருநாள் இரவு மலைக்கறுப்பர் கொன்றுவிட்டார். மீளாத் துயரில் ஆழ்ந்த அந்தக்கன்னி தனது இதயக்கோவிலின் தெய்வமாக விளங்கிய அந்த இசுலாமிய இளைஞனுக்கு அவன் கொலையுண்ட இடத்தில் ஒரு நினைவுச் சின்னம் அமைத்தாள். அது நாளடைவில் கோவிலாக மாறி இன்று **மலுக்கன் கோவில்** என வழங்கப்படுகிறது.

மதுரை மாநகரில் நடைபெறும் இன்னொரு திருவிழா, சொக்கநாதக் கடவுள் திருவாதவூரடிகளுக்காக நரிகளை பரிகளாக்கிய திருவிளையாடல். ஆண்டுதோறும் ஆவணித் திங்கள் மூல நட்சத்திர நாளன்று, இந்தத் திருவிழா மதுரை மீனாட்சி சுந்தரர் கோயிலில் நடைபெறுகிறது. மாணிக்க வாசகருக்காக கிழக்கு கடற்கரையில் இருந்து குதிரைகள் கொண்டு வந்த அரபு வணிகருக்குப் பதிலாக இசுலாமியர் ஒருவரைக் குதிரை கொண்டு வரச் செய்து விழா நடத்தும் பழக்கம் அண்மைக்காலம் வரை அந்தக் கோயிலில் இருந்து வந்தது. அதைப்போல இராமநாதபுரம் அரண்மனையில் உள்ள சேதுபதி மன்னர்களது குடும்பக்

6. Ibid p. 28
7. Venkatarama Iyer K.R. - Manual of Pudukottai State (1938) vol. I

கோயிலான ராஜராஜேஸ்வரி ஆலயத்தின் நடைபெறும் நவராத்திரி பூசையின்பொழுது, பிரசாதத்தை முதன்முதலில் பெறக்கூடிய தகுதி கன்னிராசபுரம் நாட்டாண்மை அப்துல்கனி சேர்வைக்கு இருந்து வந்தது. சேதுபதி மன்னருக்கு எதிரான போர் ஒன்றில் அப்துல்கனி சேர்வைக்காரர் ஆற்றிய அருந்தொண்டினைக் சிறப்பிக்கும் வகையில் அத்தகைய தனிச் சிறப்பினை முத்துராமலிங்க விஜயரகுநாத சேதுபதி மன்னர் வழங்கி இருந்தார்..[8] இப்பொழுது சேதுபதி மன்னரும் இல்லை. இந்த மரபும் கைவிடப்பட்டுவிட்டது.

இன்னொரு செய்தி இராமநாதபுரம் சீமையில் உள்ள குணங்குடி சையது முகம்மது புகாரி(வலி) அவர்களது தர்காவின் பராமரித்து வரும் உரிமை, அந்த ஊருக்கு அண்மையில் உள்ள துடுப்பூர் அம்பலக்காரர் என்ற இந்துக் குடும்பத்தினருக்கு இருந்து வருவது. தமிழ்நாட்டில் வேறு எங்கும் இல்லாத அறங்காவலர் முறையாகும். தமிழகத்தில் முஸ்லீம்களுக்கும் இதர சமயத்தைச் சேர்ந்தவர்களுக்கும் வழி வழியாக வந்துள்ள பிணைப்பிற்கு இதைவிட சிறந்த எடுத்துக்காட்டு வேறு என்ன வேண்டும். இந்தப்புனித அடக்கவிடத்தின் பராமரிப்பிற்கு உடலாக என்றென்றும் உதவுவதற்கு இராமநாதபுரம் மன்னர்கள் திருமலைரகுநாத சேதுபதியும், ரகுநாதகிழவன் சேதுபதியும் பல நிலமான்யங்களை வழங்கியுள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது.)

---

8. இந்தச் செய்தியை அன்புடன் தெரிவித்தவர் சேதுபதி மன்னர் வழியினரான முன்னாள் பாராளுமன்ற உறுப்பினர் இராமநாதபுரம் திரு. ஆர். காசிநாததுரை அவர்கள்.

# 22

## கட்டுமானங்கள்

தமிழக இஸ்லாமியர்களான சோனகர்கள் தமிழ்ச் சமுதாயத்தில் வாணிபச் செருக்கினாலும், அரசியல் ஊக்குவிப்புகளாலும், வேறு எந்த நாட்டாரும் தமிழகத்தில் எய்தாத, எய்த இயலாத இலக்கிற்கு வளர்ந்து உயர்ந்து நின்றதை வரலாற்றில் பார்க்கிறோம். இந்த வளர்ச்சியின் சாயல் அவர்கள் வாழ்ந்த தமிழகத்தின் நிலையான வாழ்க்கையின் பல கோணங்களிலும் பிரதிபலித்து நின்றதை அந்தக் கால கட்டத்தின் கட்டுமானம். மருத்துவம், கைவினைக் கலைகள், இலக்கியம் ஆகியவற்றில் காணமுடிகிறது. அவர்களது மாளிகைகள் மேனிலை மாடங்களுடன் கூடிய உன்னதமாக உயர்ந்து காணப்படவில்லை. வானது நாணும் படியாக அவர்களது கொடைத்திறன் தான் உயர்ந்து விளங்கியது. ஆனால் அவர்கள் வலசையாக வாழ்ந்த மனைகளில் தூய்மையும் எளிமையும் இணைந்து துவங்கின. ''சோனக மனையிற்றூய ... ...'' என்பது கம்பன் வாக்கு.[1] என்றாலும், எல்லாம் வல்ல இறைவனை வழிபடுவதற்கான தொழுகைப் பள்ளிகளையும் இறைநேசர்களது அடக்க விடங்களையும் அவர்கள் சிறப்பாக அமைத்து மகிழத் தவறவில்லை. புதிய சமயத்தில் அவர்களுக்கு உள்ள அளவு மீறிய ஆர்வத்தையும் அவைகள் பிரதி பலித்தன.

தமிழகத்தைப் பொறுத்தமட்டில் இந்த அமைப்புகள், அதுவரை கட்டுமானக் கலையில் புகுத்தப்படாத புதிய உத்திகளையும், நிலைகளையும் சுட்டிக்காட்டின. நாளடைவில், அவை

---

1. கம்பராமாயணம் – சுந்தர காண்டம் – ஊர்தேடு படலம். பாடல் எண். 112 (207)

களில், மத்திய ஆசிய இஸ்லாமியரது கலைத் திறனும், கீழை நாட்டு திராவிட கலைப்பண்பாடுகளும் இணைந்து நிலை கொண்டன. சோழர்களால் துவக்கப்பட்ட குடவரை, செங்கப் படை, சிறு கற்றளி, குடவரை அமைப்புக்கள், பிற்கால பல்லவர், பாண்டியர், நாயக்கர், பாணியில் எழுநிலை மாடங்களுடன் கூடிய விண்ணகரங்களாக உயர்ந்தன. ஆனால், இந்தச் சோனகர் களது பாணியிலான கட்டுமானங்கள் அளவில் சிறியவையாக வும் அழகில் சிறந்தனவாகவும் அமைந்தன. குறிப்பாக இந்த கட்டுமானங்களின் ''வளைவுகள்''. ''உள்ளொடுங்கிய விதானங் கள்'' உப்பரிகை மாடங்கள் போன்ற உத்திகள் புதுமையானவை யாக தோற்றுவிக்கப்பட்டன. தமிழக கட்டுமானங்களில் அது வரை அவை இடம் பெற்று இருக்கவில்லை.

பொதுவாக தமிழக கட்டுமானங்களில் – வாயில், முகப்பு, சாளரம் போன்ற அமைப்புகள் நேராக நிறுத்தப்பட்ட இரண்டு சட்டங்கள் நிலைகளுக்கிடையில் பிறிதொரு சட்டத்தை குறுக்கில் இணைத்து பொருத்தப்பட்டன. இவை தலைகீழாக எழுதப்பட் டுள்ள ''ப்''எழுத்துப் போன்று (ㄇ) காட்சியளித்தன. இத்தகைய, இணைச்சட்டம் இல்லாமல் அமைக்கப்படும் கட்டிடங்களை கும்பாஸ் அல்லது கும்பா என்று அழைப்பது உண்டு. இந்த முறையில் நிர்மாணிக்கப்பெறும் கட்டிடங்களது உட்பகுதி காற்று அழுத்தம், காற்றுக்குறைவு அல்லது புழுக்கம் ஆகியவைகள் குறைந்ததாக இருந்தது. மேலும், இத்தகைய கட்டிடங்களின் பக்கவாட்டுச் சுவர்களுக்கு பாரமான கற்பாளங்களைத் தாரிசா கத் தாங்க வேண்டிய நிர்பந்தமும் குறைவு. இந்த கட்டுமானங் களில் பிறிதொரு முறையும் கையாளப்பட்டது. அவைகளில் வளைவு அல்லது குதிரை லாட வளைவு எனப்படுவதாகும்.

துவக்கத்தில் இந்த வளைவான அமைப்புகள் தமாஸ்கஸ் நகரப் பள்ளிவாயிலில், கி.பி. 705ல் அல்வாலித் என்ற இஸ்லாமிய சிற்பியால் ஏற்படுத்தப்பட்டன.[2] பிறகு இஸ்லாமியர் ஒன்பதாம் நூற்றாண்டில் ஸ்பெயின் நாட்டை வெற்றி கொண்டு ஆட்சி செய்த பொழுது, அங்கு இந்த முறை பரந்த அளவில் கடைப் பிடிக்கப்பட்டது. காலத்தையும் வென்று காட்சியளித்துக் கொண் டிருக்கும் அந்தக் கலைப்பேழைகளான கட்டிடங்களை இன்றும்

---

2. Philip K. Kitti – History of Arabs (1977) p. 265

ஸ்பெயின் நாட்டின் நகரங்களான கிரானடா, செரவில், கார்டபோ' ஆகிய நகரங்களில் கண்ணாரக் காணலாம். ஐரோப்பிய பிரபுக்கள் மாளிகைகளிலும் தேவாலயங்களிலும் இந்தப் புதிய முறை ''மூரிஸ் பாணி'' என்ற பகுப்புடன் பின்பற்றப்பட்டது. அங்கிருந்து உலகின் பல நாடுகளிலும் இந்த புதிய முறை, கட்டுமானங்களில் பின்பற்றப்பட்டது. ஸிரிய – எகிப்திய, இந்திய – பெர்ஸிய, இந்திய–சீன பாணிகள் எனக் குறிக்கப்பட்டவைகளில் இவை ஊடுருவி நிற்கின்றன. ஏற்கனவே அந்தந்தப் பிராந்தியங்கள், நாடுகளின் நடைமுறையில் உள்ள கட்டுமான முறையில், இஸ்லாமியரது இந்தப் புதிய உத்திகளும் கலந்து பொலிவதுதான் மேலே சொன்ன பாணி அல்லது பகுப்பு என்பதாகும். நமது நாட்டுக் கட்டுமானங்களை பொறுத்த வரையில், ஆசிரியர் ஜான் ம்ார்ஷல், ''இந்த இருவகையான பாணிகளுக்கும் பொதுவான இணைப்பை ஏற்படுத்துகின்ற ஆதாரமான தன்மை, இஸ்லாமிய இந்து கலை அழகை உள்ளடக்கியவை என்ற உண்மைதான். ஒன்றைப்போன்று மற்றொன்றிலும் அலங்காரம் முதன்மையானது. இருமுறைகளும் தங்களது மாட்சிக்கு அதனையே சார்ந்துள்ளன. ''எனக் குறிப்பிட்டிருப்பது இங்கு சிந்திக்கத்தக்கதாக உள்ளது. வானளாவிய கோபுரம் போன்ற கட்டுமானங்களில் ''மினாரத்'' என்ற புதிய அமைப்பும் இஸ்லாமிய கட்டுமான முறையாகும். இந்த மினாராக்கள் தரைமட்டம் முதல் சிகரம் வரை ஒரே சீராகவோ அல்லது கீழிருந்து மேலே செல்லச் செல்ல குறுகலாகவோ அமைப்பதும் உண்டு. அதற்கான உள் கூட்டு பாதையும் மினாராவிற்குள்ளாக அமைக்கப்பெறும். இந்த வகை ஸ்தூபிகளை பள்ளிவாயில்களில் முதன் முறையாக கி.பி. 673இல் பயன்படுத்தியவர் கலிபா முஆவியா என்பவர். இந்தக் கட்டுமானங்களில், வண்ணமும் அழகும் பொருந்தி வழிந்து நிற்பதற்கான புதிய வகையொன்றையும் அவர் ஏற்படுத்தினார். மேலும் கட்டுமான அலங்காரங்களில் மனித, மிருக தோற்றங்களை சேர்த்தல், இசுலாமிய கோட்பாடுகளுக்கு . முரணானதென்ற காரணத்தால் அவைகளை தவிர்ப்பதற்கு வண்ணக் கண்ணாடிகளைப் பதித்து அழகுப்படுத்தும்முறை ''மொஸாயிக்'' என வழங்கப்பட்டது. இந்த முறை கி. பி. 684ல் அல் ஸுபைர் என்பவரால் புகுத்தப்பட்டது.[3]

3. பிறையன்பன் – கலையும் பண்பாடும் (1962) பக் 99

மேலே கண்ட புதிய அமைப்பு முறைகளைக் கொண்ட பள்ளி வாயில்களையும் தர்காக்களையும் தமிழகத்து இஸ்லாமியர் அப்பொழுது பெரும்பான்மையினராக வாழ்ந்த பட்டினங்களில் நிர்மாணித்து வந்தனர். ஆனால், அவைகளை இன்று காண்பது அரிதாக உள்ளது. எனினும், காலத்தின் சீற்றத்திற்கும், ஆட்சியாளரின் அழிமானத்திற்கும் அப்பாற்பட்டதாக, இன்றும் நிலைத்துள்ள சில தொன்மையான அமைப்புகளை இங்கு பார்ப்போம். திருச்சிராப்பள்ளியில் உள்ள பழமையான பள்ளிவாசல் ஒன்றில் இஸ்லாமியரின் வில் வளைவுகளைக் காணலாம். இந்தப் பள்ளிவாயில் கி. பி. 714ல் நிர்மணிக்கப்பட்டது.[4] திருச்சிராப்பள்ளி கோட்டை ரயில் நிலையத்திற்கு அண்மையில் இன்று சிதைந்த நிலையில் இந்தப் பள்ளிவாசல் காட்சியளித்துக் கொண்டிருக்கிறது. அந்தக்காலக்கட்டத்தில் பிரபலமாக இருந்த அமணப் பள்ளியின் வடிவில், மிகவும் சிறியதாக முழுவதும் கல்லினால், அமைக்கப்பட்டுள்ளது. ஹாஜி அப்துல்லா-பின்--ஹாஜி அன்வர் என்பவரால். அப்பொழுது அங்கு சிறுபான்மையினராக வாழ்ந்த இஸ்லாமியரது வழிபாட்டுத் தலமாக அந்தப்பள்ளி நிர்மாணிக்கப்பட்டதாக தெரிகிறது. இஸ்லாமிய கட்டுமானக் கலையின் ஒரு சிறு பிரதிபலிப்பு இந்தப்பள்ளியின் அமைப்பு என்று இதனைக் கொள்ளலாம்.

இன்னொரு பழமையான பள்ளி, தமிழக வரலாற்றில் குறிப்பிடப்பட்டுள்ளது. ''கீட் செம்பி நாட்டு பவித்திர மாணிக்கப் பட்டினத்துக்கீழ்பால் சோனக சாமந்தப்பள்ளி'' யாகும். பிற்காலப் பாண்டியரது பேராதரவில் சிறந்து இருந்த சோனகர் ஒருவர் நிர்மாணித்த இந்தப் பள்ளிக்கு, நிவந்தமாக ஆம்புத்தூர், மருதூர் முதலிய கிராமங்களை திருப்புவனச் சக்கரவர்த்தி கோனேரின்மை கொண்டான் என்ற பாண்டியப் பேரரசன் கி.பி. 1276ல் வழங்கிய ஆணை யொன்றில் இந்தப் பள்ளி குறிக்கப்பட்டுள்ளது.[5] கொழும்புவிலிருந்து மாலத்தீவு நோக்கி பயணமான உலகப் பயணி இபுனுபதூதாவின் கப்பல் மன்னார் வளைகுடாவில் பாறை ஒன்றில் மோதி பயணம் தடைப்பட்டதால்

---

4. ஹமீது கே.பி.எஸ். – இரண்டாவது இசுலாமிய தமிழ் ஆராய்ச்சி மாநாட்டு மலர் (1973) பக். 308 310

5. A.R. 116/1903 திருப்புல்லாணி.

இராமநாதபுரம் கிழக்கு கரையில் உயிர் தப்பி கரை ஏறினார். பின்னர், மதுரை சுல்தானது உதவியுடன் தனது பயணத்தைத் துவக்குவதற்கு முன்னர் சில நாட்கள் மதுரையிலும் பின்னர் ''பவித்திர மாணிக்கப்பட்டினத்திலும்'' தங்கினார். கி.பி. 1344ல் இந்தப்பட்டினத்தை அவர் அரபு மொழியில் சுருக்கமாக ''பத்தன்'' என்று குறிப்பிட்டு இருப்பதுடன் அந்தச் சோனக சாமந்தப்பள்ளியை ''முற்றிலும் கல்லாலான அழகிய பள்ளி'' என தமது குறிப்புகளில் வரைந்துள்ளார்.[6] இன்றைய திருப்புல்லாணி கிராமத்திற்கு அண்மையில் உள்ள பெரியபட்டினம் என்ற ஊரில் உள்ள கல்லாலான பள்ளியைத்தான், அவர் அங்ஙனம் குறித்திருக்க வேண்டும் என்பது வரலாற்று ஊகமாகும். இதற்கு பொருத்தமான பலதடையங்கள் அங்கே உள்ளன.[7] பதின்மூன்று பதினான்காம் நூற்றாண்டுகளில் சிறப்புற்று இருந்த இந்த கடற்துறை, கடந்த ஆறு நூற்றாண்டுகளில், காலக்கோளினால் சிதைந்து பூம்புகாரைப்போன்று சிற்றூராக சிறுமையுற்றதினால் அங்குள்ள இந்தப் பள்ளி சிதைந்து புறத்தோற்றத்தில் மாற்றங்களுடன் தொழுகைக்கூடம் மட்டும் அப்படியே இருந்துவருகிறது. அங்கு இடம் பெற்றுள்ள பதினெட்டு கல்தூண்களை மட்டும், ஆதாரமாகக் கொண்டு அந்தப் பள்ளியின் கட்டுமான வகையை கணிப்பது இயலாத ஒன்றாகும். ஆனால் அந்த தூண்களின் அமைப்பில் இருந்து அந்தப் பள்ளிவாசல் தொன்மையானது என்பது மட்டும் உறுதியாகிறது.

இதே காலக்கட்டத்தைச் சேர்ந்த இன்னும் இரண்டு பள்ளி வாசல்கள் பாண்டியரின் தலைநகரான மதுரையில் உள்ளன. முதலாவது மதுரையின் தென்மேற்கு மூலையில் உள்ள காஜிமார் தெருவில் உள்ள சிறிய தொழுகைப் பள்ளியாகும். பாண்டியன் மாறவர்மன் சுந்தரபாண்டியன் ஆட்சிக் காலத்தில் நிர்மாணிக்கப்பட்ட தென்றும், இதனைப் பராமரிக்க அந்த மன்னனால் மதுரையை அடுத்துள்ள விரகனூர் புளியங்குளம் வழங்கப்பட்

6. Nilakanta Sastri-Foreign Notices of South. India (1972) p. 281.

7. கமால் எஸ்.எம். – தமிழக வரலாற்று கருத்தரங்கு (1978) பக்கம் : 308 : 310

டுள்ளது, என்றும் தெரிய வருகிறது.[8] பள்ளியின் கட்டுமானம் நீண்ட சதுர வடிவில் திராவிட கட்டுமான பாணியில் அமைக்கப் பட்ட கல்தூண்களுடன் காட்சி அளிக்கிறது. ஏற்கனவே அங்கு அமைக்கப்பட்ட பள்ளி சிதைவுற்றதால், அங்கு நாயக்கர் ஆட்சி யின் பொழுது இந்தக் கட்டுமானம் அமைக்கப் பெற்றிருத்தல் வேண்டும். மற்றது மதுரைப் பெருநகரின், வைகை ஆற்றில் வட கரைக்கு அணித்ததாக உள்ள கோரிப்பாளையம் சுல்தான் அலாவுதீன் அவர்களது தர்காவாகும். கி.பி. 1050ல் மாலிக்-உல் முல்க் என்ற தளபதியுடன் சமயப் பணிக்காக மதுரை வந்த ஹஜரத் சுல்தான் அலாவுத்தீன் என்ற இறை நேசரின் அடக்க இடத்தின் மீது கட்டப்பட்டுள்ள கட்டுமானமாகும். இதனை சுல் தான் அலாவுதீன் தர்கா என மக்கள் வழங்கி வருகின்றனர். இஸ்லாமிய கட்டுமான முறையில் கீழே விரிந்து மேலே சுருங்கிய கும்பாஸ் (குப்பா) அமைப்பில் காட்சியளிக்கிறது தரைமட்டத் திலிருந்து இருபத்து இரண்டு அடி உயரத்தில் முடிவு பெறும் இந்த கும்பாஸ் அறுபத்து ஒன்பது அடிசுற்றளவில் சுமார் பன்னி ரண்டு அடி உயரத்தில் அமைக்கப்பட்டுள்ளது. மேலும் இந்த கும்பாஸ் முழுவதும் ஒரேகல்லால் அமைக்கப்பட்டதாக குறிக் கப்பட்டுள்ளது.[9] இத்தகைய கும்பாஸ் முறை அடக்கவிடங்கள் கீழக்கரை ஜாமியா மஸ்ஜிது பள்ளியின் எதிர்புறத்திலும், ஏறுபதி சுல்தான் இப்ராகிம் ஷஹீது (வலி) அடக்கவிடத்திலும், இராம நாதபுரம் நூர்சாகிப் (வலி) அடக்கவிடத்திலும், புதுக்கோட் டைக்கு அண்மையில் காட்டுபாவா சாகிபு அடக்க விடத்திலும் உள்ளன. மற்றும் தொண்டி திறப்புக்காரர் தர்கா, புனித சேகு அபுபக்கர் சாயபு, முத்துராமலிங்கப்பட்டினம் புனித சையது முகம்மது சாயபு, பாசிப்பட்டினம் புனிதநெய்னா முகம்மது சாகிபு தர்கா, கோட்டைப்பட்டினம் புனித ராவுத்தர் சாயபு. முத்துப்பட்டினம் புனித சேகு தாவுது, அதிராம் பட்டினம் புனித ஹாஜா அலாவுதீன் அடக்க இடங்களும் கும்பாஸ் முறையிலேயே அமைக்கப்பட்டுள்ளன. மற்றும் இவை பிற்காலத்தில் – சுமார் மூன்று நூற்றாண்டு கால இடைவெளியில் நிர்மாணிக்கப் பட்டவை.

---

8. Hussaini S.A.Q. Dr. History of Pandia Kingdom (1952) p. 55
9. Hursaini. S. A. Dr – History of Pandiya Kingdom (1952)

அடுத்து, காயல்பட்டினத்தில் உள்ள பழைய குத்பா பள்ளி வாசல் அமைப்பும் தமிழக இஸ்லாமியரது தொன்மையான அமைப்பில் ஒன்றாகும். இந்தப்பள்ளி முழுவதும் கல்லால்அமைக் கப்பட்டுள்ளது. சதுர வடிவில் உள்ள இந்தப்பள்ளியில் வளைவு களோ, கும்பாஸ் விதானங்களோ, மினரட்டுகளோ இல்லாமல் எளிமையாக அழகுடன் காட்சியளிக்கிறது. காயலில் பாண்டி யன் மாறவர்மன் குலசேகரனது (கி.பி. 1274–1310) பேரவையில் பிரதான அலுவலராக விளங்கிய பெரு வணிகர் சுல்தான் ஜமா லுத்தீன் என்பவரால் பதின்மூன்றாம் நூற்றாண்டின் இறுதியில் இந்தப் பள்ளி நிர்மாணிக்கப்பட்டதாகும். அவர், அரபு நாட்டில் இருந்து காயல்பட்டினத்தில் குடியேறியவரானாலும், அப்பொழு தைய நடைமுறையில் இருந்த ''மூரிஸ்'' முறையைப்பின்பற்றி இந்தப் பள்ளியை அமைக்கவில்லை. அதற்கான காரணம்என்ன என்பதும் புலனாகவில்லை.

மற்றும், இராமேஸ்வரத்தில் உள்ள தொழுகைப்பள்ளி, வரலாற்றுதொன்மை வாய்ந்தது ஆகும். இதனை கி.பி. 1311 ல் தென்னக படையெடுப்பின் இறுதி நிகழ்ச்சி என குறிப்பிடத் தக்க வகையில் தில்லி பேரரசர் அலாவுதீன் கில்ஜியின் தளபதி மாலிக் கபூர் அமைத்தார்.[10] கி. பி. 1318 ல் அங்கு மற்றொரு படையெடுப்பிற்கு தலைமை தாங்கிச் சென்று தில்லி திரும்பிய தளபதி குஸ்ருகான் அந்த பள்ளியில் மராமத்து பணிகளை மேற்கொண்டதாக வரலாற்றுக் குறிப்புகளில் காணப்படு கிறது.[11] இந்தச் சிறு பள்ளிவாயில் முழுவதும் கல்லினால் அமைக்கப்பட்டு நீண்ட சதுர வடிவில் உள்ளது. வழிபாட்டு பேரவையை உள்ளடக்கியதாக முகப்பிலும் தெற்கிலும் வடக் கிலுமாக நீண்ட பத்திகளுடன் விளங்குகிறது. இன்ன பாணி யிலான கட்டுமானம் எனக் குறிப்பிடும் வகையில் அங்கு எவ்வித நுணுக்கமான வெளிப்பாடுகள் எதுவும் இல்லை. தளபதி மாலிக்–காபூரின் படையெடுப்பின் பொழுது, சுருங்கிய காலததில் அவசரப்பணியாக இந்தக் கட்டுமானத்தை அமைத்திருக்க வேண்டும் என்பதே இதற்கு தெளிவான விடை.

---

**10.** Krishnasami Ayyangar Dr. S. – Soulth India and her Mohammedan Invaders (1924)

**11.** Elphinstone – History of India p. 340

அடுத்து, குறிப்பிடப்பட வேண்டிய பள்ளி, கீழக்கரையில் உள்ள ஜாமியா மஸ்ஜீது என அழைக்கப்படும் தொழுகைப் பள்ளியாகும். அங்கு தொழுகைப் பள்ளிகள் பல இருந்த பொழுதிலும், வரலாற்றுச் சிறப்பும் கட்டுமானச் செறிவும் கலந்து விளங்குவது – இந்த பள்ளிவாசல் ஒன்றேதான். ஏன் தமிழகத்திலேயே இத்தகைய கலைப் பேழையாக விளங்கும் பள்ளிவாசலை வேறு எங்கும் காண முடியாது! பதினேழாம் நூற்றாண்டின் திராவிட கட்டுமான பணிக்கு கட்டியம் கூறும் இந்தக் கலைப் படைப்பை இஸ்லாமிய உலகிற்கு காணிக்கையாகத் தந்தவர் காலமெல்லாம் புகழப்படுகிற வள்ளல் சிதக்காதி என்ற ஷெய்கு அப்துல் காதர் மரைக்காயரும் அவரது இளவல் பட்டத்து அபுபக்கர் மரக்காயரும் ஆவர். நீண்ட சதுர வடிவில் நான்கு சுவர்களும், இருபத்து நான்கு தூண்களும், விதானமும் – அனைத்தும் நல்ல வெள்ளைப்பாறைக் கல்லால் வடிவமைக்கப் பட்டு விளங்குகின்றன. ஆலயங்களில் உள்ள திருச்சுற்றாலை போன்று கம்பீரமாகக் காட்சியளிக்கும் இந்த அமைப்பில், சிற்பிகளின் கைத்திறன் சிற்றூண்கள் சாளரம், அனைத்திலும் கனிந்து ஒளிர்கின்றது. இவைகளில் இஸ்லாமிய சமய கோட் பாடுகளுக்கு இணங்க உருவங்கள் எதுவும் இல்லாமல் மலர்கள், கொடிகளுடன் அமைக்கப்பட்டு இருப்பது குறிப்பிடத் தக்கதாகும்.

வரலாற்றுத் தொடர்புடைய இன்னொரு இஸ்லாமிய கட்டுமானம் நாகூரில் உள்ள புனித சாகுல்ஹமீது ஆண்டகையின் அடக்க இடமாகும். இந்த இறைநேசரிடம் முழுமையாக, ஆன்ம பூர்வமாக ஈடுபட்டு, அடிமையாகிவிட்ட, தஞ்சை மன்னர் பிரதாபசிங், இந்தக் கட்டிடத்தை நிலையான அன்புக் காணிக் கையாக அமைத்து முடித்து இருக்கிறார். அங்கு காணப்படும் கல்வெட்டு ஒன்றிலிருந்து இந்தக் கட்டுமானம் முழுவதும் பதினேழு நாட்களில் கி.பி. 1757 ல் அமைத்து முடிக்கப்பட்டதாகத் தெரிகிறது.[12] இவ்வளவு குறுகிய காலத்தில் அமைக்கப்பட்ட இந்த பிரமாண்டமான கட்டுமானத்தில் கலை நுணுக்கமான உத்தி எதனையும் எதிர்பார்த்தல் இயலாத ஒன்று. என்றாலும், இந்த தர்காவை ஒட்டி எழுப்பட்டுள்ள ஏழு கொடி மாடங்களும்

---

12. Sewell - List of Copper plates

தமிழக கட்டுமானக் கலைக்கு புதுமையானவை. உலகில் இத்தகைய கொடி மாடங்கள் முதன்முறையாக ஸிரிய நாட்டில், ஏழாவது எட்டாவது நூற்றாண்டுகளில் கண்காணிப்பு மேடை போன்று உயரமாக எழுப்பப்பட்டன.[13] அதனையொட்டி, பின்னர், கிறிஸ்தவ தேவலாயங்களில் சதுர வடிவில் மணிக் கூண்டுகளாக, உயரமாக, அமைக்கப்பட்டன. பிற்கால இஸ்லாமிய கட்டுமான அமைப்பான 'மினாரா'க்களுக்கு இத்தகைய கட்டுமானமே முன்னோடியாகும்.

பத்தொன்பது நூற்றாண்டுகளில் அமைக்கப்பட்ட இஸ்லாமிய கட்டுமானங்களில் மீண்டும் இஸ்லாமிய உத்திகள் தேங்கி மிளிர்கின்றன. காரணம் அப்பொழுது தமிழகத்தில் பெரும்பகுதி ஆற்காட்டு நவாப்பின் ஆதிக்கத்தில் இருந்தது. அதனால் அரசியல் ஆதரவுடன் அமைக்கப்பட்ட அந்த கட்டுமானங்களில் இஸ்லாமிய உத்திகள் பரவலாகப் பயன்படுத்தப்பட்டன. அவைகளை நன்கு அறிந்து இருந்த சிற்பிகளும், கல்தச்சர்களும் அப்பொழுது தமிழகத்தில் ஏராளமாக இருந்தனர். சென்னை சேப்பாக்கத்தில் உள்ள ஆற்காட்டு நவாப் மாளிகை போன்ற ஓரிரு கட்டுமானத் தொகுதிகளைத் தவிர ஏனையவை அனைத்தும் இறைவழிபாட்டிற்காக ஆங்காங்கு அமைக்கப்பட்ட தொழுகைப் பள்ளிகளாகும். சென்னைப் பெருநகரிலும், தஞ்சை, திருச்சிராப் பள்ளி, மதுரை, இராமநாதபுரம் திருநெல்வேலி பகுதிகளில் உள்ள பெரும்பாலான தொழுகைப் பள்ளிகள் இந்தக்கால கட்டத்தையும், வகையையும் சேர்ந்தவையாகும்:

இன்னொரு அற்புதமான படைப்பு காயல்பட்டினத்தில் உள்ளது. தமிழகத்தில் வேறு எங்கும் காணப்பெறாத இஸ்லாமிய கட்டுமான கலைச் சின்னத்தை கி.பி. 1865ல் பாக்தாத் மௌலானா எனஅழைக்கப்பட்ட சமயச் சான்றோர் நிர்மாணித்துள்ளார். பாக்தாத்திலிருந்து காயல்பட்டினத்திற்கு குடிபெயர்ந்த அவர் அந்தக்கால கட்டத்தில் சுமார் நாற்பதினாயிரம் ரூபாய் செலவில் ஆறு வருட காலத்தில் இதனை கட்டி முடித்துள்ளார்.[14] இஸ்லாமியரின் ஞான மார்க்கமான காதரியா

---

13. Philips H. Kitty–History of the Arabs (1972) p. 265

14. சையது அஹமது எம்.கே. ஹாபிஸ் இஸ்லாமிய தமிழ் இலக்கிய கட்டுரைக்கோவை (1978) பக் 234.

தர்க்காவை பின்பற்றுபவர்கள், ஒன்று கூடி அமர்ந்து திவ்விய நாம பாராயணம் (திக்ரு) செய்வதற்குப் பயன்படும் பொது மண்டபமாக இதனை அமைத்தார்.

தமிழக கட்டுமானக் கலையில் முழுமையான இஸ்லாமியப் பகுப்பினைப் பறைசாற்றும் பாணியில் விளங்குகின்ற இந்த வில் விதமான மண்டபம், நாற்பத்து இரண்டு அடி உயரமும் நூற்று இருப்பத்தாறு அடி உட்புறச் சுற்றளவும் கொண்டதாக கவிக் கப்பட்ட தேங்காய் மூடி போன்ற அமைப்பில் காணப்படுகிறது. உட்புறத்தில் எவ்வித விட்டங்களோ, சட்டங்களோ பயன்படுத் தாமல் "கும்பாஸ்', அமைப்பாக உள்ள இதனை "மஹ்ழறா" என அழைத்து வருகின்றனர். கூடும் இடம் என்ற பொருளில் உள்ள அரபுச் சொல்லான மஹ்ழறா.[15] தமிழில் வழங்கப்படுகிற பல அரபுச் சொற்களைப் போன்று இந்த கட்டுமானமும் அரபுச் சொல்லில் மாற்றம் இல்லாமல், அப்படியே இன்றும் வழங்கப் பட்டு வருகிறது.

ஆனால், திண்டுக்கல் பேகம்பூரில் உள்ள தொழுகைப் பள்ளிவாசல் மட்டும் மேலே கண்ட பகுப்புகளில் வரையறுக்க முடியாததாகும். காரணம் இந்தப் பள்ளிவாசலை நிர்மாணித்த வர், மைசூர் அரசரது ஆட்சியின் ஒரு பகுதியாக இருந்து வந்த. அந்தப் பாளையத்தின் ஆளுநகராக விளங்கிய செய்யது சாகிபின் மனைவியும் திப்புசுல்தானின் அத்தையுமான அம்ருன்னிஸா பேகத்தின் நினைவாக அந்த தர்காவும் தொழுகைப் பள்ளியும் நிர்மானிக்கப்பட்டது. அவைகளின் பராமரிப்பிற்காக 360 ஏக்கர் கொண்ட நிலத்தையும் மேட்டுப்பட்டி கிராமத்தையும் மன்னர் திப்புசுல்தான் அளித்தார்.[16] இந்தப் பள்ளியும் இஸ்லாமிய கட்டுமானத்திற்கு ஏற்றதொரு எடுத்துக் காட்டாக எளிய அழகிய மிடுக்கான தோற்றத்துடன் விளங்குகிறது.

இந்தக்கால கட்டத்தைச் சேர்ந்த இன்னொரு பழமை யான அமைப்பு சென்னைப் பெருநகரில் சேப்பாக்கம் கடற் கரையோரம் உள்ள நவாப் வாலாஜா முகம்மது அலியின் மாளிகை ஆகும். ஆற்காட்டிலிருந்து தமது இருப்பிடத்தை

5. Ibid
6. Board's Misc. Register. 1811.

சென்னைக்கு மாற்றிக் கொண்ட நவாப் முகம்மது அலி அப்பொழுது சென்னைக் கடற்கரையில் அமைக்கப்பட்டிருந்த ஆங்கிலேயரின் பண்டகசாலையினையும் கோட்டையையும் அடுத்து கி.பி. 1763ல் இந்த அழகு மாளிகையை அமைத்தார்.[17] பற்பல தொகுதிகளான கட்டிடங்களையும் பூங்கா, நீச்சல்குளம் ஆகியவைகளுடன் விளங்கிய இந்த மாளிகை, ஆங்கிலேயரது ஆட்சியில் அழிமானம் எய்தியது. ஆனால் கால்சா மகால், ஹுமாயூன் மகால், திவானே கான்வாரா ஆகிய பகுதிகள் மட்டும் எஞ்சி நின்று இந்த நாட்டின் பாரம்பரிய கலைக்கு பல்லாண்டு பாடிக் கொண்டிருக்கிறது.

கி.பி. 1801ல் ஆற்காட்டு நவாப்பினது ஆட்சியை தமிழக வரலாற்றில் இருந்து அகற்றி விட்டு, தமிழக நிர்வாகத்தினை நடத்திய ஆங்கிலப் பேரரசின் பிரதிநிதிகளாக கிழக்கிந்திய கம்பெனியார், தங்களது ஆட்சியின் பொழுது, சில பொதுக் கட்டுமானங்களை அமைத்தனர். கடந்த கால ஆடம்பரத்தையும் நிகழ்காலத் தேவையையும் உள்ளடக்கியதாக அவை அழகுடன் மிளிர்கின்றன. குறிப்பாக, சென்னை தலைமை நீதி மன்றம், கோவை விவசாயக் கல்லூரி, மதுரை, தஞ்சை மாவட்ட ஆட்சியர் அலுவலகங்கள் ஆகியன. இவை அனைத்திலும் இஸ்லாமிய கட்டுமானப்பகுப்புகளான வில்வளைவு, உள்வொடுங்கிய விதானம், சாய்ந்த, வளைந்த படிக்கட்டுக்கள் சிறு மினாராக்கள் போன்றவைகளை, பல அளவுகளிலும், முறைகளிலும் பயன் படுத்தி அழகு ஊட்டி உள்ளனர்:

இத்தகைய இஸ்லாமிய கட்டுமானக் கலை ஊடுருவலினால் தமிழக கட்டுமானக் கலையின் தொன்மையும், அழகும், கம்பீரமும், புதிய பரிணாமங்களில் பிரதிபலித்து நின்றன. கட்டிடக் கலைஞர்கள், சிற்பிகளது சிந்தனையும், செயல் திறனும் இந்தப் புதிய கலப்பினால் வளர்ந்து முதிர்ச்சி பெற்றுள்ளன. இந்த வளர்ச்சி மனித நாகரீகத்திற்கும் பண்பாட்டிற்கும் தொடர்ந்து பலனளிக்கும். அது போழ்து கடந்த பற்பல நூற்றாண்டுகளாக, மனித ஆற்றலும், அழகுணர்வும் கலந்து மலர்ந்துள்ள பிரம்மாண்டமாள் கட்டுமானங்களின் கவிதை ஒலியில், இறைவனது சாந்திமார்க்கமான இஸ்லாத்தின் இதய துடிப்பும் எதிரொலிக்கும்.

---

17. "The Hindu" (3.9.1963) Former Residence of Nawab of Arcot

# 23

## கல்வெட்டுகளும் செப்பேடுகளும்

தமிழக வரலாற்றைத் தெளிவாக வரைவதற்கு தக்கசாதனமாக தமிழகத்தின் முடியுடை மன்னராக விளங்கிய சேர. சோழ, பாண்டியர்களும்,மன்னர்களும், நாயக்கர்களும் தங்களது ஆட்சிக் காலத்தில் பொறிக்கச் செய்த கல்வெட்டுகளும் செப்பேடுகளும் அமைந்துள்ளன. அவைகளில் இருந்து அன்றைய ஆட்சிமுறை. ஆட்சிக்குட்டட்ட நாடுகள், அரசியல் நிகழ்ச்சிகள், அரும்பெரும் செயல்கள், போன்ற பல செய்திகள் பெறப்படுகின்றன. கால வெள்ளத்தில் அழிந்து போன வரலாற்றின் கூர்மையான விளிம்புகளின் விளக்கமாகவும் அவை விளங்குகின்றன. ஆனால், இந்தச் செய்திகள், தமிழக இஸ்லாமியர்களைப் பற்றி அவர்களது தொன்மை, பண்பாடு, பழக்கவழக்கங்கள், தமிழ்ச்சமுதாயத்தில் அவர்களது பங்கு, என்பன போன்ற பலவற்றைப் புரியவைக்கும் முழுமையான அளவில் உதவவில்லை. காரணம், தமிழகத்தில் இஸ்லாமியர்களது அரசு, ஆட்சி, ஒரு நூற்றாண்டு கால அளவில கூட தமிழகத்தில் தொடர்ந்து நடைபெறவில்லை. ஆதலால் இஸ்லாமிய மன்னர்களோ ஆளுநர்களோ வழங்கிய சாசனங்களை வரலாற்றில் காண்பது அரிது.

என்றாலும், தமிழகத்தில் ஏழாம் நூற்றாண்டு முதல் அரபுக் குடா நாடுகளில் இருந்து வணிகத்திற்காகவும் சமயப் பணிக்காகவும், இஸ்லாமியர் குடிபுகுந்தது, தொழுகைப்பள்ளி, நிர்மாணம், அரசியல் ஊக்குவிப்புகளுக்கு உரியவர்களாகவிளங்கியமை, இறையிலிகள் பெற்றமை, தமிழ் மக்களுடன் இணைந்து செயல்பட்டமை, போன்ற செய்தித் தொடர்கள் சில கல்வெட்டுகளிலும் செப்பேடுகளிலும் குறிக்கப்பெற்று இருப்பதால், அவைகளையே

நமது ஆய்வுக்குரிய தமிழக இஸ்லாமியரைப் பற்றிய கல்வெட்டுகளும் செப்பேடுகளும் எனக் கொள்ளுதல் பொருத்தமாகும்.

## முதல் கல்வெட்டு

அண்ணல் நபிகள் (ஸல்) அவர்களது இறைமறையை, அன்னார்கள் காலத்திலேயே தாங்கி வந்த தவச் செல்வர்களான ஸஹாபி தமீம் உல் அன்சாரியினுடையதும் ஸஹாபி உக்காஸாவினதுமான அடக்க இடங்கள் முறையே கோவளத்திலும் முகம்மது பந்தரிலும் அமைந்துள்ள போதிலும் திருச்சிராப்பள்ளியில் முகம்மது அப்துல்லா-பின்-ஹாஜி முகம்மது அப்துல்லா நிர்மாணித்த தொழுகைப் பள்ளியில் வரையப்பெற்றுள்ள ஹிஜிரி 114 (கி.பி. 734)ம் வருட அரபிக் கல்வெட்டு தான் தமிழகத்தில் நமக்கு கிடைத்துள்ள தொன்மையான இஸ்லாமியக் கல்வெட்டாக கொள்ள வேண்டும். தமிழகத்தில் எட்டாம் நூற்றாண்டில் இஸ்லாமியர் தங்கிவாழத் துவங்கினர் என்பதை ஆதாரப்பூர்வமாகக் காட்டுகிறது இந்த சாசனம். இஸ்லாமியர்களது புதிய குடியிருப்புகள் திருச்சிராப்பள்ளியில் மட்டும் அல்லாமல் பாண்டியனது தலைநகரான மதுரையிலும், அந்த நாட்டின் கிழைக் கடற்கரையெங்கும் அஞ்சுவண்ணங்களாக அமைந்து இருந்தன. அதனை இராமநாதபுரம் மாவட்டம் தீர்த்தாண்ட தானக் கல்வெட்டு சான்று பகர்கின்றது. அந்தக் கல்வெட்டில் "இவ்வூரில் இருக்கிற அஞ்சு வண்ணமும், மணிக்கிராமத்தோரும் ஆரியர் சாமாந்த பண்டக சாலையும், பட்டாரியரும், தோயா வத்திரச் செட்டிகளும், தென்னிலங்கை வலஞ்சியரும், கைக்கோளரும் தூசுவரும், வாணியரும், நீண்ட கரையாரும், கோயில் திருமுன்பிலே நிறைவறக்கூடி இருந்து" எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.[1]

சோனகர்களது அஞ்சுவண்ணம் தமிழகத்தில் பல பகுதிகளில் அமைந்து இருந்ததை பல இலக்கியச் சான்றுகள் தெரிவித்தாலும் இந்தக் கல்வெட்டின் வாசகம் தான் வரலாற்றுக்கு ஆதாரமாக உள்ளது. சங்க இலக்கியங்கள் சுட்டுகின்ற யவனச் சேரிகள் போன்று. சோனகரது அஞ்சுவண்ணமொன்று மதுரைப் பெருநகரில், ஒன்பது பத்தாவது நூற்றாண்டில் இருந்தது. சோனகர் பதினாயிரம் பொன் கொடுத்து, கூன்பாண்டியனிடமிருந்து கைக்கொண்ட காணி உரிமை பற்றிய வழ்க்கு ஒன்று

---

1. A.R. 598/1926 தீர்த்தாண்டதானம்

பின்னர் கி.பி. 1573 ல் மதுரை மன்னரால் முத்துவீரப்ப நாயக்கரால் தீர்வு பெற்றதை மதுரை கோரிப்பாளையம் கல்வெட்டு அறிவிக்கிறது.[2]

வணிகர்களாக வந்த சோனகர், நாளடைவில் இந்த மண்ணின் மாண்புக்குறிய மக்களாக நிலைத்துவிட்டனர், அவர்களுக்கு பத்தாவது நூற்றாண்டில் சோழர்களது ஆட்சியிலும், பன்னிரண்டாவது, பதின்மூன்றாவது நூற்றாண்டில், பிற்காலப் பாண்டிய அரசுகளிலும், நல்ல சமூக சூழ்நிலைகளும் அரசியல் ஊக்குவிப்புகளும், உதவின. ''தஞ்சைப் புறம்பாடி ராஜ்ய வித்தியாதரப் பெருந்தெருவில் இருக்கும் சோனகன் சாவூர்'' (சாமுன் என்று இருத்தல் வேண்டும்) என்ற ராஜராஜ சோழனது தஞ்சைப் பெருவுடையார் கோவில் கல்வெட்டிலும் ''திருமந்திர ஓலை நாயகனான கங்கைகொண்ட சோழபுரத்து ராஜ வித்தியாதரப் பெருந்தெருவில் இருக்கும் சோனகன் சாவூர்'' என ராஜேந்திர சோழனது கோலார் கல்வெட்டிலும் சோனகரது பெருந்தலைவர் ஒருவர் குறிப்பிடப்பட்டுள்ளார். இவருக்கு, இராஜேந்திர சோழபுரத்து இராச விச்சாதிரப் பெருந்தெருவில் இருக்கும் சோனகன் சாவூர் பரஞ்சோதியான சோழ சுந்தர்வப் பேரரயன்'' எனப்புகழுரை சூட்டப்பட்டுள்ளது.[3] சோழர்களது பேரவையை அலங்கரித்த இந்தச் சோனகரைப் போன்று, பாண்டியரது அரசியல் பணியிலும் சோனகர் ஒருவர் சாமந்தராக இருந்தார் என்பதை திருப்புல்லாணி கோயிலில் உள்ள கோனேரின்மை கொண்டானான பாண்டியன் சடையவர்மனது எட்டாம்ஆண்டு கல்வெட்டு ஒன்று குறிக்கிறது. பாண்டிய படைப்பிரிவின் சாமந்தனரக விளங்கிய சோனகர் ஒருவர் பெயர் அறியத்தக்கதாக இல்லை ! பவுத்திரமாணிக்க பட்டினத்தில் அமைத்த பள்ளிக்கு நிவந்தமாக ஆம்புத்தூர் மருதூர் முதலான ஊர்களை இறை இலியாக இருந்து வர பாண்டியன் கோனேரிண்மை கொண்டான் ஆணை இட்டான். இந்த ஆணை,

'' ... ... ... கீட் செம்பிநாட்டு பவித்திர மாணிக்கப்பட்டினத்தில் கீழ்பால் சோனக சாமந்தப் பள்ளியான பிழார்ப்பள்ளி

2. A. R. 77/1905 கோரிப்பாளையம்.

3. A. R. 402 / 1903 திருப்புல்லாணி

ஆழ்வாருக்கும், இவர் செய்ய திருவாய் மலர்ந்தருவிய படிக்கு .... .... ....'' என நீண்டு தொடர்கிறது.[4]

பதினான்காம் நூற்றாண்டின் துவக்கத்தைச் சேர்ந்த தஞ்சை மாவட்டம் திருக்களர் கல்வெட்டு, பாண்டியரது, அரசு கட்டிலுக்கான போட்டியில் பாண்டிய நாட்டு முஸ்லீம்கள், சுந்தர பாண்டியனைச் சார்ந்து நின்று உதவிய உண்மையை வெளிப்படுத்துவதுடன் அந்த உள்நாட்டுப் பூசலினால் உருக்குலைந்த தமிழகத்தையும் அந்தக் கல்வெட்டுத் தொடர் கீழ்க்கண்டவாறு உணர்த்துகிறது.[5]

''.... ... .... .... முன்னாள் இராஜராஜன் சுந்தர பாண்டியத் தேவர் துலுக்கருடன் வந்த நாளிலே, ஒக்கூருடையாரும், இவர் தம்பிமாரும், அனைவரும், அடியாரும் .... ... .... செத்தும் கெட்டுப் போய் அலைந்து, வரும் வெள்ளத்தாலும் கலகத்தாலும் பாழாய் இருக்கிற அளவிலே'' .. .... ...'' என்று இதே காலத்தில் தென்பாண்டி நாடு சேர மன்னன் உதயமார்த்தாண்டனது ஆட்சியில் அமைந்து இருந்தது. அங்கும் இஸ்லாமியர் அரசின் ஆதரவுக்கு உகந்தவர்களாக இருந்தனர் என்பதை காயல் பட்டின கல்வெட்டு ஒன்றிலிருந்து தெரிகிறது. அந்த கல்வெட்டின் வாசகம்,

''சோனாடு கொண்டான் பட்டினத்து ஜும்மா பள்ளிக்கு உதய மார்த்தாண்டப் பெரும்பள்ளி எனப் பெயருங் கொடுத்து அவ்வூரில், காதியாரான அலூவக்கருக்கு உதய மார்த்தாண்ட காதியார் எனப் பேரும் கொடுத்து இந்தப் பள்ளிக்குச் சுவந்திரமாக இந்த சோனாடு கொண்டான் பட்டினத்துறையில், ஏற்றுமதி இறக்குமதி கொள்ளும் பொருளிலும், விலைப்படி உள்ள முதலுக்கு நாலு பணத்துக்கு கால் பணமாக உள்ள விழுக்காடு கொள்ளும்படி .... ... .... ...''[6] ஆணையிடுகிறது.

கி.பி. 1330–78 வரை மதுரையில், தன்னாட்சி செய்த சுல்தான்களின் ஆட்சிக் காலத்து பொறிக்கப்பட்ட நான்கு கல்வெட்

---

4. A. R. 112 / 1905 மன்னர்கோவில்
5. A R 642 / 1902 திருக்களர்.
6. A. R. 311 / 1964 - வீரபாண்டியன் பட்டினம்

டுக்கள் இராமநாதபுரம், புதுக்கோட்டை மாவட்டங்களில் கிடைதுள்ளன. அதுவரை தமிழக கல்வெட்டுக்கள் வரையப்பட்டுள்ள வகையினின்றும் அவை, மாறுபட்டுள்ளன. அவைகளில் இருந்து சில பகுதிகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

''இராசாக்கள் தம்பிரானுக்கு 761 (ஹூ) பங்குனி மாதம் 5ம் தேதி பொன்னமராவதி நாட்டு நாட்டாரோம் விரையாச் சிலை உள்ளிட்ட ஊரவருக்கும் கோட்டியூர் உள்ளிட்ட ஊரவரும் பிடிபாடு பண்ணிக் கொடுத்த பரிசாவது

''இராசாக்கள் தம்பிரானார் சூரக்குடி அழியச் செய்வதாக மஞ்சிலிசு எலிசுகானை, ஆசம் காத்தானை, முஸாக் கான்கானை, இராசாத்தி கானுடனே பரிகாரம் ஏவப்பட்டு, சூரக்குடியும் அழியச் செய்து, மாத்தூர் குளத்திலே விடுதியா விரைச்சிலை, கோட்டியூர் ஊரவர்களைக் காணச் சொல்லி அருளிச் செய்தபடியாலே, இவ்வடிகள் கண் அளிவுக்கு இராசாக்கள் தம்பிரானார் தோசது கானுக்கும் எங்களுக்கும் பிரமாணம் வரகாட்டி அருளினபடி .... .... ...''[7].

'' ... ... .... ஆதி சுரத்தானுக்கு .... .... சித்திரை .... .... தியதி பூர்வபட்சத்து ஏகாதேசியும் திங்கட் கிழமையும் பெற்ற பூசத்து நாள் பொன்னமராவதி நாட்டு இராசிங்கமங்கலத்து ஊராக

''இசைந்த ஊரவர்க்கு கானநாடான விருதராச பயங்கர வளநாட்டு ஆதனூர் ஊராக இசைந்த ஊரோம் காவல் பிரமானம் பண்ணிக் கொடுத்த பரிசாவது துலுக்கர் கலகமாய் எங்குங்

''கட்டாளும் பிடியாமல் பரிகரித்து வேறு ஒருவர் இவ்விடங்களில் நிலை நரருங் கொள்ளாமல் பரிகரித்து ''கள்வனூர் அடித்துக் கொண்டு போன கன்றுங்காலியும் விடுவித்து தந்து

''நாங்கள் இங்கு இருக்குமளவும் சோறு பாக்கும் ஆராய்ந்து எங்களைப் பரிகரித்துக் கொண்டு போக வேணுமென்கிற ... ... ....''[8]

---

7. திருக்கோலக்குடி கல்வெட்டு
8. ராங்கியம் கல்வெட்டு

"…. … …. மகாமதி சுரத்தானுக்கு யாண்டு பங்குனி எ/ந்தி யதி நாள் பொன்னமராபதி நாட்டு பனையூர் குள மங்கலத்து ஊரக இசைந்த ஊரவரோம் குளமங்கலத்தில் தரகு காரியமாக இரண்டு ஊரும் படை பொருது ஆளும்பட்டு ஊரும் அழிந்து வேண்டின நிக்கே போய் மீண்டும் ஊரிலே குடி புகுதுகையில் எங்களில் குடி இராதபடியாலே நகரத்தாரும் கம்மாளருக் கூடி எங்களைச் சேர இருக்கையில் … … …"[9]

இவைகளிலிருந்து நான்கு உண்மைகள் பெறப்படுகின்றன.

அ) முதன்முறையாக இஸ்லாமியரின் ஹிஜிரி ஆண்டு கல் வெட்டில் கையாளப்பட்டுள்ளது.

ஆ) தமிழகத்தின் ஏனைய கல்வெட்டுக்களில் காணப்படு வது போல் இவைகளில் மன்னரது விருதாவளிகள் பயன்படுத்தப்படவில்லை.

இ) சம்மந்தப்பட்ட இஸ்லாமியப் பெயர்கள் தமிழின் ஒலி வடிவத்திற்கு ஏற்ப தமிழுருப்பெற்று பயன்படுத்தப் பட்டுள்ளது.

ஈ) கல்வெட்டின் நடை கொடுந் தமிழாகவோ, கொச் சைத் தமிழாகவோ இல்லாமல் நல்ல பழகு தமிழாக அமைக்கப்பட்டுள்ளது.

ஏறத்தாழ நானூறு ஆண்டுகளுக்கு பின்னர் தமிழக வர லாற்றில் மட்டுமல்ல, இஸ்லாமியக் கல்வெட்டிலும் மாற்றம் காணப்படுகின்றன. கி.பி. 1749ல் வரையப் பெற்றுள்ள ஆற்காட்டு நவாப்பினது கல்வெட்டு[10] ஒன்றில்,

"… … …. மகா மண்டலேசுவர மேதின மீசுர, அனேக சதுரங்காதிபதி, கெடிமண்ணியம் சுல்த்தானன், நாவலப் பெருந் தீவு நவமணி வேந்தன், பூர்வ, தட்சிண, பச்சிம, உத்திர, சது சமுத்திராதிபதி தில்லிஆலங்கீர்ஷா மம்மதுஷா பிரிதிவி ராஜ்ஜி யம் பண்ணி அருளா நின்ற சாலிவாகன சகாப்தம் 1645க்கு மேல் செல்லா நின்ற சோப கிருது ஸ்ரீசோமவாரத்தில் பூர்வ பக்ஷத்து

9. பனையூர் (புதுக்கோட்டை) கல்வெட்டு
10. ஷை

ஸப்தமியும், அனுகார நாம யோகம் தை லாகரணமும் மகா நட்சத்திரமும் பெத்த நாளில் ஜெயங்கொண்ட தொண்டை மண்டலத்தில், தெண்ட கண்டு நாட்டில், ஊத்துக்காட்டுக் கோட்டத்தில் கருநாடக சுபா திவான்பாட்சா துல்லார்கான் பகதூர் ராச்சியம் பண்ணுகையில் .... ... ...." என்ற மணிப்பிரவாள நடை அன்னியரான ஆற்காடு நவாப் ஆட்சியில், பயன்படுத்தப் பட்டுள்ளதால் அன்றைய நிலையில் செந்தமிழ் வழக்கு சோபையற்று விளங்கியது தெரியவருகிறது.

கல்வெட்டுகளைப் போன்று, காலத்தையும், கடந்து சென்றவர்களின் சாதனையையும் கட்டியம் கூறுபவை பட்டயங்கள் என்ற செப்பேடுகள். ராஜேந்திர சோழனது ஆனைமங்கலச் செப்பேடுதான் இஸ்லாமியர்களைப் பற்றிய பழமையான செப்பேடாக உள்ளது. இந்தச் செப்பேட்டில், சத்திரிய சிகாமணி வளநாட்டு பட்டணம் கூற்றத்து சன்னமங்கலத்து மத்யஸ்தன் துருக்கனகுமது" கையெழுத்திட்டுள்ளார். பத்தாவது நூற்றாண்டில் சோழர்களது ஆட்சியில் இஸ்லாமியர்கள் அஞ்சுவண்ணத்தைச் சேர்ந்தவர்களாக மட்டுமல்லாமல் தமிழ்ச் சமுதாயத்தில் தக்க சிறப்புடன் வாழ்ந்தனர் என்பதை சூசகமாக சொல்லும் செய்தி தான் இது. தொடர்ந்து பாண்டியப் பேரரசிலும், தமிழக இஸ்லாமியர்களுக்கு தனி சலுகையும் சிறப்பும் இருந்தன. ஆனால் அவைகளை விளக்கக்கூடிய செப்பேடுகள் எதுவும் கிடைக்கவில்லை. என்றாலும் மதுரையில் உள்ள காஜிமார் தெருவில் உள்ள தொழுகைப் பள்ளியை நிர்மாணிப்பதற்கு உதவியதுடன் அதனைத் பராமரிக்கவும் மதுரையை அடுத்த விரகனூர் கிராமத்தை முற்றூட்டாக வழங்கி உத்திரவிட்ட சுந்தரபாண்டியனது செப்பேடு இன்றும் அந்தப் பள்ளியின் நிருவாகியிடம் இருப்பதாகத் தெரிகிறது. நூற்றாண்டுகள் பல முடிந்த பொழுதும், ஏகத்துவ நெறியைப் போதித்து ஆன்மநேய ஒருமைப்பாட்டை உருவாக்கி வந்த தமிழக இஸ்லாமியர் பால் ஆட்சியாளரது அன்பும் அனுதாபமும் தொடர்ந்தன என்பதை தஞ்சை மராட்டிய மன்னர்கள், இராமநாதபுரம் சேதுபதி மன்னர்களது செப்பேடுகள் பல தெரிவிக்கின்றன, அனுமந்தக்குடி, இராமேஸ்வரம், ஏறுபதி, இராமநாதபுரம், கீழக்கரை ஆகிய ஊர்களில் அடக்கம் பெற்றுள்ள இஸ்லாமிய தவச் செல்வர்களிடம் பெருமதிப்புக் கொண்டு அந்தப் புனித

இடங்களைப் பராமரிக்கவும், விளக்கு ஏற்றவும், அங்கு வருபவர்களுக்கு உணவு படைக்கவும், பல நூறு ஏக்கர் விளை நிலங்களை நிலக்கொடையாக திருமலை சேதுபதி, கிழவன் என்ற முத்துக் குமார விஜயரகுநாத சேதுபதி, குமார முத்து குமார சேதுபதி ஆகியோர் வழங்கினர். இன்றும், அந்த தர்மங்கள் தொடருகின்றன. பதினெட்டாம் நூற்றாண்டில். பெரும்பாலும் சேது நாட்டில் உள்ள இஸ்லாமியர்கள் நெசவாளர்களாக இருந்தனர் என்பதை சேதுபதிகளது பிற செப்பேடுகளில்'' நமது காவல்குடியான துலுக்கர் போட்டால் தறியொன்றுக்கு ஒரு பணமும்'' என்ற தொடர்கள்[11] விளங்குகின்றன. நாகூரில் அடக்கம் பெற்றுள்ள புனித சாகுல் ஹமீது ஆண்டகை அவர்கட்கு மராட்டிய மன்னர் துல்ஜாஜி 1753ல் கிராமங்களை வழங்கிய செப்பேடுகள் மோடி மொழியில் உள்ளன. அந்த கட்ட்த்தில் நெல்லை மதுரை மாவட்டங்களில் இஸ்லாமிய சமுதாயத்தில் இதர பிரிவினர்களுடன் இணைந்து பொதுநலனில் அக்கரை கொண்டர்களாக இருந்தனர் என்பதை பதினெட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த வெத்திலைக் குண்டு, குற்றாலம் ஆகிய ஊர்களது இரு செப்பேடுகள் தெரிவிக்கின்றன.[12]

இந்தச் செப்பேடுகளில் இங்கு குறிப்பிடத்தக்கவை கி.பி. 1738ல் இராமேசுவரம் ஆபில் காபில் தர்காவிற்கும் கி.பி. 1745ல் ஏறுபதி சுல்தான் சையிது இபுராகீம் ஷஹீது (வலி) அவர்களது தர்காவிற்குமாக வழங்கிய சர்வமானிய நிலக் கொடைகள் பற்றியவை. அவைகளை வரலாறு புகழ வழங்கியவர் அப்பொழுது இராமநாதபுரத்தில் அரசோச்சிய சைவத்துரை என வழங்கப்பட்ட முத்துக்குமார விஜயரகுநாத சேதுபதி மன்னராவர். இராமேஸ்வரம் தர்காவிற்கு பக்கிரிபுதுக்குளம் என்ற பேரூரை நிவந்தமாக வழங்கும் அந்தப் பட்டயம். தமிழக இசுலாமியரது சுய உணர்வுகளை மன்னர் நன்கு அறிந்து இருந்ததும் மேலே கண்ட செப்பேடுகளில் வாசகங்களிலிருந்து புலப்படுகிறது தமிழகச் செப்பேடுகளின் சொற்றொடர் அமைப்பில் இங்ஙனம் ஒரு புதிய பாணியையும் இந்த மன்னர் உருவாக்கி உதவி இருப்பதையும் இந்த வாசகங்கள் நினைவுபடுத்துகின்றன.

---

11, சேதுபதி மன்னர் செப்பேடுகள்

12. Antiques – vol I

இதுவரை இங்கு குறிப்பிடப்பட்ட கல்வெட்டுக்களும் செப் பேடுகளும் தமிழக வரலாற்றின் தவிர்க்க முடியாத காலகட்டத் தில், அந்நியர்களாக இந்த தமிழ் மண்ணில் அடியெடுத்து வைத்த சிறு பிரிவினரான இஸ்லாமியர், ஒருசில நூற்றாண்டு காலத்தில் இந்த மண்ணின் மணத்துடன் மலர்ந்து, மக்களுடன் கலந்து, இந்த மண்ணின் மைந்தர்களாக, மகிபதிகளாக, மொழி, அரசியல் பண்பாடு, ஆகிய துறைகளில் உயர்ந்த நின்ற வித் தையை விளங்க வைக்கும் கருவூலங்களாகக் காட்சி அளிக்கின் றன. பொதுமக்களது கவனத்தினின்றும், வரலாற்று ஆசிரியர் களது ஆய்வுகளினின்றும் தொடர்பு இல்லாமல் இருக்கும் இந்தக் கல்வெட்டுக்களையும், செப்பேடுகளையும் இன்னும் விரிவாகவும் ஆழமாகவும் ஆய்வு செய்தால் தமிழக இஸ்லாமியரது வரலாறு மட்டுமின்றி, தமிழகத்தின் உண்மையான வரலாற்றையும் வெளிக்கொணர முடியும் என்பதில் ஐயமில்லை.

# 24

## இலக்கிய அரங்கில்

வாழையடி வாழையாக வளர்ந்து வந்துள்ள தமிழக இஸ்லாமியர்களின் வரலாறு என்பது கடந்த ஆயிரத்து இருநூறு ஆண்டுகளை அடக்கியுள்ள ஏடாகும். எத்துணையோ துறைகளை எடுத்து இயம்புகின்ற அந்த ஏட்டிலே அவர்களது தமிழ்த் தொண்டு என்பதும் ஒரு சிறப்பான பகுதியாகும். அதனை வரலாற்றுப் பார்வையில் பகுத்து நோக்குதல் அவசியமாகும். பொதுவாகப் பிற்காலப் பாண்டியரது பெருமை மிக்க ஆட்சியில், தமிழ்க் குடிகளாக விளங்கிய சிறுபான்மைத் தமிழக இசுலாமியர், அரசியல் ஊக்குவிப்புகளால் உயர்ந்து வாணிபச் சிறப்புடன் சமுதாயச் சிறப்பையும் எய்தினர். அதுகாறும் ஆங்காங்கு அஞ்சுவண்ணங்களில் தனித்து, ஒதுங்கி வாழ்ந்த அவர்கள், நாளடைவில் பெருநகர்களிலும் குடியேறி பிற பகுதியினருடன் கலந்து வாழும் வாய்ப்பைப் பெற்றனர். வாணிபச் சாத்துக்களினாலும், அரசியல் பணிகளினாலும் தமிழ் மொழியுடன் அவர்கள் கொண்டிருந்த தொடர்பு, அதனைக் கற்றுத் தேர்ந்து தெளியும்படி செய்தது. ஏற்கனவே அவர்களது தாய்மொழியான அரபும், பார்சியும், காலப்போக்கில் தொடர்மொழியாகிவிட்டதுடன், அவர்களது வழிமொழியான தமிழ்மொழி அவர்களது வாய்மொழியாகி தாய்மொழியாக வாய்த்துவிட்டது.

ஆதலால், இஸ்லாமிய சமயசிந்தனைகளை இறைமறையில் கருத்துக்களை, தமிழக மக்களிடம், குறிபபாக தமிழகத்தின் இஸ்லாத்தைப் புதிதாக ஏற்றுக்கொண்டவர்கள், தமிழ் மூலம் எளிதில் புரிந்து கொள்ளத்தக்க முயற்சிகளில் ஈடுபட்டனர். அதற்கென அவர்கள் தேர்வு செய்த ஒரே முறை, தமிழை அரபு வரிவடிவில் அமைத்து வழங்கியது ஆகும். அதனையே பிற்காலத்

தில் அரபுத் தமிழ் என அருமையுடன் சொல்லிவந்தனர். தங்களுக் குள்ள ஓரளவு தமிழ்ப் பயிற்சியைக் கொண்டு தமிழ் ஒலிவடிவிற் கிணைய அரபு மொழியில் வரி வடிவம் அமைக்கப்பட்டதுதான் இந்த புதுத்தமிழ். தமிழ்மொழியின் உயிர் மெய்களான 'ள, ங ன, ட ஆகிய எழுத்துக்களுக்கேற்ற ஒலிக்கூறு கொண்ட எழுத் துக்கள் அரபு மொழியில் இல்லாததால் இந்த தமிழ் எழுத்துக் களுக்கு பொருத்தமாக ஒலிக்கின்ற அரபு எழுத்துக்களுக்கு முன்னும் பின்னும் மேலும் கீழும் சிறு குறியீடுகளைச் சேர்த்து தக்க ஒலியை உண்டாக்க பயன்படுத்தினர். இதன் காரணமாக அரபு நெடுங்கணக்கு எழுத்துக்கள், இருபத்து எட்டில் இருந்து முப்பத்து ஆறு ஆக உயர்ந்தது. தமிழ் மொழியின் அனைத்து உயிர்மெய் எழுத்துகளையும் இணைத்து ஒலிக்கும் முறை இத னால் உருவாக்கக்கப் பட்டது.

இந்த முறையில், அரபுச் சொற்களின் இன்றியமையாத சொற்கள் அவைகளின் அரபு மூல உச்சரிப்பு குன்றாமல் அவை களின் இயல்பான வளமையும், வன்மையும், மென்மையும். இனிமையும், இணைந்து அப்படியே தமிழில் ஒலித்தன. குறிப் பாக அல்லாஹு (இறைவன்) ரஸூல் (இறைத் தூதர்) ஆலிம் (மார்க்க மேதை) கலிபா (மார்க்க தலைவர்) தரீக்கா (ஞான வழி) போன்றவை அந்தச் சொற்களில் சில. இத்தகைய தொருமுறை தமிழுக்கு புதுமையான தொன்றாக இருந்தாலும் அன்றைய காலகட்டத்தில் இந்திய துணைக் கண்டத்தில் மேற்குக்கரையிலும், வங்கத்திலும் அரபிகள் இத்தகைய தொரு முறையை மேற்கொண்டிருந்தது தெரியவருகிறது. இதனைப் போன்று, அரபியர்கள் இந்தியாவில் நிலைகொள்வதற்குமுன்னர் கிழக்கு ஆப்ரிக்க தன்ஜானிய நாட்டில் வாணிபத் தொடபுர் கொண்டு இருந்தனர். அதனால் அங்கு வழங்கப்பட்ட சுவாஹிலி மொழியையும், பின்னர் மலேசியா இந்தோனிஷிய நாடுகளின் ஜாவி மொழியையும் அரபு மொழி வடிவில் வழங்கி வந்ததை அந்தந்த நாட்டு வரலாறுகள் தெரிவிக்கின்றன.

திருமறைக்கான விரிவுரையும் நபிகள் நாயகம் அவர்களது நல்லுரைகளை ஆதாரமாகக் கொண்ட நடைமுறை விளக்கங் களும் இந்தப் புதிய வரி வடிவில் தமிழகத்தில் இடம்பெற்றன இத்தகையதொரு முறையை, பதினான்காவது பதினைந்தாவது நூற்றாண்டைச் சேர்ந்த வைணவ பாஷ்யக்காரர்களும் தமிழகத்

தில் மேற்கொண்டு இருந்தனர். அவர்களது சமய நூலான நாலாயிர திவ்விய பிரபந்தத்திற்கு விரிவான உரைகளை மிகுதியும் வடமொழிச் சொற்களின் துணைகொண்டு புதிய உரை நடையொன்றில் அவர்கள் வரைந்துள்ளார். அவை தமிழ் உரையாக இருந்தாலும், அவைகளின் வரி வடிவம் கிரந்தத்தில் உள்ளது. சில உரையாசிரியர்கள் இந்த கிரந்த எழுத்துக்களுக்கிடையில் வடமொழிச் சொற்களையும் அப்படியே வழங்கி உள்ளனர். இதனை "மணிப்பிரவாள நடையென" இணைத்து பெயரிட்டனர். நாட்டு விடுதலைக்குப் பின்னர், மொழி உணர்வுப் பற்று காரணமாக அண்மைக் காலத்தில் இந்த தமிழ் நடை கைவிடப்பட்டு மறைத்துவிட்டது.

எனினும், இதனையொத்த அரபுத் தமிழ், தமிழக இஸ்லாமியரிடையே இன்னும் வாழ்ந்து வருகிறது. வழக்கில் இருந்தும் வருகிறது. அரபு மொழியில் உள்ள கலைஞானங்களை அறிந்து கொள்வதற்கான எளிய சாதனமாக தொடர்ந்து பயன்பட்டு வருகிறது. இந்தவகைத் தமிழில் படைக்கப்பட்ட தொன்மையான ஆக்கங்கள் எதுவும் நம்மிடையே இன்று இல்லை. ஆனால் இரு நூற்று ஐம்பது ஆண்டு கால வரையறைக்குட்பட்ட அரபுத் தமிழ் நூல்கள் மட்டும், தமிழகத்திலும் ஈழத்திலும் மார்க்க கல்வி பெறும் அரபுக் கல்லூரி மாணவர்களுக்கு பாடமாக இருந்து வருகின்றன. இவைகளுள் வள்ளல் சீதக்காதியின் ஆசானாக விளங்கிய ஞானி சதக்கத்துல்லா (வலி) ஷின் இளையரும் அரபு வித்தகருமான ஞானி ஷாம் ஷிகாபுதீனது அரபுத்தமிழ் நூல்கள் குறிப்பிடத்தக்கவை. இங்ஙனம் தமிழக இசுலாமியரின் தமிழ்–அரபுத் தமிழாக வளர்ந்து அடுத்த சில நூற்றாண்டுகளில் தனித்தமிழாகி காப்பியத் தமிழாக மணங்கமழ வழி துலக்கியது.

இவ்விதம் தமிழைத் தமது தாய் மொழியாகக் கொண்ட இஸ்லாமியர், அதே காலத்தில் பிற சமயத்தினர், பல துறைகளைச் சேர்ந்த பலநூறு இலக்கியங்களைத் தமிழில் படைத்து இருப்பதை படித்து அறிந்தனர். பிற்காலத்தில் பெளத்த, சமண, சைவ, வைணவச் சார்புடைய சமய இலக்கியங்களாக அவை பகுக்கப்பட்டுள்ளன. சமயப் பற்றும், சமுதாயப் பிடிப்பும் தாய் மொழித் தேர்ச்சியும் விஞ்சி ஒளிர்கின்ற அந்த நூல்களை காதாறக் கேட்டு, கண்குத்திப் படித்துச் சுவைத்தும் அவைகளின் இனிமையில் ஈடுபட்ட அவர்களது இதயம், தங்களது சமயநெறிகளை

யும், சான்றோர் வாழ்வினையும் சொல்லக்கூடிய நூல்கள் தங்களது தமிழ்மொழியில் இல்லையே என ஏங்கியது. அவர்களது நினைவிலே இனித்து, நெஞ்சத்திலே நிலைத்து அதனால் எழுந்த ஊக்கமும், நாளடைவில் உருப்பெற்று உயர்ந்தது தான் இன்று நம்மிடையே எஞ்சி உள்ள இஸ்லாமியத் தமிழ் இலக்கியச் செல்வங்களாகும்.

காலத்தின் அழிவுக் கரங்களில் இருந்து தப்பிப் பிழைத்த தொன்மையான பேரிலக்கியங்கள் எதுவும் தமிழக இஸ்லாமியருக்கு கிட்டவில்லை. என்றாலும், பல்சந்தமாலை என்ற பழம் நூலின் எட்டுப்பாடல்களை மேற்கோளாகக் கொண்ட ''களவியற் காரிகையை'' பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை அவர்கள் முதன்முறையாக வெளியிட்டுள்ளார்கள். தமிழ் இலக்கிய உலகிற்கு, குறிப்பாக இஸ்லாமிய தமிழ் இலக்கியப்பட்டியலுக்கு அணி சேர்க்கும் இந்தப் பாடல்களை இலக்கிய உலகிற்கு வெளிக் கொணர்ந்த அன்னாருக்கு இஸ்லாமியர் என்றென்றும் கடமைப்பட்டுள்ளனர். இந்தப் பாடல்களில் இருந்து பல்சந்தமாலை ஆசிரியரது பெயரும் காலமும் அறிந்து கொள்வதற்கு இல்லை. ஆனால், இதுவரை அச்சில் கொணரப்பட்ட இஸ்லாமியத் தமிழ் இலக்கியப் பாடல்களில் தொன்மையானவை இவை என்பதை அறுதியிட்டுச் சொல்லக்கூடிய வாய்ப்புகள் உள்ளன. அத்துடன் தமிழக இஸ்லாமியரது தமிழ்ப்பணிக்கும் இந்த நூல் முன்னோடியாக அமைந்துள்ளது.

பொதுவாக, தமிழ் மொழியின் தொண்ணூற்று ஆறு வகையான சிற்றிலக்கியங்களின் பட்டியலில் பல்சந்தமாலை என்ற பகுப்பும் தொகுத்துக் கொடுக்கப்பட்டுள்ளது. பதின்மூன்றாம் நூற்றாண்டு இலக்கண நூலான பன்னிருபாட்டியலில் ''பல்சந்தமாலை'' என்ற பகுப்பு பேசப்பட்டுள்ளது. பதினைந்தாவது நூற்றாண்டு இலக்கியமான பிரபந்த திரட்டும்,

''பத்துக்கொரு சந்தம் பாடி பா நூறாக வைத்தல்........''

என பல்சந்தமாலை அணி இலக்கணப்படி வாடல், ஊடல், கூடல் என்ற அகத்துறைகளை அங்கமாகக்கொண்டு தொகுக்கப்படுவது இந்தப் பாமாலை. தமிழ் இலக்கியத்தில் இத்தகைய பல்சந்தமாலை வேறு எதுவும் புனையப்பட்டு இருப்பதாக இதுகாறும் செய்தி இல்லை.

மேலும் கிடைத்துள்ள இந்த பல்சுத்தமாலைப்பாடல்களில்
''வில்லார் நுதலிய நீதிமன்றே சென்றுமேவுதின் சூது
எல்லாம் உணர்ந்த ஏழ்பெரும் தரங்கத்து இயவனர்கள
'' இய்வன ராசன் கலுபதி தாமுதல் எண்ண வந்தோர் .....
'' இறையாகிய கலுபா முதலானோர் யானைகளின் .....
'' கலைமதி வாய்மைக் கலும்பா வழிவருங் கற்பமைந்த .....

என்று பாடல் தொடர்களில் இயவனராசன், கலுபா. கலுல்பா, கலுபதி, என்ற சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. பொதுவாக யவனர் என்ற சொல் சங்க இலக்கியங்களிலும், பின்னர் சிலப்பதி காரம், சீவகசிந்தாமணி, பெருங்கதை ஆகிய படைப்புகளிலும் தமிழகம் புகுந்த பிற நாட்டாரைக் குறிக்க கையாளப்பட்டுள்ளது. இந்தச் சொல்லின் பிரயோகம் இறுதியாக, பதின்மூன்றாம் நூற்றாண்டைக் சேர்ந்த நச்சினார்க்கினியது உரையிலும் காணப்படுகிறது. பிற்கால இலக்கியங்கள் எதிலும் காணப்படாத இந்தச் சொல் பல்சந்தமாலையில் தான் இடம் பெற்றுள்ளது. இந்தக் காரணத்தினால் இந்தநூல் பிற்கால இலக்கியம் அல்லவென்பதை உறுதிப்படுத்த முடிகிறது. அடுத்து, கலுபா என்ற சொல்லின் ஆதாரத்தைக் கொண்டு. அல்லாவைத் தொழுகின்ற இயவனர்களது அரசன் கலுபா என்பதும், வச்சிரநாட்டில் வகுதாபுரிக்கு இறைவன் என்பதும் பெறப்படும், காலிப் (Caliph) என்ற அரபுச் சொல்லின் தமிழாக்கம் தான் இந்த கலுபா என்ற சொல் என்பது சிலரது முடிவு. இந்தச் சொல்லின் அரபு வழக்கை ஆய்வு செய்யும் பொழுது அந்த முடிவு பொருத்தமற்றது என்பதும் பெறப்படுகிறது.

ஸிரியா நாட்டிலும், ஸ்பெயின் நாட்டிலும் எட்டாம் நூற்றாண்டிலிருந்து பதின்மூன்றாம் நூற்றாண்டு வரையிலும் ஆட்சிபுரிந்த அப்பாஸிய மன்னர்களும், பத்து, பன்னிரண்டு நூற்றாண்டுகளில் மிஸ்ரு (இன்றைய எகிப்து) நாட்டை ஆட்சி செலுத்திய பாத்திமத் கிளை அரசர்களும் தங்களது பெயர்களுடன் இணைத்துக் கொண்ட அரசியல் விருதுப்பெயர் ''இறைவனது பிரதிநிதி'' என்பதே இந்தச் சொல்லின் பொருளாகும். அண்ணல் நபிகள் நாயக (ஸல்)த்தைக் குறிக்க திருமறையில் கலிபத்துல் ரசூல் என்றும், கலிபா–யெ–ரசூல், என்றும் பிரயோகம் வந்துள்ளது.[1] ஆனால் இந்தப் பாடல்களில் எளிதாக கலிபா எனக்

1. Philips H. Kitti – History of the Arabs (1977)

குறிப்பிடாமல் கழுபா என குறிக்கப்பட்டுள்ளது. கலமல்லா (இறையருள் பெற்ற வெற்றியாளன்) என்ற அரபுச் சொல்லின் திரிபாக இந்தச்சொல் அமைதல் வேண்டும் என எண்ணுதற்கும் இடமுள்ளது. கி.பி. 1223 முதல் ஸ்பெயின் நாட்டை ஆட்சிசெய்த முகம்மது அபு-அல்அகமது என்ற பேரரசன் இதே விருதைப் புனைந்து கொண்டு இருந்ததும் ஈண்டு சிந்திக்கத் தக்கதாக இருக்கிறது. ஆதலால் இந்தச் சொல்லைப் பலசந்தமாலை ஆசிரியர் பயன் படுத்தியதிலிருந்து இந்த நூல் பதின்மூன்றாம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டது என முடிவிற்கு வருதல் பயனுள்ள தாக இருக்கும். ஆனால் இலங்கைப் பேராசிரியர் ஒருவர் பல சந்த மாலை பாடலின் இலக்கண அமைதியை ஆய்வு செய்து இந்த இலக்கியம் பதின்மூன்றாம் நூற்றாண்டிற்கு முற்பட்டது என கருத்து தெரிவித்துள்ளார்.[2]

மேலும் இந்த பல்சந்த மாலையின் பாட்டுடைத் தலைவனாகிய கழுபா, வச்சிர நன்னாட்டு வகுதாபுரிக்கு இறைவன் என்பது அந்த மாலையில்

> ''நகுதாமரை மலர் வாவி சூழ் வச்சிர நாடர் தங்கள்
> வகுதாபுரியன்ன ........''*

என்ற பாடலிலிருந்து பெறப்படுகிறது. ஆனால் தமிழகத்தில் வச்சிரநாடும், வகுதாபுரியும் எந்தப் பகுதியில் எந்தக்கால எல்லையில் அமைந்து இருந்தன என்பதைப் புலப்படுத்த போது மான ஆதாரம் இல்லை. இசுலாமியரது கோநகரான பகுதாதைப் போன்று சிறப்புற்றிருந்த பெருநகர் என்ற பொருளில் வகுதாபுரி என இலக்கிய வழக்கு பெற்று இருப்பதாக சில நூல் ஆசிரியர்கள் கருத்து தெரிவித்துள்ளனர். எகிப்து நாட்டுப் பட்டணமான காஹிரா (கெய்ரோ)வில் இருந்து குடிபெயர்ந்து வந்தவர்கள் என்ற பொருள் கொள்ளும்படி காயல்பட்டின முஸ்லீம்கள் இலக்கிய வழக்காக, காயல் பட்டினத்தை காயினூர் என வழங்கி இருப்பதும் இங்கு நினைவு கொள்ளத்தக்கதாக உள்ளது.

நூறு நாமா பாடிய வகுதை அகமது மரைக்காயர், காயலின் வளமையைக் கூற ''காகிறு நாட்டு வளம்'' என்ற பகுதியை

---

2. மதுரை பல்கலைக் கழகம் – இஸ்லாமியத் தமிழ் இலக்கிய தொகுதி I (1986) பக்கம். 87.

அந்த நூலில் சேர்த்து இருப்பது இங்கு குறிப்பிடத்தக்கது. அந்தப் புலவர் காஹினூராகிய காயலை, வகுதை நன்னாட்டில் இருப்பதாகப் பாடியுள்ளார். களவியல் காரிகையைப் பதிப்பித்த பேராசிரியர் திரு. வையாபுரிப்பிள்ளை, "வகுதாபுரியை இக்காலத்தில் காயல்பட்டினம் என வழங்குவர்" என கருத்து தெரிவித்துள்ளார். ஆனால் முற்காலத்தில், வகுதாபுரி" எந்நாடுங்கொண்ட இறைவன் வச்சிர நாடான்" (கண்ணி–66)

"மானாபரன் செய்ய வகுதாபதிக் கிறைவன்" (கண்ணி-15) என பெரும் புலவர் உமறுகத்தாப் அவர்கள் வள்ளல் சீதக்காதி மரைக்காயரது திருமணக் கோலத்தைக் கண்ணாரக் கண்டு, களிகூர்ந்து, திருமண வாழ்த்து பாடும் பொழுது, வச்சிர நாட்டையும் வகுதையையும் குறிப்பிடுகிறார். இன்னும் சீதக்காதி "நொண்டி நாடக ஆசிரியரும்", 'வகுதையில் வாழ் மண்டலிகன்'

"திருவுலாவிய வகுதைநகர் வருகருணை வாருதி
"வகுதை நகர் சீதக்காதி ... .... ....

என வள்ளல் சீதக்காதி மரைக்காயர் கீழக்கரை மாளிகையில் கொலுவீற்று சிறப்புற்று இருந்ததைப் பாடியுள்ளார்.

இவைகளுக்கு எல்லாம் மேலாக, காயல்பட்டினத்து புலவர் நாயகமான ஷெய்கு அப்துல் காதிரு நயினார் லப்பை ஆலிம் புலவர் அவர்கள் கீழக்கரை தான்" அந்த "காயல்" "வகுதை" என்பதை,

" பவத்தடையறுத்து பலன்தருநெறியின்
" தவத்துறை பயிலுரு சான்றவர் வாழும்
வகுதை யம்பதியான் . . . . என்றும்,

" வையமெல்லாம் தனிக்கீர்த்தி வழங்கவருங்
கருணைமுகில் வகுதை வேந்தன் . . . "

என கீழக்கரை வள்ளல்கள் முகம்மது காசீம் மரைக்காயரையும், ஷெய்கு சதக்கத்துல்லா மரைக்காயரையும், புகழ்ந்துரைப்பதில் இருந்து கீழக்கரை தான் புலவர் நாவில் பொருந்திய வகுதை என்பது விளக்கமும் துலக்கமும் பெறுகிறது.

---

புலவர் நாயகம் நிருபச் செய்யுட்கள் (ஹஸன்பதிப்பு) 1980 பக்கம். 65-66

மேலும், பதின்மூன்றாம் நூற்றாண்டில் தமிழகத்தில் ஆங்காங்கு பரவலாக அரபிகள், தமிழக இசுலாமியராக நிலை பெற்றுக் கொண்டிருந்தனர். அப்பொழுது பாண்டியப் பேரரசரான மாற வர்மன் குலசேகர பாண்டியனது ஆட்சியில் தமிழகத்திற்கும் அரபுத்தாயகத்திற்கு இடையில் விறுவிறுப்பான குதிரை வாணிபம் நடைபெற்று வந்ததும் இதற்கு முக்கியமான காரணங்களில் ஒன்றாகும். தமிழில் தேர்ச்சி பெற்று, காப்பியம் படைக்கின்ற தகுதியையோ அல்லது தமிழ்ப்புலவர் ஒருவரது இலக்கியப் படைப்பினை காணிக்கையாகப் பெறக் கூடிய தகுதியையோ இசுலாமியப் பெருமகன் ஒருவர் அப்பொழுது பெற்று இருப்பதற்கு வாய்ப்பு இல்லை. மேலும் அந்த நூற்றாண்டிலே இந்த நூலும் இயற்றப் பட்டிருந்தால். அதனைத் தொடர்ந்து இசுலாமிய இலக்கியங்கள் வேறுஎதுவும் பதினாறாவது நூற்றாண்டு முற்பகுதி வரை ஏன் இயற்றப் படவில்லை என்ற வினாவும் எழுகிறது.

அத்துடன் பதின்மூன்று, பதினான்காவது நூற்றாண்டுகளில்தான் அரபிக்குடா, பாரசீகப்பெருங்குடா நாடுகளில் இருந்து அரபிகள் பெருமளவில் மாபாரிலும் (தமிழக கடற்கரைப் பகுதி) ஈழத்திலும், மலேசியா தீபகற்ப நாடுகளிலும் குடி பெயர்ந்து வந்துள்ளனர் என்பதை வரலாற்றில் அறியும் பொழுது அரபிகள், தமிழ்ச் சமுதாயத்தில் இணைந்து கலந்து, தமிழக இசுலாமியர்களாக தமிழ் மக்களாக மாறியது பதினைந்து, பதினாறாவது நூற்றாண்டு என முடிவிற்கு வருவதே ஏற்புடைய தொன்றாகும். ஆதலால், அவர்கள் பேசுந்தமிழைப் பிறப்புத் தமிழாகக் கொண்டு பெருமையுடன் வாழத்தொடங்கியதும் அந்த நூற்றாண்டுகளில்தான்.

பதினான்காம் நூற்றாண்டின் இடையில் தமிழகம் போந்த அரபு நாட்டுப் பயணியான திமிஸ்கி கிழக்கு கடற்கரைப் பட்டினமான பத்தினி என்ற பட்டினத்தை குறிப்பிட்டுள்ளார். இந்த ஊருக்கு அடுத்துள்ள வஜ்ரம் – அல் – தவாப் "என்ற கோயில் இருப்பதாகவும் அந்தக் கோயிலுக்கு இந்து சமய மக்கள் பக்தி பரவசத்துடன் வந்து பூமியில் உருண்டு புரண்டு சென்று தங்களது நேர்த்திக் கடனை செலுத்துவதாக தமது குறிப்புகளில் பதித்

---

Md. Hussain Nainar - Arab geographers Knowledge of S. India (1942) p. p. 44.116

துள்ளார். வஜ்ரம் என்பது தருப்பை புல்லைத் குறிப்பதால் இந்த ஊர் திருப்புல்லாணியாக அமைதல் வேண்டும். மேலும் இராம காதை "பொருள் நயந்து நன்நூல் நெறியடுக்கிய புல்லில் கருணையங்கடல் கிடந்தது" என இராமன் அங்குபுல்லைப் பரப்பி படுத்து இருந்ததாக குறிப்பிடுவதும் மற்றும் இன்னொரு பிற்கால இலக்கியமான புல்லையந்தாதி "விருப்புறப்புற்பரப்பி ஆங்கண விரும்பித்தூங்கும் தருப்பையான் . . . ."எனக் குறிப்பிட்டு இருப்பதும் இங்கு சிந்திக்கத்தக்கதாக உள்ளது.

அண்மையில் மேற்கொண்டுள்ள ஆய்வில் இருந்து பத்னி என்பது இராமநாதபுரம் வட்டத்தில் உள்ள பவித்திர மாணிக்க பட்டினம் என்ற பெரியபட்டினம் என்பது நிலை நிறுத்தப்பட்டுள்ளது. ஆதலால் "வஜ்ரம்–அல்–தவாப்" உள்ள நாடு புல்லாரணியநாடு, புல்லங்காடுநாடு, வச்சிரநாடு, பாண்டிய நாட்டு கிழக்கு கடற்கரையில் இஸ்லாமியர் வாழ்ந்த–இசுலாமிய குறுநில மன்னர் ஆளுகைக்குள் அமைந்த பகுதி என்பது பெறப்படுகிறது. பன்னிரண்டாம் நூற்றாண்டின் இறுதியில் அரபிகள் பாண்டிய நாட்டில், வைப்பாறு, வைகை ஆகிய இரு நதிகளுக்கு இடையில் மன்னர் வளைகுடாவை அடுத்த தென்கிழக்குப் பகுதியின் பல இடங்களில் குடியேறி இருந்தால் என பேராசியர் ஹுசைன் குறிப்பிடுவதும் இந்தப் பகுதியாக இருக்கலாம்.[2]

மேலும், தமிழகம், வடுகரது ஆட்சியின் கீழ் வந்த பிறகு, பதினைந்து பதினாறாவது நூற்றாண்டில் ஆங்காங்கு பாண்டிய இளவல்கள் விஜயநகர மேலாதிக்கத்திற்கு உட்பட்டவர்களாக பல ஊர்களில் குறுநில மன்னர்களாக இருந்து வந்துள்ளனர். அவர்களைப் போன்று பிற்காலப் பாண்டியரது ஆட்சியிலும், அடுத்து மதுரை சுல்தான்களது ஆட்சியிலும் வாணிப, அரசியல் செல்வாக்கு பெற்ற பல அரபிகளும் கிழக்கு கடற்கரைப்பகுதிகளில் குறுநில மன்னர்களைப் போன்று அதிகாரம் செலுத்தி வந்துள்ளனர். கி.பி. 1498ல் போர்த்துகேசிய தளபதி ரொட்டிரிகோ, காயல்பட்டினத்திற்கு வந்த பொழுது, அந்தப் பகுதி அரபு மன்னரது ஆட்சிக்குட்பட்ட கோநகராக விளங்கியதைக்

---

1. கம்பராமாயணம் – யுத்த காண்டம் – கடல் சீறிய படலம் பாடல் எண் 42
2. Hussiani Dr. S. A. Q. History of Pandya Country (1972) p.47

குறிப்பிட்டுள்ளார்.[3] கி.பி. 1515ல் காயல் கடற்கரையைப் பற்றிக் குறிப்பிடும் பேராசிரியர் பர்போஸா, பழைய காயலையும் கீழக் கரை முஸ்லீம்களையும் குறிப்பிடும் பொழுது, அங்கு அரசரை போன்று செல்வ வளமும், அரசியல் செல்வாக்கு மிக்க முஸ்லீம் ஒடுவர் இருந்தார் என்றும், அங்குள்ள முத்துச்சிப்பி பாறை களுக்கு அவர் தீர்வை வசூலித்து வந்தார் என்றும், அவரது ஆணைக்கும் தீர்ப்பினுக்கும் அனைத்து முஸ்லீம்களும் கட்டுப் பட்டு நடந்தனர். "என வரைந்துள்ளார். கி பி. 1523ல் அங்கு போந்த இன்னொரு போர்த்துக் கீசிய நாட்டைச் சேர்ந்த கிறித்துவ பாதிரியார்கள் குழு ஒன்று. அங்குள்ள இசுலாமியர் பெரும் எண்ணிக்கையினரான பரவர்களை அடக்கி ஆண்ட சூழ்நிலையையும், அதன் காரணமாக கி.பி. 1532ல், அந்தப் பரவர்களில் பலர் இந்து சமயத்திலிருந்து, ஏசு மதத்திற்கு மதம் மாற்றம் அடைந்த விவரத்தையும் குறிப்பிட்டுள்ளது.[4] மற்றும் கி.பி. 1678ல் இராமநாதபுரம் மன்னர், உடையான் திருமலை சேதுபதி வழங்கிய செப்பு பட்டயமொன்றில் பொறிக்கப் பட்டுள்ள விருதாவளியில், அவர் வல்லமை மிக்க யவன அரசர் களை வென்றதாக தெரிகிறது.[6] இந்த நிகழ்ச்சிகளில் இருந்து பதினாறாம் நூற்றாண்டு வரை இசுலாமியர்களுக்கு தமிழகத் தின் சில பகுதிகளில் அரசியல் பிடிப்பு இருந்து வந்த விவரமும், இத்தகைய தொரு குறுநிலக்கிழார் தான் பல்சந்தமாலையின் பாட்டுடைத் தலைவனாகிய கலுபா என்பதும், ஊகிக்க முடிகிறது. அத்துடன் இஸ்லாமிய முதல் தமிழ் இலக்கியமான "ஆயிரம் மசாலா" கி.பி.1572ல் அரங்கேற்றம் பெற்றதில் இருந்து தொடர்ந்து அடுத்து அடுத்து பல இஸ்லாமியத் தமிழ் இலக்கியங் கள் தமிழுக்கு கிடைத்துள்ளன.

மேலும், தமிழ் இலக்கியத்தில் "மாலை" என்ற பகுப்பைச் சேர்ந்த சிற்றிலக்கியம் எப்பொழுது படைக்கப்பட்டது என்ற ஆய்வையும் இங்கு மேற்கொள்ளுதல் பயனுடையதாக அமையும்

---

3. Arunachalam- History of Pearl Fishery In Tamil Coast p. 92, 94
4. M.L. James – The Book of Duarte Barbosa, (London) vol II p. p. 115 - 23
5. Krishnaswamy A.Dr -Tamil Country under Vijayamagar (1962) pp. 237–38
6. A. S. S. I vol· 4 No : 8 p : 59

என்பது உறுதி. முதல் முறையாகத் தமிழில் மாலை என்ற சிற்றிலக்கியம், பதினென் கீழ்க்கணக்கு நூலான ''திணைமாலை ஐம்பது''க்குப் பிறகு ஆறாவது நூற்றாண்டில் காரைக்கால் அம்மையாரது ''திருவிரட்டை மணி மாலையும்'' எட்டாவது நூற்றாண்டில் கபிலர் என்ற புலவரது ''மூத்த நாயனார் இரட்டை மணிமாலை'' ''சிவபெருமாள் திருவிரட்டை மணி மாலையும்'' பதினோராவது நூற்றாண்டில் நம்பி ஆண்டார் நம்பியின் ''திரு உலா மாலையும்'' வெளிவந்துள்ளன. இரண்டாவது குலோத்துங்கனைப் பற்றி பன்னிரண்டாவது நூற்றாண்டில் பெரும்புலவர் கூத்தர்பிரானால் ''பிள்ளைத்தமிழ் மாலையொன்று இயற்றப்பட்டதாகத் தெரிகிறது. (இந்த நூல் கிடைக்கவில்லை) அடுத்து, ''மாலைகள்'' இலக்கியங்கள் பதினைந்தாவது நூற்றாண்டில் தான் மிகுதியாகப் படைக்கப்பட்டுள்ளன. திருப்பனந்தான் திருமடத்தைச் சேர்ந்த அம்பலவாண தேசிகர் ''அதிசய மாலை''யையும், ''நமச்சிவாய மாலை''யையும் யாத்துள்ளனர். அடுத்து, வேதாந்த தேசிகரது, ''நவரத்தின மாலை'', ''திருச்சின்னமாலை'', என்பன அவை. மணவாள மாமுனிவரது ''உபதேச ரத்தினமாலை'' குகை நமச்சிவாயரது ''பரமரகசிய மாலை'' ஆகியவை பதினைந்தாம் நூற்றாண்டில் குமரகுருபரரது ''இரட்டை மணிமாலை'', ''சகல கலா வல்லிமாலை'', அழகிய சிற்றம்பலக் கவிராயரது ''தனசிங்கமாலை'' சிவப்பிரகாச சுவாமிகளது ''நால்வர் நான் மணிமாலை'', ''கைத்தல மாலை'' ''சோணசலமாலை'' முதலியன பதினாறாம் நூற்றாண்டைச் சேர்ந்தவை. இன்னும் பிற்காலத்தில் படைக்கப்பட்ட மாலைகள் பட்டியலை இங்கு குறிப்பிடுவது இயலாத காரியமாகும். காரணம், இஸ்லாமியப் புலவர்கள் மட்டும் இயற்றியுள்ள மாலைகளின் எண்ணிக்கையே இருநூறுக்கு மேற்பட்டவை ஆகும். இதனை இணைப்பு பட்டியலில் காண்க.

பதினாறாவது நூற்றாண்டில் இறுதியில் வாழ்ந்த இசுலாமியப் பெருமகனான் வண்ணப் பரிமள புலவர் அதிசய புராணம் என்ற ''ஆயிரம் மசாலா''வைப்படைத்து அளித்தார். அவரை அடுத்து ஆலிப்புலவரது ''மிஃராஜ் மாலை'', கனக கவிராயரது கனகாபிஷேக, மாலை, உமறுப்புலவரது ''சீறாப் புராணம்'', பனீஅகமது மரைக்காயரது ''சின்னச்சீறா'', போன்றவை தோன்றின. இவைகளுக்கு எல்லாம் முன்னோடி

யாக, பதினைந்து பதினாறாவது நூற்றாண்டில் பல்சந்த மாலை புனையப்பட்டு இருக்க வேண்டும் என்பதும் இலக்கிய வரலாற்று ஆய்வாளர்கள் ஏற்றுக் கொள்ளத்தக்க ஒருமித்த கருத்தாகும். ஏற்கனவே பௌத்த, சமண, சைவ, வைணவ நெறிகளை தமிழ் இலக்கிய வார்ப்புகளாக அழகுத்தமிழில் வடித்து தமிழுக்கு அணி சேர்த்து இருந்த அரிய பணியை, தமிழக இசுலாமியரும் இந்த நூற்றாண்டுகளில் இருந்து தொடர்ந்து வந்துள்ளனர். இதனால், இஸ்லாமிய நெறிகளைக் கூறும், நூற்றுக்கணக்கான சிற்றிலக்கியங்கள், பேரிலக்கியங்களை படைத்து இஸ்லாமியத் தமிழ் என்ற தனியொரு பகுப்பினையும் தமிழுக்குத் தந்துள்ளனர்.

இசுலாமியத் தமிழர் என்று தொகுத்து அழைக்கும் வகையில், மக்கட் பிரிவினராக அவர்கள் மாறியதும் அவர்களது வாய்மொழியான தமிழ்மொழி, தாய் மொழியாகியது. அதனைப் பயின்று பேசி, ஆய்ந்து அகம் மகிழ்ந்து கன்னித்தமிழில் கனிவுறும் காவியங்கள், புனைய வேண்டும் என்று வேட்கையும் அவர்கட்கு எழுந்தது. காரணம் அப்பொழுது காப்பியங்களும் சிற்றிலக்கியங்களும், தமிழில் படைக்கப்பட்டு அவை தமிழ் மக்களால் பெரிதும் உவந்து ஓதப்பட்டு வந்தன. இறை மணங்கமழும் தேவாரமும் திருப்பாசுரங்களும் இனிய இசையோடு முழங்கின. அவைகளைக் கேட்கும் பொழுதெல்லாம்' அவர்களுக்கு நபிமார்களது வாழ்வும், நபிகள் நாயகம் முகம்மது (ஸல்) அவர்கள் அருளிய உபதேசங்களும் (ஹதீஸ்களும்) அவர்களது நெஞ்சத்தை நெருடின. திருக்குர் ஆனும். தப்ஸீரும், ஹதிஸுூம் தாய்மொழியான தமிழில் இருந்தால் இதயத்திற்கு இன்னும் நெருக்கமாகவும் இதமாகவும் இருக்கும் என்ற எண்ணங்கள் அவர்களிடம் இழையோடின.

அதுவரை, அன்றாட வாழ்க்கையில் தொழுகை, பாராயணம், பிரார்த்தனை ஆகியவைகளுக்காக அரபு மொழியையும் திருக்குர்ஆனையும், ஆழமாகப் பயின்று வந்த இசுலாமியப் பெருமக்கள், தமிழ்மொழியின் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி, ஆகிய பகுப்புக்களுக்கான ஏடுகளையும் ஆர்வமுடன் படித்தனர். அதன் முடிவு, இசுலாம் எங்கள் வழி, இன்பத்தமிழ் எங்கள் மொழி என பெருமை கொள்ளும் வகையில் இலக்கியங்களைப் படைத்து தாய் மொழிக்கு அணிவித்து அழகு பார்த்தனர். சுவைத்துச் சுவைத்து இன்ப சுகம் கண்டனர். இசுலாத்

தின் இலக்கான ஏகத்துவத்தை முழக்கமிடும் படைப்புகளாக. இறைத்தூதர்கள் தாவூது நபி, சுலைமான் நபி, இபுராகிம் நபி, மூஸாநபி, யூசுப்நபி, முகம்மதுநபி, ஆகியோர் பற்றிய புராணங்கள், அண்ணல் முகம்மது (அல்) அவர்களது வாழ்க்கை வரலாறு பற்றிய காவியங்கள், முகையதீன் அப்துல் காதர் ஜீலானி, ஏர்வாடி சுல்தான் சையது இபுராகீம் (அலி), ஆஜ்மீர் குவாஜாசாகிப் (வலி), நாகூர் சாகுல் ஹமீது ஆண்டகை – ஆகிய இறைநேசர் பற்றிய இலக்கியங்கள்; இன்னும் ஏராளமான சிற்றிலக்கியங்கள் – இவை போல்வன.

அந்தாதி, அம்மானை, அலங்காரம், ஏசல், கலம்பகம், கிஸ்ஸா, கும்மி, குறவஞ்சி, கீர்த்தனை, கோவை, ஞானம், பதம், பள்ளு, படைப்போர், பிள்ளைத்தமிழ், சதகம், சிந்து, மஞ்சரி, மசாலா, மாலைகள், முனாஜாத், நாமா, லாவணி, வண்ணம், வாழ்த்து என்றபல்வேறு சுவையும் துறையும் கொண்ட இலக்கிய வடிவங்கள் இசுலாமியத் தமிழ்ப் புலவர்களால் உருவாக்கப்பட்டன. இவைகளில் கிஸ்ஸா, முனாஜாத் மசாலா, நாமா, படைப்போர் என்பன முழுவதும் தமிழுக்குப் புதுமையான கலைவடிவங்கள் இலக்கியப்படைப்புகள். கன்னித்தமிழுக்கு இசுலாமியர் வழங்கிய காணிக்கைகளாக காலமெல்லாம் கட்டியங் கூறி நிற்கின்றன அவை. இத்தகைய எழில்மிகு இலக்கியங்களை இசுலாமியப் புலவர்கள் படைப்பதற்கு அவர்களது தமிழுணர்வு காரணமாக இருந்தாலும் அவைகளை அன்று ஆவலுடன் ஏற்றுக் கொள்வதற்கு, அனைத்து இசுலாமியர் மட்டுமல்லாமல், அன்றைய தமிழ் கூறும் நல்லுலகம் முழுவதுமே முனைந்து நின்றது. இல்லையெனில் இத்துணை இலக்கியங்கள் தமிழக இலக்கிய வரலாற்றின் அடுத்தடுத்து தலையெடுத்து இருக்கமுடியாது. அதிலும் குறிப்பாக வடுகர்களது ஆட்சியில் வடமொழியும், தெலுங்கும், அரசியல் ஆதரவு பெற்ற அரசு மொழியான பேறு பெற்ற நிலையில், தமிழுக்கு இவ்வளவு சிறப்பா? அதிலும் தமிழ் இலக்கிய உலகிற்கு புதியவர்களான தமிழக இஸ்லாமியப்புலவர்களால் இதற்குச் சான்றாக இரண்டு வரலாற்று நிகழ்வுகளை இங்கு குறிப்பிடுவது மிகவும் பொருத்தமாக இருக்கும். நமக்கு கிடைத்துள்ள இஸ்லாமிய இலக்கியங்களில் தொன்மையாகக் கருதப்படும் **''ஆயிரம் மஸாலா''** என்ற அரிய நூல் மதுரையில் இருந்த தமிழ்ச் சங்கத்தினர் முன் கி.பி. 1572ல் அரங்கேற்றம் பெற்றுள்ளது. இதனை அந்நூலாசிரியரது பாயிரம்,

''அந்தமுறு மதுரைதனில் செந்தமிழோர''
சங்கத்தில் அரங்கம் ஏற்றி ———''

என அறிவிக்கின்றது. மற்றொரு நிகழ்ச்சி இந்நூலை அடுத்து இஸ்லாமிய தமிழ் உலகிற்கு கிடைத்த இணையற்ற இலக்கியக் கொடை, ஆலிப்புலவரது மிஹ்ராஜ் மாலையாகும். இதனைப் புனைந்த செவ்வல் மாநகரின் செந்தமிழ்ப் புலவர் இஸ்லாமியர் கள் மிகுதியாக வதியும் கோட்டாறு நகரில் அரங்கேற்றுவதற்கு ஆசைப்பட்டார். அதற்கான முயற்சிகளில் ஈடுபட்டார். என்றா லும் அன்றைய நிலையில் இஸ்லாமியருக்கு இலக்கியப் படைப்பு ஒன்றின் அரங்கேற்றம் என்பது அவர்களுக்கு முற்றும் புதுமை யான செயலாக இருந்தது. அதனால் அம்முயற்சியில் ஈடுபாடும் இணக்கமும் இல்லாது இஸ்லாமியர் காணப்பட்டனர். என்றாலும் அதே நகரில் வாழ்ந்த இந்து கைக்கோளர் தலைவரான பாவாடைச் செட்டியார் என்ற பைந்தமிழ் ஆர்வலரது முயற் சியினால் கி.பி. 1590ல் கோட்டாறு கைக்கோளர் கூடிய சபை யில் சிறப்பாக அரங்கேற்றம் பெற்றது. இந்நிகழ்ச்சிகளை இன்றும் நினைக்கும் பொழுது நெஞ்சமெல்லாம் தமிழ் போல இனிக்கின்றது. தாய்மொழியான தமிழ், சாதி, இனம், மதம் ஆகிய குறுக்கு கோடுகளைக் கடந்து நாயக மொழியாக விளங்கி வந்துள்ளதை இந்த நிகழ்ச்சிகள் நினைவூட்டுகின்றன. திறமான புலமையெனில் தமிழோர் பாராட்டி பெருமை செய்தல் இயல்புதானே.

''இதன்னை மதுரைப் பல்கலைக் கழகப் பேராசிரியர் ஒருவர் தமிழ்நாட்டு முஸ்லீம்கள் அரபு மொழியில் பயிற்சி பெற்றார் அல்லர், அறபு எழுத்துக்களை வாசிக்கவே அறிந்து இருந்தனர். இவர்களிடையே சமயப் பற்றை உண்டாக்கும் பொருட்டு இவர்க ளுக்கு இலகுவில் விளங்கக்கூடிய தமிழ்மொழியில் நூல்கள் எழுத வேண்டி நேர்ந்தது. எனவே இசுலாமியக் கோட்பாடுகளை அடிப்படையாகக் கொண்ட தமிழ் நூல்கள், தமிழ் நாட்டு முஸ் லீம்களுக்கு பயன்படக்கூடியு முறையில் இயற்றப்பட்டன. இந் நூல்கள் பெரும்பாலும் அரபு மொழியில் உள்ள இசுலாமிய முதல் நூல்களையே பின்பற்றி இயற்றப்பட்டன'' என பிறி தொரு காரணத்தையும் குறிப்பிட்டுள்ளார்.

---

1. ஜான் சாமுவேல் – பண்பாட்டுக் கலப்பும் இலக்கிய ஒருமை யும் (1986) பக் : 104

ஆனால் இது தொடக்கநிலை. பின்னர் அரேபியர்களுக்கும் தமிழ்மக்களுக்கும் ஏற்பட்டு இருந்த கலாச்சார வணிகக் கலப்பால், மொழிநிலையிலும், இலக்கிய நிலையிலும், தமிழ்ச்சமுதாயம், பல புதிய கலாச்சாரக் கூறுகளைத் தன்னுள் ஐக்கியப்படுத்திக்கொண்டது. அரபியர்கள் பரப்பிய இசுலாமிய சமயம் பன்னிரண்டாம் நூற்றாண்டு முதல், மெல்ல மெல்ல தமிழ்ச் சமுதாயத்தில் தங்கள் சுவடுகளைப் பதித்து வந்தது. ——— இசுலாமிய கலாச்சாரப் பாதிப்பால், தமிழ் இசுலாமியப் பண்பாட்டின் ஒருசில இணைப்பாலும், பல இசுலாமியத் தமிழ் இலக்கியங்கள் தமிழ் மண்ணில் பிறப்பெடுக்கத் தொடங்கின. . . ." என வரைந்துள்ளார். காரணங்கள் எதுவானாலும் கன்னித் தமிழுக்கு புனையப்பட்டுள்ள இஸ்லாமியரது இலக்கியத் தொண்டு என்ற அழகுத் தோரணங்கள் எண்ணிறந்தன என்பது வரலாறு.

இவைதவிர, தங்களது மூதாதையரது இலக்கியக் கருவூலங்களை மறுத்து, ஊமையராய், குருடர்களாய், செவிடர்களாய் தமிழ் மக்கள் வாழ்ந்து வந்த அன்னியச் சூழ்நிலையில், இசுலாமியத் தமிழ்ப்புலவர்கள், தங்களது, தேர்ந்த மொழியாற்றலை, தெளிந்த சமய உணர்வுகளை வெளியிடுவதற்கு மட்டுமல்லாமல் தமிழ்மக்கள் அனைவரது தளர்ந்த உள்ளங்களில் தமிழ்ப்பற்றை ஊட்டி, உயிர்ப்பிக்க வேண்டும் என்ற உன்னத நோக்கிலும் உந்துதலிலும் இந்த இலக்கியங்களை அவர்கள் படைத்துள்ளனர். தொட்டாலே கைமணக்கும் தூய தமிழ்ப் பாக்களால் தொடுக்கப்பட்ட அவைகளில் பல, காலத்திற்கு எட்டாமலே மறைந்து விட்டன.

இசுலாமியத் தமிழ்ப்புலவர்கள் தங்களது இலக்கியங்களில், தாங்கள் உணர்த்தப்போகும் செய்திகளுக்கு அரபிய, பாரசீக, துருக்கி, உருது சொற்களைக் கொணர்ந்து, தமிழ்மொழியின் யாப்பிற்கு இயைந்தவாறு முழுக்க முழுக்க அதே சொற்களை உரிய பொருள் சிதைவிருமல் இருப்பதற்கு அப்படியே

---

சென்னை உலக தமிழாராய்ச்சி நிறுவனம் – இஸ்லாமும் இன்பத்தமிழும் (1976) பக் : 19.

கையாண்டு இருக்கின்றனர். சில சமயங்களில் சிறு மாறுதல்களுடனும், அவைகளைப் புகுத்தி இருப்பதை பல இலக்கியங்களில் காணக்கிடக்கின்றன.

**அசர், பஜர், லுஹற் :-** பாரசீக சொற்கள்

',பொருளில் அசர் லுகர் பஜறுளவும் பரிபூரணமாய் –
– ஞானமணிமாலை

அத்தஹிய்யாத் – பாரசீக சொல்

''**அத்தகி யாத்தி** ஆர்ந்திரு பொருள்கான்
– மி..றாசுமாலை பாடல் 593

**அமான்** – பாரசீக சொல்தமிழில் அம்சாரியை பெற்று ''அமானம்'' ஆகியுள்ளது.

''கன்திரு. மகனாக கவிதை உள்ளிடத்து அமானம்
– முகையதீன் புராணம் – பாடல் 10:23

**ஹாஸிம்** – அரபி சொல் தமிழில் ''ஆசிம்'' என திரிபு பெற்றுள்ளது.

''நிலமிகை **ஆசிம்** குலம்பெயர் ஓங்கு...''
– சீறாப்புராணம் – பாடல் 687

**இஜ்ஜத்** – அரபி சொல்

''அரத்தொடும் **இஜ்ஜத்தாம்** எனப்பகர்ந்தனர்
– முகியத்தீன் புராணம் - பாடல் 44:32

**வலிமா** – அரபி சொல் தமிழில் ஒலிமா என திரிபு பெற்றுள்ளது.

''வந்தவர் விருப்பிறண்ணும் வகை **ஒலிமா** வும் ஈந்தார்
– நாகூர் புராணம் - பாடல் 8:122

**ஹதிஸ்** – அரபி சொல் தமிழில் ''கதிது'' என திரிபு பெற்றுள்ளது.

''சொல்லரும் புகழ் தூதர் **கதீதுகள்**
சின்னச்சீறா – பாடல்: 34:155

**குறைஷ்** – அரபி சொல்

''**குறைசி** யப் குலத்தொரு மதனை – சீறாப்புராணம்
– பாடல் 4:63

**ஸக்காத்** – பார்சி சொல்

''பரிகடனென்றும் **சக்காத்துப்** பொருளலால்
– குதுபுநாயம் – பாடல்:243

குத்துபா – பார்சி சொல்

''சொல்லிய வணக்கத்திற்குரிய **கொத்துபா** பள்ளி....

– புதுகுஷ்ஷாம். பாடல். 47 : 49

**தஸ்பீ** – அரபி சொல்

''நிறத்தகு மனியின் செய்த நெடுந் தசுபீகு தன்னை

முகியுத்தீன் புராணம் – பாடல். 11 : 41

இவை போன்ற பிறமொழிச் சொற்கள் ஏற்கெனவே தமிழ் வழக்கில் இருந்த காரணத்தாலும், அவைகளை அவர்கள் நன்கு புரிந்து கொள்ள இயலும் என்ற காரணத்தினாலும், இசுலாமியத்தமிழ்ப் புலவர்கள் இத்தகு அரபி, பாரசீக சொற்களை சரளமாக பயன்படுத்தி உள்ளனர்.

''அள்ளல **உஹதாக** நின்றமரம்
ஆதி **ரகுமத்தாய்ப்** பூத்துப் பூத்து
வல்லற் கொடியாகப் படர்ந்து காய்த்து
பகுதி **அஹதாகக்** காலியாமே
சொல்லத் தகுமல்லல இப்பொருளை
சுருட்டி மறைக்கின்றேன் **ஷரகுக்காக**
எல்லை யறிந் துன்னை வணங்க வல்லவர்க்கு
இரங்கி இருப்போனே துணை செய்வாயே''

– தக்கலை பீர் முகமது (வலி)

''நல்ல **ஷரிஅத்து** வித்தாச்சுது
நலமாம் **தரீக்கத்து** மரமாச்சுது
எல்லை **ஹ்கீக்கத்து** பூவாச்சுது
இலங்கும் கனியாச்சு **ம.ஃரிபத்து''**

- நூகுலெப்பை ஆலிம்

இன்னும் ஆர்வம் மிகுதியாக அரபிக் கசீத்தாக்களை அப்படியே தமிழ்ப்பாடலைப் போன்றே பாடிப்படைத்து மகிழ்ந்த புலவர்களும் உண்டு.

மேலும் அரபி கஸீதாக்களை அப்படியே அழகும் பொருளும் வடிவும் வழக்கும் மாறாமல், தமிழில் வடித்த செய்திகளும் உண்டு. பூஸரி (ரஹ்) அவர்களது புர்தாஷரிபு அரபி பகுதி,

''கஸ்ஸஹ்ரி/ ∴ பீதர ∴ பின்/வல்பத்ரி/∴பீ ஷர∴ பின்
வல்பஹ்ரி/ ∴ பீகரயின் / வத்தஹ்ரி/ ∴ பீ ஹிமரி.''

நமது அருமைத் தமிழில்—அதே கண்ணி,

''மலர் போல்வார் மென்மையிலே மதிபோல்வார் மேன்மையிலே
அலை போல்வார் ஈகையிலே ஆண்மையினிற் காலமொப்பார்''

மதுரை—காதிறு முகையதீன் மரைக்காயர்

என தூய தமிழ்ச் சரமாகத் தொடுக்கப்பட்டுள்ளது.

இதனைப் போன்றே உருதுமொழி'' கவிஞர்களது ''கஜல்களும்' தமிழ்மொழிக் கவிகளாக இசுலாமியப் புலவர்களால் ஏற்றம்பெற்றுள்ளன. இத்தகைய மொழிக்கலப்பால் இசுலாம்வளர்ந்தது. இனிய தமிழ் இலக்கியங்கள் பெருகின. மேலும், இலக்கியத்தமிழ் பயன்பெற்றதுடன் இயல் தமிழும் சொல் வளம் பெற்றது.

இசுலாமியப் புலவர்வழி நின்று, தமிழக இசுலாமியர், தங்களது அன்றாட வாழ்க்கையில் ஏராளமான அரபி, பார்சி, துருக்கி, உருதுச் சொற்களைப் பயன்படுத்தினர். இன்றும் பயன்படுத்தி வருகின்றனர். அவைகளில் பட்டியல்கள் இணைப்பில் கொடுக்கப்பட்டுள்ளன. அத்துடன் அவர்களது மொழி வழக்கில் இனிய தூய தமிழ்ச் சொற்களும் இருந்து வருவது பெருமைப் படத்தக்கதாக உள்ளது. தமிழக இசுலாமிய மக்களது இந்த நற்பணியை, பெருமையுடன் பாடுகிறார் ஒரு புலவர்.

பாத்திரத்தை ஏனம் என்போம்
பழையதுவை நீர்ச்சோறு என்போம்
ஆத்திரமாய், மொழி குழம்பை
அழகாக ஆணம் என்போம்
சொத்தை யுரை பிறர் சொல்லும்
சாதத்தை சோறு என்போம்
எத்தனையோ தமிழ் முஸ்லீம்
எங்களுயிர்த் தமிழ் வழக்கே!

நாகூர் புலவர்—ஆபிதீன்

இன்னும் இவைபோல, தொழுகை, நாச்சியார், பதியாறுதல், வெள்ளாட்டி, குடிப்பு, பெண்டுகள், நடையன், நோவு போன்ற தனித்தமிழ்ச் சொற்களும் தமிழக இசுலாமியரது வழக்கில் இன்றும் இருந்து வருவது தமிழ் மொழிக்கு பெருமை சேர்ப்பதாகும்.

# 15

## வரலாறு தொடருகிறது

வரலாறு என்பது வற்றாத வளமான ஜீவநதி. அதன் போக்கில், வளைவும், வீழ்வும், விரைவும், இயல்பும் காணப்படலாம். ஆனால் அதன் இலக்கு முன்னோக்கி ஒடிக் கொண்டே இருப்பதாகும். தமிழக இசுலாமியர்களது வரலாறும் அந்த நிரந்தர நியதிக்கு விலக்கானதல்ல. தமிழ்ச் சமுதாயத்தின் பெருமைக்குரிய பங்குதாரர்களாகிய அவர்களது நிலையில் இழைவும் குழைவும் ஏற்பட்டுள்ளது. இறையுணர்வு விஞ்சிய சமயச்சான்றோர்களாக வளமெல்லாம் குவித்த வணிகவேந்தர்களாக, அறிவார்ந்த ஆட்சியாளராக, ஆற்றல் மிகுந்த போர் மறவர்களாக விளங்கியது எல்லாம் அவர்களுக்கு கடந்தகாலமாகிவிட்டது. சமூக கல்வி பொருளாதார துறைகளில் பின்னடைந்தவர்களாக, நலிவும் மெலிவும் பெற்றவர்களாக வாழ்ந்து வருவது நிகழ்காலமாக உள்ளது.// ஒரு சில இசுலாமியர் தங்களது தொழில் திறமையினாலும் அரசியல் செல்வாக்கினாலும், தோல், தோல் பொருட்கள்' விவசாய விளைபொருட்கள், வெளிநாட்டுவியாபாரத் தொடர்புகள் காரணமாக சிறிது வசதியுடன் வாழ்ந்து வருகின்றனர். ஆனால், தமிழக இசுலாமியர் என்ற பெரும் அமைப்பில் இவர்கள் மிக மிகச் சிறு பான்மையினராக இருப்பதால் அவர்களது முன்னேற்றமும் வளர்ச்சியும் தமிழக இசுலாமியர் எய்திய ஏற்றம் என மொத்தத்தில் கொள்வது இயலாததொன்று. மாறாக மனத்தை நெருடக்கூடிய வகையில், ஆயிரக்கணக்கான தமிழக இசுலாமியர், அரபுநாடுகளிலும், மலேசியா; சிங்கப்பூர், புருனை நாடுகளிலும்'' "வயிறு வளர்ப்பதற்காக'' தொழில் செய்து வருகின்றனர். அவர்களது உழைப்பும் வாழ்வும் அந்தந்த நாட்டின் முன்னேற்றத்திற்கும் மலர்ச்சிக்கும் பயன்பட்டுவருகின்றன. இவர்களால் பிறந்த மண்ணிற்கு பெருமை சேர்ப்பது எங்ஙனம்? அவர்களது உழைப்பையும் ஊதியத்தையும் நம்பி, தமிழ் நாட்டில்

வாழ்கின்ற அவர்களது உற்றார் உறவினர்கள் தன்னிச்சையான முறையில் கல்வியும், தொழில் முன்னேற்றமும் காண்பது எப்பொழுது? அறிவும் ஆற்றலும் பெற்றுள்ள ஏனைய சிறுபான்மை பெரும்பான்மை மக்களுடன் இவர்களும் இணைந்து தேசிய உணர்வும் ஒருமைப்பாடும் பெறுவது எவ்விதம்?......

தமிழக இஸ்லாமியரைப் பற்றிய இக்கட்டான இந்த வினாக்களுக்கு விடைகள் வழங்க வேண்டியது எதிர்காலம். என்றாலும்; ''பழங்கால மேகங்கள் வருங்கால மழை படைக்கும்'' என்று கவிஞர் ஒருவரது வாக்கிற்கிணங்க பழமையில் நனைத்தால்தான் புதுமைகள் புலப்படும், வரலாற்று உணர்வும் பழமை பற்றிய சிந்தனைகளும் அவைகளை ஊக்குவிக்கும் என்ற கருத்தில், போக்கில் தமிழக இசுலாமியரை பல புதிய வரலாற்று, இலக்கியத் தடயங்களுடன் எடுத்துக் காட்டுவது இந்த தொகுப்பு. இது ஒரு தொடக்க முயற்சி.

எனினும் வரலாறு தொடர்கிறது. ... ...

## தமிழக இசுலாமியரது வழக்காறுகள்
## தமிழ்ச் சொற்கள்

அத்தா
அம்மா
அம்பா
அடுப்பங்கரை
அலைவாய்க்கரை
அலைவாய்க்கரைவாடி
அசதி
அசமந்தம்
அடுக்களை
அடை
அப்பம்
ஆப்பம்
ஆவத்தி
ஆணம்
இசைவு
இறைச்சி
இரணம்
ஈனம்
ஈனத்தனம்
ஈறு
ஈறுகோலி
உறக்கம்
உண்ணுதல்
உவப்பு
உறி
எழுவான்
ஏலம்
என்னைகுத்தி
ஒழுக்கம்
ஒச்சம்
ஓதுதல், ஓதிமுடித்தல்
ஓங்காரித்தல்
கஞ்சி

கசம்
கரண்டி
கரண்டகம்
கரைச்சல்
களரி
கண் எச்சில்
கண்ணுக்கரண்டி
கண்ணேறு
காவடி
கொல்லை
சங்கை
சம்பல்
சிரிப்பாணி
சீரணி, சீக்கு
சுளுவாக
சுண்டல்
சேர்மானம்
சோறு
தலைக்கணம்
தட்டுக்கெட்டு
தறுதலை
தடா
திராணி
துலக்கம்
துலாம்பரம்
துவையல்
துணைக்கறி
தொழுகை
தொழுகைப்பள்ளி
நடையன்
நன்மாராயம்
நாசுவன்
நாச்சியார்

நொந்து கொள்ளல்
நொந்து போதல்
நோக்காடு
நோவு
நிரப்பம்
நெய்ச்சோறு
நேர்ச்சை
நொம்பலம்
நோன்பு
நோன்புக்கஞ்சி
பசியாறுதல்
பதனம்
பள்ளி
பருப்பு ஆனம்
படுவான்
படிக்கம்
பிள்ளை
பிந்தி
பிள்ளைகுட்டி
பிழை
புட்டகம்
புளியாணம்
புழக்கம்
புழுக்கை
பொரிக்கன் சட்டி
மச்சு
மருதாணி
மன்றாட்டம்
மாங்கலியம்
மாங்கலிய சூழ்
மாய்ச்சல்
மாறுபாடு
முக்குழி
முந்தி
முருக்கு
முற்றம்
மிளகு தண்ணி
மிடா
வட்டா
வியஞ்சனம்
வெள்ளாடி
வேசை

